கழக வெளியீடு—௨௩௧

சங்க இலக்கிய

# இன்கவித் திரட்டு

[முதற் பாகம்]



கழகத் தமிழ்ப் புலவர்

திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்

(இளவழகனார்)

எழுதிய

விளக்கவுரையுடன்



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்

திருநெல்வேலி :: சென்னை

# பதிப்புரை

தமிழ் மொழி, தமிழக கொள்கை, தமிழ நாகரிகம், தமிழ் நாடு, தமிழ மன்பதை எனபவை நெடுங்காலமாக இந் நிலவுலகத்தில் நிலை பெற்றிருப்பவை இவை, ஒரு பெருந்த ஆலமரத்தின அடிமரம் போலப் பலப் பல விழுதுகளுடன பரநதகனறு ஆழமாய வலிவாய் வேரூன்றி நிறக, ஏனைய நாகரிகங்கள் மன்பதைகள முதலியன அதன் கிளைகளும கொமபுகளும வளாகளுமாய உலகத்தின நாலா பக்கங் களிலும பரமபித் தழைதது வளாநதோடியிருக்கினறன என்பது வரலாற்றாசிரியாகள் கருதது இனறும, இவை, உலக மககட்கு உயாநத நாகரிகம வழங்கிககொணடிருககினறன எனபதற்குச், சிறநத செநதமிழப் பொனமொழிகளான திருக்குறளும தொல்காப் பியமுமே தகக சானறுகளாகுமெனறும அறிஞாகள் கருதுகினறாாகள்

இங்ஙனம உலகம உயய இருபெருந தமிழ முன நூலகளைத் தமிழகம முதன முதலாக வழங்க வேணடுமானால், அதறகுத தமிழ் நாகரிகம எவவளவு பதமான செவவியுடையதாதல வேணடும. தமிழகததுககு அச செவவி எங்ஙனம அமைநதது? ஒருநாள் இரு நாளில அமைவதாமோ அது! தொலகாபபியா காலததுககும முனனால, ஆயிரம ஆயிரம ஆணடுகளாக, உலக வழககு நூல வழககு எனனும இருவகை வழககுகளையுந தழுவி, வளாநது வளாநது சிறந தோங்கிய புலனெறி வழககுகள பலவறறாலுமனறோ, அச செவ்வி பணபட்டு உருவாகியது! அப பணபட்ட புலனெறி வழககுகளை, மணிகளில ஒளிபோல, அககாலங்களில ஏறறு விளங்கியிருநதவை யாவை? அவையே, சங்க இலக்கியங்கள எனபது

இங்கே, 'சங்க இலககியஙகள' எனறது, தலைசசஙக காலத் துககும முனனிருநது தோனறிவநத எலலாத தீந தமிழ நூலகளையும ஒருங்கு நினைநதேயாம அததகைய மாபெருந தமிழநூறகடலகள் அரிதின ஈனற மாமணிகளே முறகாட்டிய திருககுறளும தொல காபபியமுமாகும பாநது பட்ட அந நூறகடலகள் இலலையாயின், தமிழ நாகரிகமெனபதுதான ஏது! இபபோது கிடைததிருககும கடைசசங்க நூலகளான பத்துபபாட்டு எட்டுத்தொகை முதலாயின, இனறு அந நூறகடலகளுககு அடையாளமாய நமபால உள்ளன. இவையே, இபபோது 'சங்க இலககியஙகள்' எனறு சொல்லி மகிழததககனவாய நிலைபெறறிருககினறன

எனவே இக கடைசசங்க இலககியஙகள், இங்ஙனம பலலாயிரம் பல்லாயிரம ஆணடுகளாகத தொடாபுபட்டு அவ்வபபோதும பண்

பட்டுப் பண்பட்டுச் செவ்வியுற்று வந்த உயர்ந்த புலனெறி வழக்கமும் நாகரிகமும் ஒருங்கு பொதிந்து நிற்பனவா யிருத்தலின், இவை இன்று தமிழர் வாழ்வுக் களஞ்சியமாய் விளங்காநிற்கின்றன! செவ்வியமைந்த வாழ்வின் குறிப்புக்களை விரும்புவோரெவரும், இச் சங்க இலக்கியங்களின் துணை பெறவேண்டுவது கட்டாயமாகும் அப்போதுதான், திருக்குறளும் தொல்காப்பியமும்போல இன்னும் பல தெய்வத் திருநூல்களுந் தோன்றுவதற்குக் காரணமான உயர்ந்த வாழ்க்கைச் செவ்வியை இந்நாடு மீண்டும் அடைதல் இயலும். நாட்டில் ஒருவரிருவர் அடைந்திருப்பதுமட்டும் போதாது நாடெங்கும் வாழ்வு பெருகிநிற்கும்போதுதான், அருஞ்செயல்கள் தோன்றுதற்குரிய செவ்வி சிலரிடம் முதிர்ச்சி பெறுதல் கூடும்.

சங்க இலக்கியங்கள், தூய சான்றோர்களின் திருவுள்ளப் பிழிவுகளாகும் அவை வாழ்வின் ஊற்றுகள், வைப்பின் நிதியங்கள், மிக்க பெருந்தன்மை வாய்ந்தவை; வஞ்சியாமலும் அஞ்சாமலும் அறமே உரைப்பவை பொய்ம்மை நுவன்றால், வழிவழியாகப் பின்வரும் மக்கட்கு அதனால் நெடுக வாழ்க்கை நலம் கெடும் என்று கருதித், தம் பொறுப்புணர்ந்து எந்நிலையிலும் மெய்ம்மையே நுவலும் கடப்பாடுடையவை. மேலும், கருத்துக்களையே முதன்மையாகக் கொண்டு, அக் கருத்துக்களுக்கேற்ப அமையும் பொருந்திய சொற்களையே சொற்சுவை யுள்ளனவாக அவை கருதுகின்றன. கருத்து நுணுக்கங்களுக்குச் சங்க இலக்கியங்களையே கொள்கலம் என்னலாம். 'தமிழ்க் கடல்' என்று சொன்னால், அவற்றிற்கு அது தகும். எத்தகைய மெய்யுணர்வுக் கருத்துக்களும் (Philosophical) சங்க இலக்கியங்களில் இடம்பெற்றிருக்கின்றன. வாழ்வின் பலவேறு கிளைகட்கும் இங்ஙனம் அவை உயிர்ப்புத் தருவனவாயிருக்கின்றன. இந் நாகரிகச் செவ்வியினால், தமிழ்மொழி பெற்ற அழகுகள் அளவில்லாதனவாகும் சுருங்கச் சொன்னால், மக்கள் மக்களாக வாழ்வதற்குத் தமிழ்மொழியிலுள்ள சங்க இலக்கியங்களின் துணை மிகவும் இன்றியமையாததென்று திட்டமாய்க் கூறலாம்.

இவ்வளவு அருமையாகச், செவ்வியமைந்து விளங்கிய புலனெறி வழக்கும் நாகரிகமும், சிலப்பதிகார காலத்துக்குப் பின், அயலவர் சேர்க்கை, சமயச் சச்சரவு, நாட்டுக் குழப்பம், வெளியார் படையெடுப்பு முதலிய பல காரணங்களால் ஓரளவு நிலைமாறி நின்றன. அதனால், தமிழ்மொழியின் நிலைமையும் சிறிது வேறுபடத் துவங்கிற்று. துவங்கவே, 'சங்கத் தமிழ்' என்பது எளிதில் விளங்காததோர் அருந்தமிழ் எனவுங் கருதநேர்ந்தது. இதனால், அதன் பயிற்சியும் இடையே அருகியது.

நல்ல காலமாகச், சென்ற நூற்றாண்டிலிருந்து **சங்கத் தமிழ்** சிறிது சிறிதாக விளக்கமுற்று வருகின்றது. ஏறக்குறைய ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகளாக அயலவர் புதையிருளில் ஒளி மழுங்கி நின்ற சங்கத் தமிழ், இதுகாறும் உயிர்ப்போடிருந்து, இப்போது அவ் விருளை இடையறுத்துக்கொண்டு ஒளி விளங்கி யெழுகின்ற தென்றால், அதற்கு எவ்வளவு உயிர்ப்பாற்றல் இருக்க வேண்டும்! அத்தகைய என்றுமுள தென்றமிழைத் தமிழ்மக்கள் இனி நன்கு பயின்று கொண்டு, தமக்கு இயல்பான முன் மாட்சிமைகளை அடைதல் இன்றியமையாததன்றோ? இந்த நேரம் பொன் போன்ற நேரம்; தமிழர்கள் வீறியெழவேண்டிய காலம் இது. மேலும், இப்போது, சங்க இலக்கியங்கள் கற்றற்கு வாய்ப்புக்களும் இருக்கின்றன.

ஆயினும், சங்க இலக்கியங்களின் மாட்சிமையும் சுவையும் பலர்க்கும் விளக்கமாகத் தெரிவதற்கேற்ற வாயில்கள், இன்னும் பலப்பல தமிழகத்தில் அமைதல்வேண்டும்.

ஆகவே, அவ் விலக்கியங்களிலிருந்து ஒரு நூறு பாட்டுகள் இப்போது திரட்டியெடுத்துச், சிறிது கற்றாரும் பொதுவாக அவற்றின் அருமை பெருமைகளை எளிதில் தெரிந்துகொள்ளும் வகையில் தெளிவான விளக்கங்கள் எழுதிச், **சங்க இலக்கிய இன்கவித்திரட்டு** என்னும் பெயருடன் ஒரு திரட்டு நூல் வெளியிடுவது, அவ் வாயில்களுள் ஒன்றாய உதவும் எனக் கருதி, இதனை வெளியிடுகின்றோம்.

இவ் விரண்டாம் பதிப்பில் ஒவ்வொரு செய்யுளின் தலைப்பிலும் அச் செய்யுளைப்பற்றிய கருத்து விளக்கம் சுருக்கமாக எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

தெரிந்தெடுத்த இன்கவிகளைத் **திரு நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்** பார்வையிட்டு ஒழுங்கு செய்து உதவினார்கள். அவர்கள் செய்த காலத்துதவிக்குக் கழகம் பெரிதுங் கடமைப்பட்டிருக்கின்றது.

விளக்கங்கள், கழகத் தமிழ்ப்புலவர் **திரு. இளவழகனார்** எழுதியவை.

அன்பர்கள் இந் நூலைத் தமிழகமெங்கும் பெருவாரியாகப் பரவச் செய்து, தமிழ் நாகரிகச் செவ்வியை மேலு மேலும் விளங்கச் செய்ய வேண்டுமென்று பெரிதும் விரும்புகின்றோம்.

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# பொருளடக்கம்

# நூல்களின் பெயர்கள் முதலியன

## I. பத்துப்பாட்டு :

| | செய்யுள அலலது வரிகளின எண் | இநநூலின பக்க எண் |
|---|---|---|
| (1) திருமுருகாறறுப்படை | | |
| சேவடி படரும | ௬௨-௬ | ௫௬ |
| சீரைதைஇய | ௧௨௬-௩௭ | ௫௯ |
| இருமூனறெயதிய | ௧௭௭-௮௯ | ௬௧ |
| (2) முலலைபபாட்டு | | |
| பாவைவிளககின | ௮௫-௧௦௩ | ௬௫ |
| (3) பட்டினப்பாலை | | |
| கொலைகடிநதும | ௧௯௯-௨௧௨ | ௧௫௨ |

## II. எட்டுத்தொகை :

| | செய்யுள அலலது வரிகளின எண் | இநநூலின பக்க எண் |
|---|---|---|
| (1) நற்றிணை | | |
| நாடலசானறோா | ௩௨௭ | ௧௧௫ |
| (2) குறுநதொகை | | |
| நிலததினுமபெரிதே | ௩ | ௧௧௭ |
| அருளுமஅனபுமநீககித | ௨௦ | ௮ |
| யாயுமஞாயுமயாரா | ௪௦ | ௧௧௮ |
| காமமஒழிவதாயினும | ௪௨ | ௧௫௬ |
| செலவாரலலா | ௪௩ | ௧௨௦ |
| பூஇடைபபடினும | ௫௭ | ௧௫௭ |
| நிலநதொடடுப்புகாஅா | ௧௩௦ | ௧௨௨ |
| வினையேஆடவாககு | ௧௩௫ | ௧௦ |
| காமமகாமம நுணங்கிக | ௧௩௬ | ௧௨௩ |
| மெல்லியலரிவை | ௧௩௭ | ௧௫௯ |
| யாவதுமஅறிகிலா | ௧௫௨ | ௧௨௪ |
| முளிதயிாபிசைநத | ௧௬௭ | ௨௫ |
| செவ்வரைசசேககை | ௧௮௭ | ௧௮ |
| காமமகாமம நினைப்பின் | ௨௦௪ | ௧௨௯ |
| உள்ளதுசிதைப்போா | ௨௮௩ | ௬௮ |
| எழுதருமதியம | ௩௧௫ | ௧௨௭ |
| நிலம்புடைபெயரினும் | ௩௭௩ | ௧௨௮ |

*

| | செய்யுள் அல்லது வரிகளின் எண் | இந்நூலின் பக்க எண் |
|---|---|---|
| **(3) ஐங்குறுநூறு** | | |
| *வாழி ஆதன...பகைவர* | ௪ | ௨௭ |
| *வாழியாதன.. வேந்து* | ௬ | ௧௨௯ |
| *ஒண்டொடி அரிவை* | ௧௭௨ | ௧௩௧ |
| *நெய்தல் இருங்கழி* | ௧௮௪ | ௧௩௪ |
| *அன்னாய் வாழி வேண்டு* | ௨0௮ | ௨0 |
| *நறுவடி மாஅத்து* | ௨௧௩ | ௧௬0 |
| *சாரற் பலவின்* | ௨௧௪ | ௨௨ |
| *குன்றக் குறவன்* | ௨௫௧ | ௧௬௨ |
| *குரங்கின் தலைவன்* | ௨௭௫ | ௧௬௪ |
| *மந்திக் காதலன்* | ௨௭௬ | ௨௯ |
| *சிலம்பின் வெதிரத்து* | ௨௭௮ | ௧௩௫ |
| *உள்ளூர்த் தறகினிய* | ௩௫௬ | ௧௩௭ |
| *பாணர் முல்லைபாடச* | ௪0௮ | ௩0 |
| *புதல்வற் கவைஇயினன்* | ௪0௯ | ௩௩ |
| *நின்னே போலு மஞ்ஞை* | ௪௯௨ | ௧௩௮ |
| **(4) பதிற்றுப்பத்து** | | |
| *வாழ்க நின் வளனே* | ௩௭ | ௩௭ |
| *அட்டு ஆனானே குட்டுவன்* | ௪௭ | ௩௯ |
| **(5) பரிபாடல்** | | |
| *தீயினுள் தெறல் நீ* | ௩ : ௬௩-௭௬ | ௧ |
| *நின்குண மெதிர்கொண்டு* | ௫ : ௭௧-௮௧ | ௧௬௫ |
| *தண்டு தழுவாத* | ௧௧ : ௧0௬-௧௪ | ௧௪0 |
| *பிறந்த தமரின்* | ௧௯ : ௫௮-௬௬ | ௨௩௪ |
| **(6) கலித்தொகை** | | |
| *மரையா மரல் கவர* | ௬ | ௧௪௨ |
| *எறித்தரு கதிர் தாங்கி* | ௯ | ௧௫ |
| *சென்றோர் முகப்ப* | ௧௮ : ௫-௧௨ | ௧௬௭ |
| *கிழவர் இன்னோர்* | ௨௧ : ௧0-௪ | ௩ |
| *சிறுகுடியீரே சிறுகுடி* | ௩௯ : ௧௧-௪ | ௭0 |
| *பொதுமொழி பிறர்க்கு* | ௬௮ : ௧-௫ | ௨௧௫ |
| *ஆயமகனாயின்* | ௪0௭ : ௨0-௩ | ௧௬௯ |
| *அகன்ஞாலம் விளக்கும்* | ௧௧௯ | ௪ |
| *ஆற்றுதல் என்பது* | ௧௩௩ : ௬-௧௪ | ௭௧ |

| | செய்யுள் அல்லது வரிகளின் எண் | இந்நூலின் பக்க எண் |
|---|---|---|
| **(7) அகநானூறு** | | |
| யாயேகணணினும | ௧௨ | ௧௪௫ |
| சிறுகருமபிடவின் | ௩௪ | ௧௭௦ |
| நாளிடைபபடினஎன | ௧௧௨: ௯-௧௧ | ௧௭௪ |
| அறனகடைபபடாஅ | ௧௫௫: ௧-௬ | ௧௭௬ |
| ஆளவினைககெழுநத | ௩௩௯: ௬-௧௪ | ௧௪௮ |
| **(8) புறநானூறு** | | |
| வழிபடுவோரை | ௧௦ | ௪௧ |
| ஓஙகுமலைபபெருவில் | ௫௫ | ௪௩ |
| நகுதககனரேநாடுமீக | ௭௨ | ௯௫ |
| மெலலவநதுஎன | ௭௩ | ௯௮ |
| ஒருநாளசெலலலம | ௧௦௧ | ௧௭௮ |
| அளிதோதானேபாரியது | ௧௦௯ | ௧௦௧ |
| இமமைசசெயதது | ௧௩௪ | ௭௩ |
| அறுகுளததுகுததும | ௧௪௨ | ௧௦௫ |
| இரவலாபுரவலை | ௧௬௨ | ௧௮௧ |
| நினநயநதுஉறைநாக | ௧௬௩ | ௭௫ |
| எநதைவாழி ஆதனுஙக | ௧௭௫ | ௭௮ |
| உணடாலஅமம இவவுலகம் | ௧௮௨ | ௮௧ |
| உறறுழிஉதவியும | ௧௮௩ | ௪௭ |
| காயநெலஅறுததுக | ௧௮௪ | ௪௯ |
| நெல்லுமஉயிரனறே | ௧௮௬ | ௫௩ |
| நாடாகொனறோகாடா | ௧௮௭ | ௧௮௫ |
| படைபபுப பலபடைததுப | ௧௮௮ | ௩௫ |
| தெணகடலவளாகம | ௧௮௯ | ௧௮௬ |
| விளைபதசசீறிடமநோககி | ௧௯௦ | ௮௪ |
| யாணடுபலவாகநரையில | ௧௯௧ | ௮௭ |
| யாதுமஊரேயாவரும | ௧௯௨ | ௧௮௯ |
| ஓர் இலநெயதலகறஙக | ௧௯௪ | ௧௯௧ |
| டலசானறீரே . கயல்முள் | ௧௯௫ | ௧௯௪ |
| கழிநததுபொழிநதென | ௨௦௩ | ௧௯௬ |
| ஈஎன இரததல்இழிந | ௨௦௪ | ௨௦௨ |
| செயகுவஙகொல்லோநல் | ௨௧௪ | ௯௦ |
| பல்சானறீரே . செல்கெனச் | ௨௪௬ | ௨௦௫ |

| | செய்யுள் அல்லது வரிகளின் எண் | இந்நூலின் பக்க எண் |
|---|---|---|
| மீன்உண் கொக்கின் | ௨௭௭ | ௧௦௬ |
| நாம்பெழுந்தலறிய | ௨௭௮ | ௧௦௯ |
| கெடுக சிந்தை கடிந்திவள் | ௨௭௯ | ௧௧௦ |
| கடல்கிளர்ந்தன்ன கட்டூர் | ௨௯௫ | ௧௧௨ |
| ஈன்றுபுறந்தருதல்என்தலைக | ௩௧௨ | ௧௧௪ |
| உடையனாயின் உண்ணவும் | ௩௧௫ | ௯௫ |

## III. பதினெண்கீழ்க்கணக்கு :

### (1) ஐந்திணை ஐம்பது

| | | |
|---|---|---|
| குளிரும்பருவத்தே | ௩௦ | ௧௪௯ |
| சுனைவாய்ச்சிறுநீரை | ௩௮ | ௨௦௯ |
| கொண்கன்பிரிந்த | ௪௪ | ௧௫௧ |
| எக்கர் இடுமணல்மேல் | ௪௮ | ௧௨ |

### (2) ஐந்திணை எழுபது

| | | |
|---|---|---|
| மன்றப்பலவின் சுளைவிளை | ௪ | ௨௧௧ |
| கல்லோ புறவில் கவினிப | ௨௪ | ௭ |
| கண்ணுறு நெய்தல் | ௬௩ | ௧௩ |

### (3) திணைமொழியைம்பது

| | | |
|---|---|---|
| செந்தாமரைமலரும் | ௩௬ | ௯௩ |

### (4) திணைமாலைநூற்றைம்பது

| | | |
|---|---|---|
| கொல்லியல்வேழம்குயவரி | ௬௫ | ௨௩ |
| முருகுவாய்முட்டாழை | ௩௬ | ௨-௧௨ |

---

# சங்க இலக்கிய

# இன்கவித் திரட்டு

## (முதற் பாகம்)

---

## 1. இயற்கை நிலை

### இறைவன் இயல்பும் ஆட்சியும்

[இறைவன் இயல்பு மறத்தல் இயலாத சிறப்புடையது; அவன் எங்கும் இருக்கின்றான்; எல்லாமாய் இருக்கின்றான்; பயன்முகமான ஆற்றலெல்லாம் அவனுடையதே; அருள் குடையாக அறம் அதன் காம்பாக அவன் உலகத்தைக் காத்து வருகின்றான்.]

தீயினுள் தெறல்நீ பூவினுள் நாற்றம்நீ
கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மைநீ
அறத்தினுள் அன்புநீ மறத்தினுள் மைந்துநீ
வேதத்து மறைநீ பூதத்து முதலும்நீ
வெஞ்சுடர் ஒளியும்நீ திங்களுள் அளியும்நீ
அனைத்தும்நீ அனைத்தினுட் பொருளும்நீ ஆதலின்
உறைவும் உறைவதும் இலையே, உண்மையும்
மறவியில் சிறப்பின் மாயமா ரனையை;
முதன்முறை இடைமுறை கடைமுறை தொழிலின்
பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோ ரிலையே,
பறவாப் பூவைப் பூவி னோயே,
அருள்குடை யாக அறம்கோ லாக
இருநிழல் படாமை மூவே ழுலகமும்
ஒருநிழ லாக்கிய ஏமத்தை மாதோ.

—பரிபாடல்; ௩ : ௬௩—௭௬.

இறைவனை எங்கெங்கு என்னென்ன தன்மையாகக் காணலாம என்பதும் இபபாட்டில விளக்கப்படுகின்றன.

'நெருப்பில் வெமமையும், மலரில மணமும, கல்லில் மணியாந தன்மையும, சொலலில வாயமையியலபும, அறத தில் அன்பும, வீரததில வன்மையும, வேதததில் நுண் பொருளும, வான் முதலான ஐமபொருளகளுள வானமும், சூரியனில ஒளியும, திஙகளில குளிரசசியும இறைவனு வான.

இங்ஙனம் எல்லாப் பொருளகளின் தன்மைகளும் அவனுகவே இருக்கின்ருன்; அத தனமைகளின உட் பொருளும அவனுகவே இருககினருன். ஆதலால, தஙகு தல எனபதும தஙகுமிடம எனபதும் இனனவையே என்று திட்டமாக எடுததோதுதறகிலலை அவன இருக குமநிலைமை ஒரு மாயமாகவே இருக்கின்றது, ஆனுல, அது மறததலிலலாத சிறபபுடையதாக இருககினறது; அவன் அததகையவன

படைப்பு, அளிப்பு, அழிபபு எனனும மூவகைத தொழி லுட்பட்டு அவன் பிறவாத பிறப்பிலலை; ஆனுல, அவனைப் பிறப்பிததோருமிலலை.

அவனே, காயாமபூவின் நிறததைபபோல் நீலநிறத தோனுயிருககினருன.

அருள குடையாக அறம் அதன் காமபாக வேறெரு குடை நிழலுககும இடமிலலாதபடி மூவேழுலகமும் தன் ஒரு குடை நீழலிலேயே அடஙகிக காபபவனுயிருக கினருன' என்பது.

இறைவன் இருபபும ஆட்சியும இங்ஙனமிருக்கின் றன. உயிரகள் அநநிலைமைக கேறப, கணடும ஈடுபட்டும விளக்கமடைதல கடமை.

**குறிப்புரை** தெறல - வெமமை. நாறறம - மணம. மணி - மணியாந தனமை, எலலாம குணஙகளாக உரைபபதனுல இதனையும் மணியாந தனமை எனறு மணியின குணமாகவே உரைததுக

கொள்ளவேண்டும். வாய்மை - தீமையில்லாத தூயதன்மை. மறம் - வீரம். மறை - எளிதிற புலனாகாத நுணபொருள்கள். முதல் - ஏனைய பூதங்கள தோனறுவதறகுக காரணமான முதற் பூதப் பொருள். அது, வானம. வெம சுடா - வெப்பமான தீபபிழமபு; அது சூரியன. அளி - குளிரசசி. அனைததும - மேறசொனன எல்லாப பொருட்டனமைகளும. அனைததின உட்பொருள் எனறது, அபபொருட்டனமைகட்கெலலாங் காரணமான இறையியலபு. பறவாப பூ - காயாமபூ; இங்கே, அப பூவின நிறம ஏமததை - காவலையுடைமை (௧)

## பழவினைவழியே பொருள் சேரும்

[தககோரிடததில மட்டும சோவது பொருளின இயல்பனறு, ஏனென்றால, அது கருதியறியும அறிவுடைய பொருளனறு முன்னை நலவினையின ஆறறலில் அடங்கி அதனையுடையோரிடமே அது மேலுமேலுஞ் செனறு சேருமு]

கிழவர் இனனோர் என்னாது பொருளதான்
பழவினை மருங்கின் பெயர்புபெயர்பு உறையும;
அனன பொருளவயின பிரிவோய! நினனினறு
இமைப்புவரை வாழாள மடவோள
அமைககவின கொண்ட தோளிணை மறநதே.

—கலிததொகை, ௨௧ : ௧௦-௪.

"செலலும தான் சோவதறகுரிய நலலோர் இன்னோரே எனறு பாராமல, அவரவா பழவினையின் சார்பில் மீண்டு மீண்டும் செனறு தங்கும. பழவினை இருநதாற சிறிது முயறசியின அளவிலேயே பொருள கிடைககும; அங்ஙனங கிடைததறகுரிய பொருளின காரணமாக, நின்னை விட்டுக் கண்ணிமைப் பொழுதளவும வாழ மாட்டாதவளான இவ்விளையோளுடைய, மூங்கிலழகைக் கொண்ட தோளிணைகளை மறநது, நீ பிரிவோயா யிருக்கினறனை" எனபது இப் பாட்டின பொருள.

'பொருள் கிடைககும நலவினை இருந்தால நீ நின் துணைவியை நெடிது பிரியாமலேயே தேடலாம; பொருள் சோவதனாலேயே நலலோராயவிடுவ தென்பதுமிலலை'

என்பது கருத்து. பொருளின் இயல்பு இனைத்தென்பது இதனால் விளக்கமாகின்றது.

**குறிப்புரை:** *கிழவர் - உரியோர், நல்லோரிடம் செல்வம் சேராதால நல்ல துறைகளிற் பயனுகுமாதலின், செல்வம சேரதற்குரியோர் நல்லோர என்பது பெறபபடும். இன்னோர் - இப்படிப் பட்டவர் பழவினை மருங்கின - பழவினைச சார்பில். பெயரபு பெயரபு - மீண்டும மீண்டும உறையும - சென்று தஙகும பொருள் வயின - பொருளின்பொருட்டு. நின்னின்று - நினனை விட்டு. இமைப்புவரை - கணணிமைப்புப் பொழுதளவும். மடவோள் - இளையோளை. அமை - மூங்கில. கவின - அழகு. தோளிணை - இரண்டு தோள்கள். 'அனன பொருள்வயின தோளிணை மறந்து பிரிவோர' என்று சேரததுககொள்ளவேண்டும.* (உ)

## மாலைக்கால அழகு

[*மாலைக காலம இனிமையும மென்மையும உடையது; உயிருள்ள பொருளகளும உயிரில்லாத பொருள்களும அககாலததிற பல வகையான வேறுபாடுகளை அடைகின்றன. ஆயினும பிரிந்த மகளிர்ககு அதன இனிமை மிகுதியே துனபம் விளைககின்றது. அவ்வளவு இனிமையானது மாலைககாலம*]

அகன்ஞாலம விளககுந்தன் பல்கதிர் வாயாகப்
பகல்நுங்கி யதுபோலப் படுசுடர் கலசேர,
இகல்மிகு நேமியான நிறமபோல இருள்இவர,
நிலவுககாண் பதுபோல அணிமதி ஏர்தரக
கண்பாயல் பெற்றபோற் கணைககால மலர்கூமபத்,
தம்புகழ கேட்டார்போல தலைசாய்த்து மரம்துஞ்ச,
முறுவல்கொள பவைபோல முகைஅவிழபு புதலநநதச்,
சிறுவெதிர்ங் குழலபோலச் சுரும்புஇமிரந திமமெனப்,
பறவைதம் பார்ப்புளளக, கறவைதம பதிவயின்
கன்றுஅமர் விருப்பொடு மனறுநிறை புகுதர,
மாவதி சேர, மாலை வாள்கொள,
அந்தி அந்தணர் எதிர்கொள அயர்ந்து
செந்தீச் செவ்வழல தொடங்க வந்ததை,
வாலிழை மகளிர் உயிர்பொதி அவிழ்க்குங்

காலை யாவ தறியார்,
மாலை என்மனுர் மயங்கி யோரே.

—கலித்தொகை, ககக.

'பகலவன் தன் கதிர்களாகிய வாயினுல், காலையில், பகற்பொழுதை உமிழந்து இநத அகன்ற உலகததை எல்லாாக்கும் தெரியும்படி விளக்கி வைத்தான. அப் பகற பொழுதைத் தன் கதிாகளாகிய வாயினுல விழுங்கியது போல, மறைகினற ஞாயிறு, இப்போது மாலைக்காலததில், மேறகு மலையிற போயச் சோகினறது.

போரில உள்ளமிகுதி யுடையவனுன ஆழிபபடை யானது நிறமபோல, இருள் கருமையாய்ப படாகின்றது.

அழகிய திங்கள, தனது நிலவொளியினுல், அதனைப் புறங்காண்பதுபோல அவவிருளோடு மாறுறறு, வானததில் எழுகினறது.

தம காதலரைக் கூடி இன்பமாய மக்கள் கண்கள் துயில பெறறதுபோல, திரண்ட தணடுகளையுடையனவான தாமரை மலா முதலியன இதழுகள் குவிநதிருககினறன.

தமது புகழைத புகழைத தமக்கு எதிரிலேயே புகழக்கேட்ட சான்ருேரகளைபபோல, தலையைச் சாயதது மரங்கள துயிலுகின்றன.

பிரிநத மகளிரை இகழுநது நகைப்பவைபோலச் சிறு புதர்கள, மொககுகள் இதழ அவிழுநது விளங்குகின்றன.

சிறிய மூங்கிலாலான குழலைப்போல, வண்டுகள், ஒலிதது இமமெனறு பாடுகின்றன.

பறவைகள தமமுடைய குஞ்சுகளை நினைததுத் தங் கூடுகளைக் சோகின்றன.

கறவை ஆக்கள், தாம தங்கும் ஊர்களில் உள்ள தம் கனறுகளினமேல் வைதத அமர்நத விருப்பததோடு, தொழுவாகிய மன்றஙகளில நிறையப் புகுகின்றன.

மறற விலங்குகளும தாம தாம் வதியுமிடங்களிற சேர் கின்றன.

அநதணாகள் தம கடமைகளைச் செய்து அநதிக் காலததை எதிாகொளளுகிறாாகள.

மகளிா, கையில வைததிருக்குஞ சிவந்த எரியினல் அங்கங்கும செவவண்ணமான விளக்குகளை ஏறறத் தொடஙகுகிறாாகள.

இங்ஙனமெல்லாம இநநிகழச்சிகள நடைபெற, மாலைக் காலமானது தனது தனமை நனகு விளககங கொளளும் படி வநதது.

அஙஙனம வநததை, அறிவு மயங்கியவாகள், விளக்கம பொருநதிய இழைகளை யணிநத மகளின உயிரை அது பொதிநதிருக்கும உடலினினறும பிரிககினற காலமாவது தெரியாமல, மாலைககாலம எனறு ஒரு காலமாகச சொலலு கிறாாகள.'

கூறறுவன என்று சொலலவேண்டு மெனபது கருதது

தன தலைவனைப் பிரிநதிருககும தலைவி, மாலைப்பொழுது கண்டு ஆறறுமல, தோழிககுக கூறியதாக உளளது இப பாட்டு. மாலைககால இயலபுகள இதனகண விளஙகும.

குறிபபுரை: ஞாலம - உலகம. நுஙகியதுபோல - விழுஙகியது போல படு-மறைகினற, கல-மலை, இஙகே, மேறகுமலை இகல- இஙகே, போா நேமியான-சககரப படையான; திருமால இருளிவா- இருள இவா; இருள பரவ நிலவு - திஙகளின ஒளி; நிலவுக காணபது போல - நிலவினுற புறஙகாணபது போல அணி - அழகு; எாதா - எழுநதிருகக. பாயல - துயில பெறறபோல - பெறறதுபோல். கணை - திரணட; கால - காலகளையுடையனவான. கால எனறது இஙகே தணடு கூமப - குவிய. முகை - மொககு; நநத - விளஙக. வெதிா - மூஙகில. இமிாநது - ஒலிதது; ஆரவாரிதது. பாாபபு - பற வைக குஞசு. உள்ள - நினைகக, இக குறிபபு, நினைததுக கூடுசோ எனனுங கருததுடையது. பதி - ஊா; வயின - இடததில. மனறு - தொழு. மா - விலஙகுகள்; வதி - வதியுமிடம. வாள் - விளககம்.

அயாநது - செய்து; கடமைகள் செய்து; 'அந்தணர் அயாநது அந்தி எதிர்கொள' என்று கொள்ளவேண்டும் வால - ஒளி பொருந்திய. பொதியவிழககும் - கட்டவிழககும், உடமபிற பொருநதியிருககுங கட்டையவிழககும் எனபது பொருள. கால - காலம, மயஙகியோா- அறிவு மயஙகியவா, 'மாலை வாளகொள, வநதவை, மயஙகியோா, உயிா பொதியவிழககுங காலமாவது அறியாராய, 'மாலை' என மனுா' என்று முடிததுககொளளவேணடும. எனமனுா - எனபா. (௩)

## புறநிகழ்ச்சிக்கு ஏற்ற உள உணர்ச்சி

[புற நிகழசசிகடகும அகநிகழசசிகடகும மிகக தொடாபுணடு; உலகியறகையில அகமும புறமும ஒரு நோககமபற்றியே நடைபெறுகினறன. மககள அவவுணமையை அறிநது, அதறகேறறபடி நடநதுகொள்ளுதல கடமையாகும.]

கலலேர் புறவில கவினிப் புதலமிசை
முல்லை தளவொடு போதுஅவிழ - எலலி
அலைவறறு விட்டனறு வானமும்; உணகண
மூலைவறறு விட்டனறு நீா.

—ஐநதிணை எழுபது, ௨௪.

பொழுது விடிநதது; தலைவியின் முகம வாட்டமாகக காணபபட்டது. கணகள் உலாநதனபோலத தோன்றின. தோழி கவலையுடன தலைவியை அணுகி, 'இராததிரி என்ன நோநதது' என்று கேட்டாள தலைவியின் விடை இபபாட்டு வடிவமாக இஙகே காணப்படுகினறது.

" கறகள எழுநது தோன்றுகின்ற இம முல்லைக காட்டில, வெண முலலைச செடிகள செமமுலலைச செடிகளுடனே கூடி அழகு பெறறுப் புதாகளினமேல இன்பமாயத் தம போதுகள மலருமபடி, நேறறிரவு சோாவிலலாமல மேகங்கள நீா சொரிநதன. என் உண்கண்களும என் மாாபுகள விம்ம அவறறின்மேல நீரை வடிததுககொண்டிருநதன " என்று சொலலித தலைவி ஒரு பெருமூச்சு விட்டாள்.

'கார்காலம் வந்தும தலைவன் வந்திலனே; புறத்து நிகழ்ச்சியும் தலைவியின் அகதது நிகழச்சியும் ஒன்ருயிருக்கின்றனவே; காலமும இடமும பிற தோறறங்களும் தலைவியின் நினைவைத தம நிலைககேறறபடி மாறுபடுததி வருத்துமென்பதைத தலைவன் தெரிநதிருநதும இன்னும் வரவில்லையே' என்று தோழியுந தலைவிக்காகப் பெரிதுங் கவலை கொள்கின்ருள்.

குறிப்புரை: ஏா - எழுந்து தோனறுகினற; புறவு - முல்லைக கானம, கவினி - அழகுறறு; மிசை - மேல. தளவு - செமமுலலைச செடி, போது - மலருந தறுவாயிலுளள பெருமொககு, எலலி - இராததிரி. அலைவு அறறு - சோாவு இலலாமல், விட்டனறு - விட்டது. வானம - மேகம, உணகண - கவருங் கண வறறு-வடிததது. (௪)

---

## 2. ஆடவர் இயல்பு

### ஆடவர்க்கு ஆற்றல் அருளும் அனபும்

[உலகததில் அனைவாககும தொடாபுடையோரும உணடு, தொடாபு இலலாதவரும உணடு, இவ விருவகையாரையும தகப்பிணிததது உலகியலை நிகழததும இயலபுகளே அனபு என்பதும் அருள் எனபதுமாகும. இவறறை இயைபு உணாநது கையாளவலல அறமுறைமையுடைய ஆடவரே ஆற்றலுடையோா எனப் படுவா.]

அருளும அன்பும நீங்கித் துணைதுறந்து
பொருளவயிற் பிரிவோர் உரவோ ராயின்,
உரவோர் உரவோ ராக,
மடவ மாக மடநதை நாமே.

—குறுநதொகை, ௨0

பெண்களுக்குக் கூரிய அறிவும, அதன் பயனை ஆழ்ந்த உணாவும, அவறறின பயனைகப் பெருநதன்மை வாய்நத சொறசெயல்களும இலலாவிடடால வாழக்கை ஒரு சிறிதும இன்பமாயிராது. இந நலஙகள் உடையவாகளா

ஞல், கணவன் மனைவியர்க்கிடையே நிகழும் ஊடல்கூடப் பேரின்பச் சுரப்புள்ளதாய்க் கண்ணியமாய் நிகழும். வாழ்க்கையில் எதிர்ப்படும் எத்தகைய இடர்களும் இன்பச் சுடர்களாய வயங்கி, என்ஞான்றும நன்மைகளையே பயக்கும.

களவு காலத்தில், தலைவிக்கு இருந்த எண்ணமெல்லாம ஒன்றே ஒன்றுதான்; தலைவன என்று மணஞ்செய்து கொண்டு எப்போதும பிரியாமல உடன் இருப்பனே என் பதே அது அவன எண்ணப்படி மணமும நிகழ்ந்து, அவளும தலைவன இல்லத்துக்கு வந்து வாழ்க்கையாண்மனை யிற கால் வைத்துச சில நாட்களாயின. கணவன தன் கண்ணெதிரிலேயே இருக்கவேண்டுமென்று விரும்புங காலம. ஆனல, கணவனுக்கோ எத்தனையோ பொறுப்புக் கள் உண்டு. அவற்றுள் ஒன்று, பொருள் தேடும பொறுப்பு. ஒருநாள், தான் பொருள தேடச செல்ல வேண்டியிருத்தலைத தலைவன் மெல்லத தோழிக்குத தெரி வித்தான. தோழியும இக கருத்தைப் பையத தலைவிக்குக் குறிப்பித்தாள தலைவிக்குச் சிந்தனை ஆழ்ந்தது. அந்நிலை யில, இப்பாட்டிலுள்ள கருத்துக்கள் அவள திருவுள்ள மலரிலிருந்து அருமையாய எழுந்தன;

"ஒரு பெண்பாலாயிற்றே என்னும் இரக்கத்தையும், தம இன்ப துன்பங்களில் ஈடுபடும வாழ்க்கைத துணையா யிற்றே என்னும அன்பையும பொருள்செய்யாமல விடுத்து, என்னைத துறந்து, பொருளகாரணமாகப பிரிகின்றவா, அங் ஙனம பிரிதலைத தமக்கோா ஆற்றலாகக கருதுவராயின், அவ்வாற்றலுடையோா அவ வாற்றலுடையவராகவே இருக்கட்டும்; அவரைப் பிரியமாட்டாத மென்மையுடைய மடநதையேமான நாம அம மென்மையுடையேமாகவே இருப்போம." என்பது அவள கூறிய ஆழ்ந்த அமாத்த லான உணர்ச்சியுரை.

அருளொடும அன்பொடும வாராப் பொருளாக்கத் தைப் பெரியோா முதன்மையாகக் கொள்ளவில்லை தலைவா, அருளையும அன்பையும முதனமையாகக் கொள்ளாமல்

பொருளபொருட்டுப் பிரிதலையே தமககு ஆற்றலாகக் கருதுவராயின, அவா அங்ஙனமே யாகுக! அவா அருளை யும அனபையுமே முதனமையாகக கொண்டு அவரைப் பிரியமாட்டாதிருககும நமது நிலை, ஆறறலுடையதாகாமல மெனமையுடைய தெனப்படுமாயின, நாம அதனையே விருமபுவோம் எனறபடியாம ஆறறலென்று நினைதத தலைவன நினைவை, மிகு வலலமையாகத தலைவி மறுததுரைத தமை பெறபபடடது. அருளையும அனபையும தலைவன மறநதாலும, தலைவியின் இவ வுரைவலலமையையும மறநது அவன பிரிநது விடுதல் இயலுமோ? இயலாது.

**குறிப்புரை:** துணை - வாழ்க்கைத் துணை, மனைவி பொருள் வயின - பொருள காரணமாக. உரவோராயின் - ஆறறலுடைய வராயின மடவம - மெனமையம (௫)

## ஆடவர்க்கும் மகளிர்க்கும உயிரபோல்வன

[மாதா, மனையில தவம இருபபவா; ஆடவா, வெளியிற செயல புரி பவா ஆடவா செயல வெறறியுறுவதறகு மாதரின அனபுத தவம இனறியமையாதது; ஆதலால, அவா அனபு கெடுமபடி செயதுகொணடு ஆடவா வெளியிற செலலுதல நனறுகாது]

வினையே ஆடவாககு உயிரே, வாணுதல
மனையுறை மகளிர்ககு ஆடவர் உயிர்,என
நமககுரைத தோரும தாமே,
அழாஅல தோழி! அழுங்குவா செலவே.

—குறுநதொகை, ௧௩௫.

ஆணமககள் வெளியே சென்று முயறசி செயவதற குரியா, மகளிா தஙகணவரையே உயிராகக கருதி இலலின் கண இருநது கடமை பாாததறகுரியா. ஆடவரை 'மனை யுறை ஆடவா' என்னுமல, மகளிரை 'மனையுறை மகளிா' எனறமையால அவா இலலினகண் இருநது கடமை பார்த தறகுரியா எனபது தெரிகினறது.

இபபடி அவரவா பொறுபபு இனனதெனத தெரிநது அப் பொறுப்பினகண் அன்புவைததுத திறமையாக ஒரு

மித்து வாழுவதன்றோ வாழ்க்கை! இதனையே இச் செய்யுள் அறிவுறுத்துகின்றது.

தலைவர் முயற்சி காரணமாகப் பிரிந்துவிடுவாரோ என நினைந்து தலைவி வருந்துவது கண்டு தோழி ஆறுதல் கூறும் பாட்டு இது. திறமையாக ஆறுதல் கூறுகின்றாள்,

"முயற்சியே ஆடவர்க்கு உயிர்" என்று அவர் சொன்னது உண்மைதான் 'மனையில் வாழும் ஒளி பொருந்திய நெற்றியையுடைய மகளிர்க்கு ஆடவரே உயிர்' என்று நமக்குச் சொன்னவரும் அவர்தாமே. ஆதலால், தலைவி, நீ வருந்தாதே, அவர், தாம் போகவிருப்பதை நீக்கிக்கொள்வார்" என்று சொன்னாள்.

'மகளிர்க்கு ஆடவரே உயிர் என்றால், மகளிர் ஆடவர்க்கு உடம்புபோன்றவராகின்றார். உடம்பு தனியே கிடக்கும்படி தலைவர் பிரிந்துவிடுவாரா? மேலும், உடம்போடு கூடிய உயிரே எதும் முயற்சி செய்வதற்குரியது; உடம்பினின்றும் தனித்துச் சென்ற உயிருக்கு முயற்சி யொன்றும் நடவாதே' என்று அளவையறிவோடு வல்லமையாய் விளக்கிச் சொன்னபடியாயிற்று அகப்பொருள் நூல்களில் தோழியின் அறிவுத் திறங்களாய் வருவன மிகவும் சுவாசசியானவை.

குறிப்புரை வினையே - தொழில் முயற்சியே; ஆடவர்க்கு - ஆண்மக்களுக்கு வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றி. வாள் நுதல் மகளிர் என்று கூட்டிக்கொள்ளவேண்டும். மனை - வீட்டில்; உறை - இருக்கின்ற; அழாஅல - வருந்தாதே, தோழி என்றது, தலைவியை அழுங்குவர் - தவிர்வர். செலவு - செலலுதலை, செலலுதலைத் தவிர்வர். (கூ)

## அண்டினாரை ஆதரிப்பது ஆடவர்க்கு இன்றியமையாதது

[ஆடவர் முயற்சியாளர்; அவர் முயற்சிக்குக் கல்வி செல்வம் வீரம் முதலியன துணை செய்யும்; அப்படியானால், முயற்சியென்பது என்ன? தம்மை அண்டினாரின் குறைகளை நீக்கி யுதவுவதே அது. புகழ் அவர்க்கு இதனாலேதான் நிலைபெறல் வேண்டும்]

எக்கர் இடுமணல்மேல ஓதம் தரவந்த
நித்திலம நின்றிமைக்கும நீளகழித் தண்சேர்ப்ப!
மிகக மிகுபுகழ தாங்குபவோ, தன்சேர்நதார்
ஒற்கம் கடைப்பிடியா தார்.

—ஐநதிணை ஐமபது, ௪௮.

சில பாட்டுக்கள் சில ஐயங்களை அருமையாகத் தீரத்து வைக்கின்றன!

நிலைதத பெரிய புகழ உலகத்தில் யாருக்கு உண்டா கின்றது என்பது ஒரு வினை. அதறகு இப் பாட்டு ஓர் எதிா வினை விடுககின்றது. 'தம்மை அண்டியிருப்பவரது தளாச்சியைக் கருததாக மேறகொண்டு தீரததுவையாத வா, நிலைதத பெரிய புகழைத தாங்கவலலவரோ?' என் பதே அநத எதிாவினை. இதில விடை இருக்கிறது. வினை வினலேயே விடை தநதமையால், இநத விடையே உறுதி யானது.

தமமைச சோநதவாகளின குறைகளை நீக்கிவைபப வாகளே உண்மையில ஆடவா என்று சொலலுவதறகுரியர். கலவி, செலவம, வீரம முதலிய அனைததும இநத ஆண் மைச செயல இலலாதபோது பெருமைப்படுவதிலலை. புகழ நடுவதுமிலலை எனபது கருதது. அவரவாககு அமைநத நலங்கள கொணடே இயனறவரையில தமமைச் சோந்த வரின குறைகளைத தீரததுவைகக முயலலாம.

இமமைப பயன என்பது புகழ, இது மேறகாட்டிய வீரச்செயல ஒன்றினலேதான கைகூடிப பெருகி நிலைபெற வேணடும. வாழககைககு உயிரநாடியாயுள்ள இக்கருததை இப் பாட்டு பிழிவாயத தெளியவைததிருககின்றது!

விரைவில திருமணஞ் செயதுகொளள ஏறபாடு செய் யாத தலைவனைத தோழி, இவவுனறிய கருததையே காட்டித், தலைவியின தளாவைத தீரததுவைககுமாறு கேட்கின்ருள். 'நுணமணல என்று சொலலபபடுகினற இடுமணலினமேல, அலைகள் வீசுவதனல வநது விழுநத முததுககள், தமக் குளள செழுமையினல யாரும எடுக்காமையால, அவவவ்

விடத்திலேயே கிடந்து ஒளிவிடுகின்ற நீண்ட உப்பங் கழியினையுடைய குளிர்ச்சியான கடற்கரைத் தலைவனே! நிலைத்த பெரிய புகழைத் தாங்கவல்லவரோ, தம்மைச் சேர்ந்தவரது குறையைக் கடைப்பிடித்துத் தீர்த்துவையா தவர்?' என்பது அவள் சொல்.

தலைமகனது ஆண்மையுணர்வை இது சுருக்கெனத் தைக்காது விடுமோ?

**குறிப்புரை** எக்கர் - கடற்கரையிற் குவியல் குவியலாகக் குவிந்து கிடக்கும் நுண்மணல்; அதனை இடுமணல் என்றார், அலை முன்னமே கொண்டுவந்து இட்ட மணலாதலின். ஓதம் - இங்கே, அலை. நித்திலம் - முத்து. மிகு புகழ - பெரிய புகழ; தான் இறந்த பின்னும் மிகுந்து நிலைபெறத் தகுந்தது இப் பெரிய புகழாதலின், 'மிக்க' என்று ஒரு சொல்லுஞ் சேர்த்து 'மிக்க மிகு புகழ' எனப் பட்டது ஒற்கம் - தளர்வு. (எ)

## செயல் திறமை

[ஆடவர்க்கு அழகு ஆண்மை; இங்கே ஆண்மை என்பது, பெண் மையை இயைபறிந்து மதித்துப் பயன் கொள்வது; பெண்மை யின் உள்ளங் கவரும் பண்புகளோடு அதனை மதித்தொழுகும் பெரும் பண்புகளும் ஆடவர்களிடம் பொலிதல் வேண்டும். வெளியில் ஆடம்பரமாக ஊர்திகளில் உலவுவதும் ஏனைப் பகட்டுகளும் ஆண்மையன்று.]

கண்ணுறு நெய்தல் கமழும் கொடுங்கழித்
தண்ணந் துறைவனோ தன இலன்—ஆய்இழாய்!
வண்ணகைப் பட்டதனை ஆண்மை எனக்கருதிப்
பண்ணமைத் தேர்மேல வரும்.

—ஐந்திணை எழுபது, சுங

காரியங்களை முடிப்பதற்குச் சில திறமைகள் வேண்டும். தோழி அச் சூழ்ச்சி முறைமைகளில் வல்லவள்.

தலைவன் இராக்குறிக் கூட்டத்திற்காக அண்மையில் வந்து நின்றிருக்கின்றான். அந்நேரம் பார்த்துத் தோழி தலைவியை நோக்கிப் பின்வருமாறு சொல்லுகின்றாள்:

" அம்மா, நம் துறைவர் இருக்கிறரே; அவருக்கு இப்போது, வர வரத தம தன்மையேயிலலே; நமமிடம அகப்பட்டுக்கொண்டதையே அவா, ஒரு பெரிய ஆண்மையெனக கருதிககொணடு, தோமேல வருவதும போவதுமாய இருக்கிருா; இபபடியும ஒருவர் இருப்பாரா?"

இதைக் கேட்ட தலேவி, " அது பொருந்தாது, அவர் நமமிடம அகப்பட்டுக்கொள்ளவிலலேயே; நாமே அவரிடம அகப்பட்டுக்கொணடிருக்கிருேம " என்ருள்.

" அப்படியனறு அமமா, நம்மை அவா திருமணம் செயது கொண்டால அபபோதுதான் நாம அவரிடம அகப்பட்டுக் கொண்டதுபோல ஆகும. அநத ஆணமைதான் அவரிடம இலலேயே; சறறு நேரததிறகெலலாம அவா நமமிடம வநது தம ஆண்மையை எவவளவு குறைகது நமமை வேண்டிக கொளளபபோகிருா எனறு பாாககலாமே; அவா நமமிடம அகபபட்டுககொண்டிருககிருரா, நாம் அவரிடம அகப்படடுக் கொண்டிருககிருேமா என்பது அபபோது தெரிநதுவிடும. வரைநதுகொணடால, அவருககு இநதத தொநதரவு இலலேயே " எனறு தோழி நன்கு விளககிளை

தலேவன உடனே ஒரு தீாமானததுக்கு வநதுவிட்டான், ' விரைவில திருமணஞ செயதுகொண்டு, இவாகளே எபபடியும நமமிடம அகப்பட வைததுததான தீரவேண்டும' எனறு.

தோழிககு வேண்டியது அதுதானே; உடனே காரியம முடிநதது.

குறிபபுரை ' கணணின் தனமை பொருந்திய நெயதல மலாகள் மணககினற வளேநத கழியிடததையுடைய குளிாநத அழகிய கடறகரைத தலேவரான நம தலேவரோ தன தனமை இலலாதவராயிருககினருா ' எனபது முதல இரணடடிகளின கருதது தன - தன தனமை; அதாவது, ஆணமை. ஆய இழாய - அழகிய இழைகளேயுடைய தலேவீ, வணணகை - வள நகை; சிறநத புனனகையையுடைய தலேவி எனபதறகு வநதது. ' அபபடிபபட்ட உனனிடம

பட்டதனை' என்பது கருத்து. பட்டதனை - அகப்பட்டுக்கொண்டதனை. பண் அமை தேர் - பண்ணுதல் அமைந்த தேர், தொழில் திறமையோடு பண்ணப்பட்ட தேர் என்பது பொருள்; வரும் - வருவார் (அ)

---

## 3. மகளிர் இயல்பு

### பெண்கள் பிறந்த இடத்திற்கு உரியவராகார்

[மாதாக்குத் தம் கணவரே உயிர், அவரே தம்மைப் பயன் கொள்பவர் என நினைந்து அவர்வழி நிற்றலே மாதர்க்கு அறம். பிறந்த வீட்டிற்குப் பெண்கள் உரியவராகார்; பெண்களைப் பெற்றோரும் அதனை அறிந்து ஒழுகுதல் வேண்டும்.]

எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்,
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவல்அசைஇ வேறுஓரா நெஞ்சத்துக்
குறிப்புஏவல் செயல்மாலைக் கொளைநடை அந்தணீர்!
வெவ்இடைச் செலல்மாலை ஒழுக்கத்தீர்! இவ்இடை
என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனும்
தம்முளே புணர்ந்த தாம்அறி புணர்ச்சியர்
அன்னார் இருவரைக் காணிரோ பெரும!

காணேம் அல்லேம், கண்டனம் கடத்திடை,
ஆண்எழில் அண்ணலோடு அருஞ்சுரம் முன்னிய
மாண்இழை மடவரல் தாயிர்நீர் போறிர்,

பலஉறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்குஅவைதாம் என்செய்யும்?
நினையுங்கால் நும்மகள் நுமக்குமஆங்கு அனையளே;

சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்குஅவைதாம் என்செய்யும்?
தேருங்கால் நும்மகள் நுமக்குமஆங்கு அனையளே;

ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்குஅவைதாம் என்செய்யும்?

சூழுங்கால் நும்மகள் நுமக்கும்ஆங்கு அனையளே ;
எனவாங்கு,
இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின் ;
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள் ,
அறம்தலை ; பிரியா ஆறும்மற்று அதுவே.

—கலித்தொகை, க.

தலைவியின் உள்ளத்தைக் கவர்ந்த தலைவனுக்கு அவளை மணஞ் செய்து கொடுக்க அவள் வீட்டார் விரும்பவில்லை. இந் நிலையில் ஒரே வழிதான் தலைவிக்கு உண்டு. அது, யாரும் அறியாமல் தலைவனுடன் போய்விடுவதுதான். முடிவில் அப்படித்தான் ஆயிற்று. இது வீட்டார்க்குத் தெரிந்தது. எல்லாரும் தேடத் தொடங்கினார்கள். இதுவரையில் தன் குழந்தையைப்போல வளர்த்துவந்த செவிலி, மிகவுங் கவலைகொள்கிறாள். உடனே ஊரைக்கடந்து அப்பக்கமாகச் செல்லும் ஒரு வழியில் விரைந்தோடித் தேடினாள். எதிரில் அந்தணர் சிலர் வந்தனர். செவிலி கேட்கின்றாள் :

" கொள்கையும் ஒழுக்கமும் உடைய அந்தணர்களே! உங்களுக்கு இந்த வெப்பம் பொருந்திய காட்டில், நடமாடுவது இயல்பாயிருக்கிறது. என் மகள் ஒருத்தியும் இன்னொருத்தி மகன் ஒருவனுமாகத் தங்களுக்குள் தாங்களே அறிந்த கூட்டமுடையவர்களாய் இரண்டுபேர் வந்ததைக் கண்டீர்களா ?"

அதற்கு அந்தணர்,

"காணாமலில்லை, கண்டோம். அது முறைதானே என்று நினைத்துக்கொண்டு வந்துவிட்டோம். அந்த ஆணழகு மிக்க அண்ணலுடன் இப்படிப்பட்ட கொடிய காட்டையும் கடந்து வரக் கருதிய அவ்வளவு பெரிய கற்புடைய அந்த மாதரசிக்கு, நீங்கள் தாயாரபோலும் !

" சந்தனமரம் உங்களுக்குத் தெரியுமே! அது மலையிலேதான் தோன்றி வளர்கிறது. ஆயினும் அதனால் அந்த மலைக்கு என்ன பயனுண்டு? அதனை எடுத்துக்கொண்டு

போய்ப் பல மணப்பண்டங்களுடன் குழைத்துத் தமது உடம்பிற பூசிக்கொள்ளும மக்களுக்குததானே அது பயன் படுகின்றது. நினைத்துப பார்த்தால், உஙகள் மகளும உங் களுக்கு அப்படிததானே !"

"வெண் முத்துக்களை நினைத்துப்பாருங்கள். அவை கடலிலேதான பிறககின்றன. இருநதும, அவற்றை அணி பவர்களுககலலாமல, அவறறால அநதக கடலுககு ஏதாவது பயனுண்டா ? தோநதுபாாக்குமபோது, உஙகள மகளும உஙகளுககு அததகையவளே."

"இசை, யாழிற பிறககிறது. பிறப்பினும யாழுக்கு அவை என் செயயும ? இசைபபவாககுததானே பயன் படும! ஆராயநதுபாாககுமபோது, உஙகள மகளும உங் களுககு அப்படிததான, தகக பருவகாலததிற பயனபடக் கூடாதவளாயிருககின்றாள.

"அவளோ மிகுநத கறபுளளவளாயக காணப்படு கின்றாள. அவளுககுத துனபமான தொன்றும கருத வேண்டாம. பெறற தாய தநதையாகளைவிட அவளுககுக் கணவனே சிறநதவன. அதனை நினைநது, அவனவழியில மனம பொருநதிப போனது அதுதானே தலையான அறம ! இமமையிலேயன்றி மறுமையிலுஙகூட இருவரும் பிரியாமல மகிழநதிருககும வழியும அதுவே" எனறனா. செவிலி உளளம அமைநதாள்.

பெண்கள பிறநதவிடததிறகு உரியராகாா என்பதும், காதலினவழியே மணம கூடடுவிககப் பெறறோா தடை செயயலாகாது எனபதும இநதப பாட்டில இனிய உவமை களுடன விளககபபடுகின்றன.

**குறிபபுரை** எறிததரு - எறிததலைச செயகினற; வீசுதலைச செயகினற; அதாவது, உறைபபாய வீசுதலைச செயகினற எனபது பொருள தாழநத - தஙகிய. கரகம - கமணடலம. உரைசானற - போ போன. சுவல - தோள். அசைஇ - வைததுககொணடு ஓரா - கருதாத. குறிபபு - இஙகே, பல குறிபபுகளைக காடடும ஐமபுலன களுககு வநதது. மாலை - இயலபு; இயலபினையுடைய எனறு

கொள்க. கொளே - கொள்கை. நடை - ஒழுக்கம். கடத்திடை - வழியில், சடம - கடுமையான வழி போறிர - போவுதிர. படுபபவாகசு - மெய்யில பூசிக்கொள்பவர்களுக்கு இறந்த - மிகுந்த. எவவம - துனபம். 'அறம தலே' எனபதறகு, 'முன பின பழக்கங்களேவிட அறந்தான முதனமையானது' என்றும உரைக்கலாம. எது முறையானதோ அதற்குத்தான முதனமை தரவேணடுமெனபது கருதது. இநதப பாட்டின முதல நானகு வரிகளில, 'குடைநிழலில, கமணடலமும முககோலும தோளில வைததுககொணடு, தவறு நினையாத புலனடக்கததுடன வரும அநதணாகள' என்று அவாகள இயலபு சொல்லப்படுகினறது (௬)

## சொல்வன்மை

மகளிாக்குச சொல்வனமை சிறக்கும, பணடைக்காலத தமிழமக்ளிா அததிறம நிரமபப்பெறறவா, மேலும அததிறம அனபோடு இயைநதிருநதது; இயைதல மட்டும அன்று அனபினாலேயே அசசொல்வனமை சிறநதும விளங்கியது; உள்ளததின நீரமை சொல்லின நீரமைக்கு ஏது.

செவவரைச சேக்கை வருட மானமறி
சுரைபொழி தீமபால ஆர மாநதிப்
பெருவரை நீழல உகளும நாடன,
கலலினும வலியன தோழி,
வலியன என்னுது மெலியுமஎன் நெஞ்சே.

—குறுநதொகை, ௧அ௭.

அகப்பொருட் சுவைக்குச் சொல்வனமை மிக இன்றி யமையாதது. தலேவிக்குந தோழிக்குமிடையே நிகழும பேச்சுகளில, 'இயறபழிததல' 'இயறபட மொழிதல' என்னும பகுதி சொல்வன்மைக்கு இனிய எடுததுக்காட் டாகும்.

'இயல பழிததல' எனபது தலேவன தனமையைக் குறைததுக் கூறுதல, 'இயல பட மொழிதல' எனபது, தலேவன தன்மையை உயாவிற படுமபடி புகழநது கூறுதல.

திருமண முயறசிக்காகத தலேவன் பொருள்தேடப் போனன. விரைவில் வரவிலலே தலேவி ஆறறுளாயினள்.

தோழி அவளை ஆற்றுவிக்கக் கருதி, 'தலைவன் கல்லினும் வலிய நெஞ்சன்' என்று அவன் தன்மையைப் பழிப்பாகக் கூறினாள். தலைவனைப் பழித்தால் அந்நேரத்தில் தலைவிக்கு ஆறுதலாயிருக்குமென்று அவள் கருதினாள். ஆனால், தலைவிக்கு அப் பழிப்புப் பொறுக்கக் கூடவில்லை. தனக்கு ஆயிரம் துன்பஞ் செய்தாலும் ஓர் அன்புடைய தலைவி, தன் தலைவனைப் பிறர் பழிக்கப் பார்த்துக்கொண்டிருப்பாளா?

உடனே அவள் தோழியை நோக்கி, 'ஆம், தலைவர் கல்லினும் வலிய நெஞ்சமுடையவரே! வினைமுடித்தலில் அவர் அத்தகைய உறுதியுடையவர்தாம். அது தெரியாமல் என் நெஞ்சம் வீணே மெலிவடைகின்றது' என்று தோழியின் சொல்லையே வல்லமையாய் நல்ல கருத்தில் மாற்றித் தலைவனைப் புகழ்வாளாயினள். இது சிறந்த பேச்சுத் திறனன்றோ!

'இனிய மலைப்பக்கங்களில் தங்குதலையுடைய வருடைமான் என்னும் ஒருவகை மானினத்தின் குட்டிகள், தம் தாயின் மடிகள் பொழியும் தித்திப்பான பாலை நிறையப் பருகி மகிழ்ச்சியால் அப் பெரிய மலைப்பக்கங்களின் நிழலில் துள்ளிக் குதிக்கும் அத்தகைய 'நாடனுயிருக்கின்றான் தலைவன்' என்றுந் தலைவனுக்கு ஒரு சிறப்புக் கொடுத்துப் பேசினாள் தலைவி. மான்குட்டிகள் நிறையப் பாலுண்டு மலைநிழலில் களிப்பாகத் துள்ளி மகிழ்வதுபோல, தலைவனும் நிறையப் பொருள் தேடிவர அதனால் வாழ்க்கை நிழலில் தானும் இன்பமாய் வயங்குதல்கூடும் என்பது அதன் கருத்து.

குறிப்புரை: செ - செம்மையான; இனிய. வரை - மலைப்பக்கம். சேக்கை - தங்குதல். மறி - குட்டி. சுரை - மடி. (௧0)

## திறமையான பேச்சு

உள்ளம் உரை செயல் என்னும் மூன்றினுள்ளும், உரை சமர்த்தாய் இருக்கவேண்டும்; மற்ற இரண்டினுள்ளும் உள்ளம் தூயதாயிருக்கவேண்டும், செயல் ஒழுங்குடையதா யிருக்கவேண்டும். வல்லமையான உரை எதனையும் நிறைவேறச் செய்யும். இச் செய்யுளில் அதன் நளினமும் பயனும் நன்கு விளங்குகின்றன.

அன்னய் வாழிவேண் டன்னை ! கானவர்
கிழங்குஅகழ் நெடுங்குழி மல்க வேஙகைப்
பொன்மலி புதுவீத் தாஅம அவர்நாட்டு
மணிநிற மாலவரை மறைதொறிவள
அறைமலர் நெடுங்கண் ஆர்நதன பனியே.

—ஐஙகுறுநூறு, உ0அ.

கள்ளம இல்லாமல் வேனிறகாலப் பறவைபோல மகிழநது விளையாடிய காலமெலலாம போய்விட்டது. நெருஙகிப் பழகிய தாய முதலிய உறவினரிடங்கூட வரவர அணுக்கந் தளாகின்றது. சில வேளைகளில அன்பு குறைநது அவாகளிடம அச்சமும உண்டாகின்றது. களவில ஒழுகுந் தலைமகனது அன்பு, இவவளவு தொலைவுக்குத தலைவியின் உள்ளததை மாறறிவிடு மெனறு யாா எதிாபாாததாாகள் ? காதலின் ஆறறலைததான் எனன வெனபது !

தலைவிக்கு உண்டான இம மாறுபாடுகளைச் செவிலி உறறு நோக்கிளை. தோழிகருச் செவிலியினிடம உண் மையைச் சொலலிவிடவேண்டும எனறு தோனறிறறு. ஆனல, அதனை அவள, சிறிதுங் குறறமெனறு கருதாத முறைமையில, திறமையாகச சொல்லவேண்டும எனறு நினைததாள். தலைவியின் ஒழுக்கததைச செவிலி முதலிய வாகள தவருகக் கருதாமற பொருததமானதெனறு மதிதது அதறகு இசைநது திருமணம நிகழததுவதறகும் ஏறபாடு செயய முறபட வேண்டுமாளுல, தலைவியாற காதலிக்கப் பட்ட தலைவன் தகுதியானவன என்பதையுந தோழி நன் ருகத தெளிவுபடுததவேண்டும. தலைவியின மாறுதலுக் குரிய காரணமும தககபடி வெளிப்படுததிவிட வேணடும. தோழி எனன செயவாள ? அவள் ஆறறலுக்குத தக்கபடி கருததுக்களைக் குறிப்பாகவும் வெளிபபடையாகவும செவி லிக்குக் கூறினள். தோழிக்கு வெறறியுண்டாயிறறு. உடனே அவள் செவிலியைப் பாாதது, அமமா, தலைவி இதுவரையிற பட்ட வருததமெலலாம் இனறு உன்னுல்

தீர்ந்தது என்னுங் கருத்துடன், பின்வருமாறு மகிழ்ச்சி யாயச் சொலலுகின்றுள் :

'தாயே, நீ வாழவாயாக; சிறியேன் சொலலும இத னைச் சறறு அனபோடு கேட்கவேண்டும் தாயே! காட்டி லிருககும் வேடுவராற கிழஙகுகள் அகழப்பட்ட குழிகள் அத தலைவரது நாட்டில நிறைய உணடு. அக்குழிகள் நிறையும்படி அருகிலிருக்கும வேஙகை மரததின பொன் னிறமிகக புதுபபூககள் அவறறினமேல் விழுநது பரவலாய மூடியிருககுமாம நிலததின குறைகள தெரியா. அதத கைய குறை மறைககும அவரது நாட்டின் மலை தொலைவி லிருககும நமககும தெரிகின்றது தலைவி எப்போதும அதனையே பாாததுககொண டிருப்பாள. வீட்டுககு வரும போது, மலை மறைநதுவிடுகின்றது அம மலை மறையும போதெல்லாம இவள கண்களில நீா நிறைநதிருக்கும' என்பது தோழியின சொல. இப்போது நின் உதவியால் அவ்வருததம தீாநதுவிட்டது எனபது குறிபபு.

குழிகள பிறா உண்ணுவதறகுக கிழஙகுங் கொடுதது அதனல உண்டான பளளங்களையும மலரால நிரபபிக்கொள் கினறன எனறதனல, தலைவன தனனை விருமபுவாாககும பயனபட்டு, அதனல உணடாகுங் குறைபாடுகளையும தன் புகழால நிறைததுககொளளும் தலைமைப்பாடுடையவன் எனறு தலைவனது தகைமையைத தோழி குறிபபாக விளக் கினளாயிறறு.

குறிப்புரை:—வேணடு - விருமபிககேள கானவா - வேடுவா அகழ - தோணடபபட்ட; நெடுங குழி - பெரிய குழி மலக - நிரமப மலி-மிகக வீ - மலா தாம - தாவும, விழுநது பரவலாயிருககும என பது கருதது மணி நிறம - நீலமணியைபபோனற நிறததையுடைய, மால வரை - பெரிய மலை. அறை - பாறை, அறை மலா - பாறைக ளின மேல வீழநது கிடககும மலாகள, விரிய மலாநத பினபே மலாகள் பாறையினமேல விழுநது கிடககுமாகலின, அகலததிறந திருநத தலைவியின கணகளுககு உவமையாயின. நெடுஙகண - பெரிய கண. ஆாநதன - நிறைநதன. பனி - நீா; பனி ஆாந்தன எனறு கொள்ளவேணடும.　　(கக)

## குறிப்பாகச் சொல்லும் ஆற்றல்

[சொல்லவேண்டிய கருத்துக்களை வேறு நிகழ்ச்சிகளிற் குறிப்பாகப் புலப்படவைத்துப் பேசுதல் ஒரு சிறந்த பேச்சாற்றலாகும். இதனால், சொல்லுவாரக்கும் கேட்பாரக்கும் நுண்ணுணர்வும் பெருந்தன்மையும் மிகும்.]

சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்
இருங்கல் விடரளை வீழ்ந்தெனை வெற்பில்
பெருந்தேன் இறாஅல் கீறு நாடன்,
பேரமர் மழைக்கண் கலிழ்த, தன்
சீருடை நன்னாட்டுச் செல்லும் அன்னாய்!

—ஐங்குறுநூறு, உகச.

"அம்மா, நம் தலைவர் செயல் மலைப் பிளவில் விழும் பலாப்பழத்தின் கதையாக இருக்கிறது. அவர் சிலநாள் தம் ஊரிலேயே தங்கியிருக்கப் போகிறாராம். பிறருக்குப் பயன்படாதபடி மலையிடுக்கில் விழுந்துவிடும் பலாப்பழம், அவ்விடுக்கிற கட்டியிருந்த தேன் கூட்டையும் அழித்து விடுவதுபோல, இவர் வந்து தந்த அழகை இவரே தமது பிரிவினால் வாங்கிக்கொள்ளுவதோடு, இதற்குமுன் இருந்த நமது இயற்கை யழகையும் சிதைத்துவிடுவதற்குத்தான் இந்த நினைப்பு. நாம் கண்ணீர்விட்டு அழுதுகொண்டிருக்க, இவர் தமதூருக்குப் போய் மகிழ்ச்சியா யிருக்கப்போகி றார்"

என்று தலைவியை நோக்கித், தோழி சொல்லுகிறாள். தலைவன் ஒரு பக்கத்தில் இருக்கிறான் என்று தெரிந்துதான் அவனுக்குக் கேட்கும்படி இவர்கள் இப்படி பேசிக்கொள் ளுகிறார்கள்.

தலைவனுக்கு மனம் எப்படியிருக்கும்!

**குறிப்புரை** :—சாரல் - மலைப்பக்கம்; பலவு - பலாமரம், மலைப் பக்கத்தில் இருக்கும் பலாமரம் அம்மரத்தின் செழுமையான பழக் கொத்திலிருக்கும் ஒரு நல்ல பலாப்பழம் என்பதற்கு, 'கொழுந்

துணர் நறும் பழம்' என்றூர். இரு - பெரிய கல் - மலை. விடர - பிளப்பு. அளை - அப் பிளப்பின் சந்து, பள்ளம். வீழாதெனை - வீழ்ந்த தாக. வெற்பின் பெருந்தேன் இறால் - அந்த மலையின் பெரிய தேன் அடை. கீறும் - கிழியும நாடன் - அததகைய நாட்டையுடையவன். பேர அமர மழைக கண - பெரிய அமாத்தலான குளிர்ந்த கண. அமாததலான குளிாநத பெரிய கண எனறு கூட்டிககொள்ள வேணடும கலிழ - அழ; கண கலிழ என்றூா செல்லும - செலலு வாா ; தம ஊரில் தஙகியிருபபதறகுச் செலலுவாா அன்னுய - தலைவீ!                    (கஉ)

## சூழ்ச்சித் திறன

[பேசசுத திறததில், எதிரிலிருபபவரின கருததும நோககமும அறிநது அவற்றிற கேற்பப பேசித தனது காரியததை நிறை வேறறிக கொள்ளுதலும ஒரு திறமாகும. தமமைச சோாந்த வரின நடுககததைத தீாதது வைப்பது ஆடவாககுக கடமை; அக கருததறிநது பேசுநதோழியின் திறமை இசசெயயுளில் அழகாக வருகினறது]

கொல்லியல வேழம குயவரி கோளபிழைத்து
நலலியல் தமஇனம நாடுவபோல—நலலியல
நாமவேல் கணணுள நடுநடுப்ப வாரலோ
ஏமவேல ஏநதி இரா.

—திணைமாலை நூற்றைமபது, உ௫.

எப்படியாவது திருமணததை முடிகதுவைக்க வேண்டும என்பது தோழியின உறுதியான கருத்து. அதற்காக அவள் செயயும விரகுகள் பல.

ஒருநாள் தலைமகன் இரவுநேரத்தில் வருகின்றுன்; தோழி சென்று ஒன்று வேண்டிக்கொளகின்றுள். "ஐய, என் விருப்பப்படிதான் நீங்கள் ஒன்றும நடப்பதில்லை; தலைவிக்கு ஒரு வருத்தமான காரியமென்றுல், அதனை நீங் கள் உடனே தீர்த்துவிடக்கூடும. அச் செயலாவது உறுதி யாயிருக்குமா?" என்று கேட்டாள்.

தலைவன்: "ஆ, தலைவி வருந்தவும நான் பார்த்துக் கொண்டிருப்பேனு? அநத வகையில் ஐயங்கூடவா?"

தோழி: "ஐயமிருநதால் இவவளவு நெருங்கிக் கேட்பேனு? தலைவி நடுநடுங்க நீங்கள் ஒரு காரியமும் செய்ய மாட்டீர்கள் என்பது உறுதிதான்."

தலைவன் : "எக்காலும் உறுதியே."

தோழி: "அப்படியானுல், தலைவி இப்போது ஒரு காரியததிறகாக நடுநடுங்குகின்ருளே; அதனை உடனே நீக்கி உதவவேண்டுமே; உங்களையனறி வேறு யார் துணை?"

தலைவன: "அப்படியா! அதனையே முதலிற செய்வேன். என் ஆருயிரத தலைவிககும ஒரு நடுககமா? ஆ!" என்று சொல்லி வாளை உருவினுன்.

தோழி: "வாளை உறையிற போடுங்கள்: அப்படியெல்லாம வாளுககு ஒன்றும வேலையிலலை; யானைகளும கொல்லுநதன்மையுடையவாயினும புலி தமமை எஙகே கொனறுவிடுமோ என்று அஞ்சி அது பிடிததுக்கொள்ளாதறகுத தபபி நலல இயலபையுடைய தம யானையினததை அவை தேடிச் சேரவதுபோல, நீங்கள் இவ வாளையே காவலாகக் கையில ஏநதிககொண்டு கொடிய விலங்குகளுககுத தப்பி நலல இயலபையுடைய தலைவியை இநத இரவு நேரததில நாடி வருவதுதான, தலைவிக்கு மிகவும் நடுக்கமாயிருக்கிறது அச்சந தருகினற இவ வாளையே போனற கண்களுடையவளாயிருநதும, உங்கள்மேல வைதத அனபினுலேதான் இப்படி மிகவும நடுநடுங்குகின்றனள் அவள நடுககததை நீஙகள் அனபுடன் தீர்தது வைக்கவேண்டும" எனறு கேட்டாள்.

தலைவனுக்கு உள்ளததில் அசைவு பிறநதது, தலைவியின் நடுககததைத் தீரததுவைபபதானுல், தான இரவு நேரங்களில் வருவதை நிறுததிக்கொள்ளவேண்டும. பகல நேரங்களில் வருவதறகுத தலைவிக்கோ வீட்டிற் காவல் மிகுதியாயிருககிறது; பிரிநதிருப்பதென்பதோ இருவர்க்கும இயலாது. அப்படிததான் பிரிந்திருந்தாலும தலைவி

பிரிவாற்றாமல் உடல் மெலிந்து வாடுவாள். அது புறத்தாருக்குத் தெரியும், அவர் மருத்துவரை அழைப்பர்; அல்லது, வேலனைக் கொண்டு வெறியாடித் தெய்வம் நேர்வர் அல்லது வேறு திருமணஞ் செய்யவும் முற்படுவர்; எல்லாம் தொலலையாய முடியும்; இவ்வெல்லாத தொல்லைகளும் தீர்வதானால், உடனே தலைவியை வரைந்து கொள்வதற்கு ஏற்பாடு செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்று இங்ஙனமெல்லாம் தலைவனுக்கு நினைவு பிறந்தது. முடிவு என்ன? தோழியின் எண்ணந்தான் நிறைவேறிற்று

குறிப்புரை —இயல் - தன்மை. வேழம் - யானை. குயவரி - வளைந்த வரிகளையுடைய புலி கோள்-கொள்ளுதலுக்கு பிழைத்து-தப்பி. நாம - அச்சந் தரக்கூடிய. நடு நடுப்ப - நடு நடுங்க. வாரல - வரவேண்டாம் ஏம - காவலாகிய. இரா - இரா நேரத்தில் (கஅ)

---

# 4. இல்லறம்

## இல்லற இன்பம்

[மனைவியின் மாட்சிமையால் இல்லறம் மாட்சிமைப் படுகின்றது; கணவன் இன்பத்தில் நாட்டமும், சமைத்தல் முதலிய வீட்டுத் தொழிலில் திறமையும், உணவு படைத்தலில் அன்பும், பொதுவாக நாணம் அடக்கம் முதலியனவும் மனைவியின் மாட்சிமைப் பண்புகள். இல்லறம் இவற்றால் இன்பமுடையதாகும்]

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்,
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.

—குறுந்தொகை, கசுஎ.

கணவன் மனைவியரது இல்வாழ்க்கையின்பம் இச்செய்யுளில் ஓர் எடுத்துக்காட்டின் வாயிலாக விளக்கப்படுகின்

றது. இல்லற வாழ்க்கையின் முதல் நன்மை சாப்பாட்டு வசதி.

திருமணம நடநது தலைவி கணவன் மாளிகைக்கு வந திருககிருள். குடும்பம செலவம் நிறைந்தது எனினும, தலைவன்மேல உளள அன்பினுல அவள, தானே சமைக் கிருள். ஒரு நாள், தயிரைப பிசைநது சறறுப் புளிச்சுவை யாகத தயிராக குழபபு வைகக முயன்ருள். இவள விரல களோ காநதள்மலரைப்போல மெனமையாயிருக்கினறன தயிரோ, நன்ருய்க் காயநத பாலிற பிரை சேர்ததாகலின், முறறிப பாறைபட்ட தயிராயக் கெட்டியாயிருககினறது. அதனை, விரலகள நோவப் பிசையவேண்டியிருநதது. அப் படி பிசைநது, அடுபபிலேறறிப் பாகஞ் செயகிருள்.

இடுபபில மாசு போக்கிய தூய ஆடையை உடுததிருக் கிருள். சமையல் செயயும விரைவில அநத ஆடை இடுபபி லிருநது நெகிழுகின்றது; விரலகளைக கழுவிககொள்ளா மலே நெகிழநத ஆடையை உடுத்துக்கொளளுமபடி நேர் கினறது.

தாளிதஞ செயயுமபோது, குழமபையுந துழாவிக் கொண்டிருக்கவேணடும. கண்களோ குளிர்ச்சியானவை; குவளை மலாகளைப் போன்றவை. சிறிது திருயபினுலும, பாகங் கெடுமென்று கருதிக குழம்பையே பாாத்துத துழ விககொணடிருககிருள். தாளிபபின புகை கணகளிற பட்டுப பரக்கின்றது

இங்ஙனமெலலாம அவள, துன்பம பாராமல் துழவிச் சமைதத இனிய புளிக்குழமபை அவள் கணவன இனிதாக இருக்கினறதென்று சுவைததுக்கொண்டு உண்கினருன். தன் திறமைக்கு வியநதுகொண்டு அவன் உண்ணுதலால், தலைவி சிறிது நாணஙகொண்டவளாயத தனது ஒளிபொருந் திய நெற்றி சறறு முன்னேக்கிவர முகங் கவிழநதுகொண்டு ஒருபக்கம ஒதுங்கி நிறகின்ருள, அவள் முகம அடக்கத தால் நுட்பமாய் மகிழநது நிறைவடைகின்றது.

மனைவி இங்ஙனமெல்லாம் மாட்சிமையுடையவளானால், வாழ்க்கை இன்பமில்லாமலும் இருக்குமா?

குறிப்புரை :—முளி தயிர் - முற்றிய தயிர்; அதாவது, கட்டித் தயிர். கழுவுறு - கழுவிய. கலிங்கம் - ஆடை. கழாஅது - கழுவாமல், விரலைக் கழுவாமல் அதனால் உடுத்தது என்று உரைக்கவேண்டும். உடீஇ - உடுத்து. உண்கண் - கண்வனத்து உள்ளத்தை உண்ணுங் கண், கவர்ச்சியான கண் என்பது பொருள். குய - தாளிப்பு. கமழ - பரக்க. துழந்து - துழவி. அட்ட - சமைத்த. தீ - இனிய. பாகர் - பாகம், சமையல், இங்கே குழம்பு. இனிது என - இனிதாக இருக்கின்றது என்று சொல்லி. நுண்ணிதின் - நுட்பமாக; வெளிப்படையாக அல்லாமல் அடக்கமாக என்னுங் கருத்தில் வந்தது. மகிழ்ந்தன்று - மகிழ்ந்தது. ஒள் நுதல் - விளக்கம் பொருந்திய நெற்றி. முகன் - முகம். 'முகம் மகிழ்ந்தது' என்று சேர்த்து முடிக்கவேண்டும். தலைவியின் அகமகிழ்ச்சி அவர் முகத்தில் தெரிதலால் முகம் மகிழ்ந்தது என்று கூறப்பட்டது.　(கசு)

## இல்லற மாதரின் கடமை

[இல்லற மாதர்க்கு விரிந்த மனப்பான்மையும் நோன்பாற்றலும் நினைவு உரமும் இன்றியமையாதன. தம் குடும்பக் கடமைகள் மட்டும் அவர்களுக்கு உரியன அல்ல; நாட்டுச் சேவையும் உண்டு, 'நாட்டில் பகைமை நீங்குக, அந்தணமை ஓங்குக' என்று தவங்கிடப்பதும் இல்லற மாதர்க்குக் கடமை.]

வாழி ஆதன் வாழி அவினி!
பகைவர்புல லார்க, பார்ப்பார் ஓதுக,
எனவேட் டோளே யாயே; யாமே
பூத்த கரும்பின் காய்த்த நெல்லின்
கழனி யூரன் மார்பு,
பழன மாகற்க எனவேட் டேமே.

—ஐங்குறுநூறு, ச.

தலைவன் சில நாள் தலைவியைப் பிரிந்திருந்தான்; பின்பு வந்தான். ஒரு நாள் தோழியை நோக்கி, "நான் இங்ஙனம் பிரிந்திருந்தபோது நீங்கள் என்னென்னவோ

நினைத்திருப்பீர்கள்" என்று சொன்னான். அதற்குத் தோழி கூறும விடையே இநதப் பாட்டு.

"அரசனை ஆதன அவினி என்பவன் வாழி வாழி" என்று முதலில அவள் சொலலிககொண்டாள். பின்பு,

"தலைவி உங்களைப்பறறித தவறென்றும நினைக்க வில்லை அவள இலலறததாககுரிய நினைவுகளையே மேற் கொண்டிருநதாள; 'நாட்டிற பகைவாகள் சிறுமை யடைக, நாடு நன்மையடையுமபொருட்டு அநதணாகள் மநதிரம ஓதுக" என்று நினைவுவலிவுடன எண்ணவேண்டு வது மனைவாழக்கைககுரிய மாதரின் கடமையன்றோ? அநத இலலறக கோட்பாடுகளையே அவள் உள்ளம நினைத துககொண்டிருநதது

தோழிமாரான நாஙகள "பூதத கருமபினையும் காயதத நெல்லினையுமுடைய கழனிகள சூழநத ஊருககு நீங்கள் உரியவராயிருககிறீாகள. ஆனால், உஙகள மாாபும அக் கழனிகளபோல ஆகிவிடக் கூடாதே எனறு விருமபி நினைத துககொண்டிருநதோம" எனறு சொன்னாள.

தோழியின பேச்சில் உளள குறிபபைத தலைவன் தெரிநதுகொணடான. 'பரததையாகள பூததிருக்கிறாாகள; ஆனால அவாகள மகவுபெறறெடுபபதறகு உரியவாகள அல லா, தலைவி மனைவாழககைக் குரியவளாதலின், அவள பூத திருததலோடு மகபபேறறுககும உரியவளாகினறாள. கருமபு பூததலமட்டும உடையதாதலால 'பூதத கருமபு' எனறு தோழி சொனனது பரததையரையே குறிப்பதாக இருககவேணடும. ஆம, அதுதான. அப்படியானால், பூததலோடு காயததலுமுடைய நெல, பூத்தலியலபோடு மகபபேறுரிமையுமுடைய தலைவியையே குறிக்கின்றதென் பது உறுதி. பழனம என்னும வயலநிலம கருமபும விளைய இடநதருகின்றது. நெல்லும விளைய இடநதருகின்றது. அநதப் பழனமபோல நமது மாாபும் இருவாககும பொது வானதாக ஆகிவிடககூடாது எனறு குறிப்பிக்கினறாள். ஆம், என்ன வல்லமையாகக் குறிக்கின்றாள்! அவள்

கருத்து, முறையானதுதானே' என்று இங்ஙனமெல்லாம் அவன் மனம் நினைத்தது. நாம் ஏன் தோழியை இந்தக் கேள்வி கேட்டோம் என்றும் அவனுக்குத் தோன்றிற்று.

இல்லற மாதரின் கடமையும், பரத்தையாக்கும் குல மகளிர்க்கும் இடையே உள்ள வேறுபாடு ஒன்றும் இப் பாட்டில் என்ன அழகாக எடுத்துக்காட்டப்படுகின்றன!

குறிப்புரை:—புல் - புன்மை ஆக - பொருந்துக. பழனம் - வயல் நிலம் (கடு)

## திருமணத்தின் பயன் இல்லறவொழுக்கம்

[ஆடவர்க்குக் கடமை மாதரை மணந்து இல்லறவொழுக்கம் மேற் கொள்ளுதல், மகப்பேறு இல்லறவொழுக்கத்திற்குரிய அன்பு முதலிய இனிய பண்புகளை உண்டாக்கும். திருமணத்தின் பயன் அப்பண்புகளைப் பெறுதலே]

மந்திக் காதலன் முறிமேய் கடுவன்
தண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்
பொங்கல் இளமழை புடைக்கும் நாட!
நயவா யாயினும் வரைந்தனை சென்மோ;
கல்முகை வேங்கை மலரும்
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே.

—ஐங்குறுநூறு, உஎகூ.

தோழி இந்தப் பாட்டில் இரண்டு குறிப்புகள் வைத்திருக்கிறாள். தலைவன் விரைவில் மணந்துகொள்ளவில்லை; அவனைத் தோழி நெருங்கிச் சொல்லுகிறாள்:

"பெட்டைக் குரங்கின் காதலனைத் தழை தின்னும் ஆண் குரங்கு, குளிர்ந்த மணம் வீசும் நறைக்கொடி கொண்டு, அகன்ற பலை நிலத்தின்மேல் மிகுந்து வருகின்ற இளமுகிலை அடித்து விளையாடுகின்ற நாடனே" என்று தலைவனை அழைத்துக்கொள்கின்றாள். இந்தப் பேச்சில், 'மேற் கருக்கொண்டு முற்றிப் பயன்படக்கூடிய இள மேகத்தைக் குரங்கு அடிக்கின்றதென்று குறிப்பதனால்,

விரைவிற் கருக்கொண்டு முற்றி மகப் பெறுதற்குரிய தலைவியை நீ களவொழுக்கத்தால் வீணே கெடுக்கின்றாய்' என்று ஒரு குறிப்பு இருக்கின்றது.

இனி, அங்ஙனம் தலைவனை அழைத்தவள் அவனை நோக்கி "அழுத்தமான மொக்குகளையுடைய வேங்கை மரங்கள் மலர்ந்திருக்கின்ற நல்ல மலைகளையுடைய நாடனுக்குப் பெண் இவள் என்று நீ உட்கொண்டு திருமணத்துக்கு விரும்பவில்லையானாலும், கடைக்காகவாவது திருமணம் செய்துகொண்டு போ" என்று தன் முடிபுரைக்கின்றாள்.

இச் சொல்லில், வேங்கை மலர்கின்ற நிகழ்ச்சி காட்டப்படுதலின், திருமணஞ் செய்துகொள்வதற்குரிய பருவமும் இதுவென்று மற்றொரு குறிப்பும் வெளிப்படுகின்றது.

குறிப்புரை —தண் - குளிர்ச்சி 'குளிர்ந்த மணங்கமழும் நறைக்கொடி' என்பது இனிய களவொழுக்கம் என்பதன் குறிப்பு. பொங்கல் - மிகுதியான. மழை - மேகம் புடைக்கும் - அடிக்கும் கல்முகை - கெட்டியான அரும்பு கற்குகை யென்பொருளுரைப்பதானால், அக் குகைகளின் அருகிடங்களில் வேங்கை மலரும் மலைநாடன் என்று உரைத்துக்கொள்ளலாம் பெண்டு - பெண். படுத்து - உளங்கொண்டு, குறவர்மகள் எனக் குறைவாய் நினைத்து என்பது கருத்து (௧௯)

## பெண்ணின் இல்வாழ்வு

[இல்வாழ்க்கையில் கணவனுக்கும் மனைவிக்கும் தினைத்தனையும் மாறுபாடு இருத்தலாகாது. மக்கட்பேறு இல்வாழ்க்கைக்கு அணி கணவனும் மனைவியும் குழந்தைகளோடு ஒருங்கிருந்து அன்பும் ஒற்றுமையுங் கனிந்த உள்ளத்துடன் இன்னிசை கேட்டு மகிழ்தல் சிறந்த நாகரிக நன்முறையாகும்]

பாணர் முல்லை பாடச் சுடரிழை
வாணுத லரிவை முல்லை மலைய
இனிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத் தன் புதல்வனொடு பொலிந்தே.

—ஐங்குறுநூறு, ௪0௮.

அணுக்கத்திலேதான் திருமணம் நடந்தது. ஆனல் அப்படியோ இரண்டு மூன்றாண்டுகள் கழிந்துவிட்டன. மணமக்களுக்கு இப்போது ஒரு வயதுள்ள புதல்வனும் உடன் இருக்கிறான்.

பெண்ணின் இல்வாழ்வு எப்படியிருக்கிறதென்று பார்க்கவேண்டுமென்பது தாய் வீட்டார் விருப்பம். தாயை விடச் செவிலியே குழந்தைமுதல் பெண்ணினிடம் நெருங்கிப் பழகியவள். ஆதலால் அவள் 'நான் பார்த்துவருகிறேன்' என்று சொல்லிப் புறப்பட்டாள். பகலெல்லாம் வழி கடந்து மாலை ஐந்து மணிக்குப் பெண்வீட்டை அடைந்தாள். ஆவலத்தோடு உள்ளே நுழைந்தாள்

முற்றத்தில் ஒரு மலர்த் தோட்டம் அங்கே ஓர் அகலமான மேடை மேடையின் ஒரு கோடியில் ஒரு கொடிப்பந்தர் இருந்தது. அப் பந்தரில் முல்லைக்கொடிகள் அடர்த்தியாகப் பின்னிக்கொண்டு படர்ந்திருந்தன நிறைய மலர்கள் மலர்ந்து, நறுமணத்தை அத் தோட்டம் முழுமையும் அள்ளி வீசிக்கொண்டிருந்தன.

அப்போது அங்கே 'பாணர்' என்னும் பாடகர், முல்லை யாழ் தாங்கிச் 'சாதாரி' யென்னும் முல்லை நிலத்து இன்னிசையை அவ் யாழிலிட்டு மீட்டி இனிமையாக இசைத்துக்கொண்டிருந்தனர்.

தலைமகன் அம்மேடையின்மேலிருந்த ஓர் இருக்கையில் மலர்ந்த முகத்துடன் அமர்ந்து, எதிரில் இருந்த தன் புதல்வனை எடுத்துத் தன் மடியின்மேல் உட்கார வைத்துக் கொண்டு, பவழத் துண்டுகளைப் போலிருந்த அக்குழந்தையின் இரு கைவிரல்களையும் தன் இரு கைகளாலும் பிடித்து யாழின் பாட்டுக்கு ஏற்றபடி தாளங்கொட்டுமாறு செய்து மகிழ்ந்துகொண்டிருந்தான்

இப்பால் தோழிமார் சிலர் பக்கத்திலிருந்த கொடி முல்லை மலர்களைப் பறித்துக்கொடுக்கத் தலைவி மேடையில் அமர்ந்து அவற்றைத் தொடுத்தாள். பின்பு, அவற்றில் ஒரு

தொடுப்பைத் தலைவனது மடிமேல் அமர்ந்து கை தட்டிக் கொண்டிருந்த தன் புதல்வனது தலையில் வல்லமையாய்ச் சூடி மற்றொரு தொடுப்பை வாரி முடித்த தனது பின்ன லிலும் வளைவாக வைத்துச் சூடிக்கொண்டிருந்தாள். தோழி மார் அதனைத் திருத்திக்கொண்டிருந்தார்கள். தலைவன், தலைவியின் கூந்தலழகைத் தன் இரு கண்களாலும் பருகிக் கொண்டிருந்தான்.

அந்நேரத்தில் உள் நுழைந்த செவிலி இந்நிலைகளைக் கண் குளிரக் கண்டாள். வாழ்க்கை எப்படி இருக்கின்றது என்று நினைப்பாள்! உள்ளம் பூரித்துப் போனாள். அவள் உள்ளத்தில் இக்காட்சி அப்படியே நிலைபெற்றுவிட்டது.

சிலநாள் கழிந்தபின் செவிலி ஊருக்குத் திரும்பினாள். பெண்ணின் தாய், இவளை ஆவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்தாள். இவள் சென்றதும், பெண்ணின் வாழ்க்கை நலங்களைப்பற்றி வேட்கையோடு கேட்டாள்

அதற்குச் செவிலி, ‘ஆ, பாணர் முல்லைப் பண் பாட, ஒளிரும் அணிகலன்களையுடைய நம் ஒளி நெற்றிப் புதல்வி தன் கூந்தலில் முல்லை மலர்கள் சூடிக்கொள்ள, பெருந் தகையோனும் அத் தோன்றல், இன்னல் தீர்க்கும் இயல் பினையுடைய தன் புதல்வனுடன் விளங்கிக்கொண்டு மகிழ்ச் சியாயிருக்கின்றனன்’ என்று தான் முதல் நாள் கண்ட காட்சியை அப்படியே சொன்னாள் அனைவரும் மகிழ்ந்து கொண்டனர்

அன்றெல்லாம் அவர்களில்லத்தில் அதுவே பேச்சா யிருந்தது.

கணவனும் மனைவியும் தமக்குள் மாறு எதுவுமின்றிக் குழந்தையோடு பாடல் கேட்டு மகிழ்கின்றனரென்பது எவ்வளவு நலவாழ்க்கையாயிருக்கின்றது!

**குறிப்புரை** —வாணுதல் - வாள் நுதல், வாள் - ஒளி, நுதல் - நெற்றி. அரிவை - பெண். இனிது - மகிழ்வாய் நெடுந்தகை - பெருந்தகையோன். துனி-வருத்தம். கொள்கை-இயல்பு; ‘துனி

தீாகொள்கைப் புதல்வன' என்முள், கணவன் மனைவியாக்குள் ஏதேனும ஊடல் நேரினும, இப புதலவன காரணமாகவேனும் அவாகள் அது நீஙகபபெறுவாாகள் எனபதறகு பொலிநது - விளஙகி, கணவனும மனைவியும இக குழநதையோடு கூடி அளவளாவிககொணடிருபபது ஒரு பொலிவாயிருககிறது எனபது குறிபபு. (௪எ)

## கணவனும் குழந்தையும்

[இலவாழககையில் தாயதநதையரின அனபு குழநதையாகக கனிநது உருவாகினறது தநதையின அனபு குழநதையைத தழையச் செயதால தாயின அனபு அவவிருவரையுந தழையச செயகினறது அததகையோா இலலறம இவவுலகையே வெலலும ]

புதல்வற் கவைஇயினன தநதை, மென்மொழிப்
புதலவன தாயோ இருவருங கவையினள ;
இனிது மன்றஅவர் கிடககை
நனியிரும பரப்பினிவ வுலகுட னுறுமே

—ஐஙகுறுனூறு, ௪௦௯

திருமணஞ் செயது கணவன் வீட்டுக் கனுபபியபின், செவிலித்தாய ஒருகால் தன பெண வீட்டுககு வநது சில பகல தஙகியிருநதாள்.

ஒருநாள தலைமகன் எங்கோ வெளியே போயிருநது வீட்டுககு வநதான கைககால அலமபிக்கொணடான இதறகுள அபபா அபபா எனறு அவன் அருமைப் புதலவன ஓடிவநது அவன காலகளைக் கட்டிககொண்டான். புதல்வனை ஆவலாக வாரியெடுதது மாாபில் அணைததுக் கொணடு உளளேபோயச சன்னல பககமாயக காற ரோட்டமான இடததில் இடப்பட்டிருநத கட்டிலின்மேல் அமாநது, அபபுதலவனுடன் கொஞசி விளையாடித தலைவன் இளைபபாறிககொணடிருந்தான.

இதறகுள் தலைவி சிறறுண்டி ஒழுங்குசெயது எடுத் துக்கொண்டு அஙகே போனாள. சிறிது சாய்வாயப் படுத் திருநத தலைமகன், எழுநது உட்காாநதான. தலைவி, சிற

றுண்டிக் கலனை ஒரு பக்கம வைத்துவிட்டு, அருகில் அக் கட்டிலின் ஓரமாயச சிறிது நிறைசாய்வாய் உட்கார்ந்தாள். அப்போது குழநதையை மடியில நிறகவைததுச சிரிபபுக் கூட்டிப் பேசிககொண்டிருநத தலைவன், காதல் மேலீட் டால அப்புதலவனை அப்படியே மாரபில அணைதது இறுகத தழுவினன. அருகில அமாநது தலைவனமேற சிறிது சாயநது கொணடிருநத தலைவி அதுவே நேரமாகத தன காதலன் மேல நனகு சாயநது அவனையும அப புதலவனையும் ஒருங்கே தன இரு கைகளாலுங கழுமு அணைததுககொண் டாள் தலைவனுந தலைவியும அவ வின்பததிளைபபிற சிறிது நேரம அபபடியே கடடுண்டிருநதனா.

ஏதோ வேலையாய அப் பககம வந்த செவிலிககு இக் காட்சி தென்பட்டது. அவள உள்ளததில மகிழச்சி பெருககெடுததது இவ வொறறுமை எப்பொழுதும நிலைததிருககவேண்டும என்று நினைததுக்கொணடாள. மகிழசசிப பெருககால் பினபு தனககுள பினவருமாறும் நினைததுககொளகிறள .

'புதலவனைத தழுவினன தநதை; மெல்லிய மழலைச சொறகளையுடைய அப புதல்வனின தாயோ, அவவிருவரை யும் சோததுத தழுவினள. அவர்கள கட்டில இனிமை யானதெனபது தெளிவு. அக கட்டிலுககு மிகப பெரும பரப்பினையுடைய இவவுலகுமுழுதும சமமாகப பொருந தும.'

இபபடி அவள நினைததாள். உண்மையான காத லுள்ளவாகளுககு வாழககை யினபததில என்ன குறை!

குறிபபுரை: கவையினன் - அணைததனன 'மனற' என் னும சொல தெளிவுபபொருள் தரும ஆதலின் அதறகேற்ப உரைததுககொள்ளவேணடும கிடககை - படுககையிடம; இங்கே, கடடில எனபபட்டது. நனி - மிகவும, இரு - பெரிய. உடன - முழுதும் உறும - பொருநதும; சமமாகப பொருநதும என்று உரைததுககொள்ளவேணடும. மகப பேறறால, கணவன் மனைவியாககுள் அனபு குன்றுதெனபதற்கும இப பாட்டு ஒரு தகக சானருகும. (௧அ)

## மக்கட் பேறு

[பலர்க்கும் உதவியாயிருக்கும் பொருட்டே மக்கள் இல்வாழ்க்கை யமைப்பை மேற்கொள்ளுவது ; அதற்கு இல்லறம், பல படைப் புக்களும் படைத்திருத்தல்வேண்டும். நாடோறும் பலரோடு உடனிருந்து உண்ணும் நேய வாழ்க்கையும் வேண்டும். அந் நேய வாழ்க்கையைத் தொடர்ந்து நிகழ்த்தும்பொருட்டு மக்கட் பேறும் வேண்டப்படும் ]

படைப்புப் பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய் உடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை தாம்வாழு நாளே.

—புறநானூறு, ௧௮௮.

பாண்டியன் அறிவுடை நம்பி என்னும் பெரியார் இந் தப் பாட்டை இயற்றியிருக்கின்றார். ஆண் மக்களிற் சிறந் தோராயிருப்போரையே 'நம்பி' என்பர், இங்கே இச் சொல், 'அறிவுடை நம்பி' எனவும், 'பாண்டியன் அறி வுடை நம்பி' எனவும் அடைமொழிகள் ஏற்றுவருகின்றது. இந்த அடைமொழிகள் அவரை மேலும்மேலுஞ் சிறப்பிக் கின்றன அரசச் செல்வத்துடன் கூரிய அறிவுச் செல்வ மும் வாய்ந்த நல்லோராய் அவர் காணப்படுகின்றார். அவர், நற்குணமுடைய சான்றோருமாவர் ; 'நம்பி' என்பதனால் இது தெரிகின்றது. மாபெருந் தூயோரான பெரியார் பிசி ராந்தையாரால் நன்கு மதிக்கப் பெற்றவராதலின், அவர் சான்றோர் என்பது நன்கு பெறப்படும்.

இங்ஙனம் பல படைப்பும் அவர் படைத்திருக்கிறார் ; மேலும் பலரோடு உண்ணும் உடைப்பெருஞ் செல்வரு மாவர் ; பல நுகர்வுகளும் ஒருங்கு வாய்ந்த இப்படிப்பட்ட அருமைத் திருவாளர் ஒரு கருத்தைக் கூர்ந்தறிந்து சொன் னால், அது பல்வகையான உணர்வுப் பழக்கங்களின்

பிழிவாய் நுட்பமாய்ப் பொருத்தமா யிருக்குமென்று நம்பலாமன்றோ?

மேற்காட்டிய பாட்டில் அவர் ஓர் உண்மையை எடுத்துக்காட்டி, அதற்குரிய காரணங்களையும் விளக்கி யிருக்கிறார்.

உலகத்தில் வாழ்க்கைக்கு வேண்டிய பல அமைப்புகளும் அமைந்துவிட்டன என்பதற்கு அடையாளம், பலரோடு உடன் இருந்து உண்ணும் உயர்நிலையை அடைவது தான் இதுவே நல்வாழ்வு எனனும் இல்வாழ்வு

பலர் பெருஞ் செல்வரா யிருக்கலாம் ஆனால், பலரோடு உடனிருந்து உணணும் உடைப்பெருஞ் செல்வரா யிருப்பரென்று சொல்ல முடியாது. அப்படி யிருப்பதற்கு அறிவு குணம் முதலிய வேறு படைப்புகளும் வேணடும். செல்வம் கையிலிருப்பதனாலேயே, அச்செல்வம் அவர்க்கு உடைமையாய் விடாது, பெருஞ்செல்வமென்று மதிக்கப் படுவதுமாகாது அறிவு குணம் முதலிய பிற படைப்புகளும் வாய்ந்து அதனை அவர் அறவழியிற் பயன்படுத்தும் போதுதான் அச் செல்வம் அவர்க்கு உடைமையான செல்வமாகின்றது; உடைப்பெருஞ் செல்வமாகின்றது. இப்படிப் படைப்புப் பல படைத்துப் பலரோடு உணணும் உடைப் பெருஞ் செல்வராய வாழும் வாழ்வே 'வாழ்வு' எனப்படும்.

இத்தனை 'வாழ்வு' இருப்பினுங் 'குழந்தை' யில்லா விட்டால் அது குறைவுடைய வாழ்வேயாம்; மக்கட் பேறும் இருந்தால் அதுவே பெருவாழ்வாய் அமைந்து நிறைவடையும்.

குறிப்புரை. படைப்பு - செல்வப்பேறு. துழந்தும் - துழாவியும். அடிசில் - சோறு. மெய் - உடம்பு. விதிர்த்தும் - சிந்தியும். மயக்குறு - இன்பத்தால் மயக்குகின்ற பயம் - பயன். குறை - நிறைவாக்கும் பொருள். பயன் எனனும் நிறைவாக்கும் பொருள் இல்லாதவராவர் என்பது கருத்து. வாழ்வின் பயனை நிறைவாக்கும் பொருள் மக்கட்பேறாதலின், அங்ஙனம் உரைக்கப்பட்டது. பாணை

டியன் அறிவுடை நம்பியாரே இங்ஙனம் உரைப்பதனால், அம்முடிபு உண்மையான முடிபாகவே இருக்குமென்பதில் ஐய மொன்று மில்லை. (௧௧)

---

## 5. அரசியல்பு

### பிறர்க்கென வாழ்தல்

[அரசாட்சி என்பது குடிகளுக்காக, அரசனது நலத்துக்காக அன்று. பிறர்பொருட்டே அரசன் வளமுள்ளவனாகவும் அதிகார முள்ள வனாகவும் விளங்குகின்றான், அவன் உயிர்வாழ்வதே உலகத்திற்காக ஆதலால், அவன் பகைத்துப் போர் செய்தலும் நகைத்து உறவாடுதலுமெல்லாம் பொது நலத்தின் பொருட்டேயாம்.]

வாழ்க நின் வளனே நின்னுடை வாழ்க்கை
வாய்மொழி வாயர் நின்புகழ் ஏத்தப்
பகைவர் ஆரப் பழங்கண் அருளி
நகைவர் ஆர நன்கலம் சிதறி
ஆன்று அவிந்து அடங்கிய செயிர்தீர் செம்மால்!
வான்தோய நல்லிசை உலகமொடு உயிர்ப்பத்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
மாயிரும் புடையல் மாக்கழல் புனைந்து
மன்னெயில் எறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னிலைச் சிறப்பின் நின்நிழல் வாழ்நர்க்குக்
கோடற வைத்த கோடாக் கொள்கையும்
நன்றுபெரி துடையையால் நீயே
வெந்திறல் வேந்தேஇவ் வுலகத் தோர்க்கே.

—பதிற்றுப்பத்து, ௩௭

'அரசே, இந்த உலகத்தோர்பொருட்டு நின் செல்வமும் நின் வாழ்நாளும் வாழ்க' என்று காப்பியாற்றுக் காப்பியனார் என்னும் புலவர், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்னும் சேர அரசனை வாழ்த்துதல் இப் பாட்டின் கட் காணப்படுகின்றது.

உலகத்தில் யாரும் பிறருதவியின்றி உயிர்வாழ்தல் இயலாது. ஒருவர்க்கொருவர் உதவியாயிருக்கும் முறையிலேயே உலகியற்கை நடைபெறுகின்றது. இதனால், பிறர்க்கு உதவிசெய்வதன் வாயிலாகவே தமக்கும் வாழ்வு அமையும் அடிப்படையை எவரும் உடையவராயிருக்கின்றாரென்பது தெரிகின்றது. உலகியலின் மறைபொருள் இது.

புலவர் அச் சேர மன்னனை நின்பொருட்டு நீ வாழ்க என்று வாழ்த்த விரும்பாராயின், அவ் வாழ்வு உண்மையான வாழ்வன்றாதலின், அது சேரன் பெருமையைக் குறைப்பதாயிருக்கும். சேரனுக்கும் எழுச்சியும் இன்பமுந் தந்திராது.

இந்தப் பாட்டில், அவனுக்குள்ள பல குணங்களைப் பற்றிக் கூறும்போதும், அவன் பலர்க்கும் தண்ணளி செய்யும் முறைமையே கூறப்பட்டிருக்கின்றது. பாட்டின் பொருளை நோக்க, அது விளக்கமாகும். பொருள் வருமாறு :

' உண்மை மொழிகளையே பேசும் நாவினையுடையோர் நின்புகழை ஏத்த, பகைவர்களும் மன நிறையும்படி பழைய கண்ணோட்டம் அருளிச்செய்து, நண்பர் மன நிறையும்படி சிறந்த அணிகலன்களை அவர்களுக்குச் சிந்தி, அவ்வாற்றாற் பெருமித மெதுவுங் கொள்ளாமல் அறிவு அகன்று புலனவிந்து அருளிலடங்கிய தீதுதீர்ந்த தலைவனே! வானவரையிற சென்ற மிக்க புகழ் உலகத்தின்கண்ணும் மணக்கும்படி, பகைவரால் நிலைகலங்குங் குடிமக்களை அங்ஙனங் கலங்காதபடி நினது பேராண்மையால் ஒழுங்குசெய்தமைத்த வலம்படு வென்றியும், பெருமைக்குக் காரணமான கரிய பனந்தோட்டு மாலையும் சிறந்த வீரக்கழலும் அணிந்து நிலைத்த பகைவர் அரணை அழித்து அங்கிருந்த வீரர்களைத் தருவித்துப் பழமையான நிலைபெற்ற சிறப்பினையுடைய நின் நிழல்வாழ் வீரர்க்குக் கொடுமையில்லாதபடி அடக்கிவைத்த நிலைகோணாத கொள்கையும் நீ மிகப்பெரிதும் உடையை. கடிய ஆற்றல் வாய்ந்த வேந்தே! இவ்

வுலகத்தார் பொருட்டு நின்வளன் வாழ்க, நின்னுடைய வாழ்நாட்கள் வாழ்வனவாக!'

முதல் ஐந்து வரிகளில் அவன் தன்னைப் பகைப்பவர்க்கும் அருளுதலும் தன்னை மகிழ்பவர்க்கு உதவுதலும் சொல்லப்படுகின்றன. பின் வரிகளில் அவன் வென்றியும், அவன் நிழல்வாழ்வார்க்கு அருளுங் கொள்கையுங் கூறப்படுகின்றன. நினைக்குமிடத்து, எல்லாம் பிறர்க்கு உதவுதலாகவே இருக்கின்றன.

இத்தகையோரே அறிஞர்களால் வாழ்த்துதற்குரியவர்.

**குறிப்புரை** —வளன் - செல்வம். வாழ்கவை - இங்கே வாழ்நாள். வாயர் - நாவினையுடையவர் அல்லது பேச்சினையுடையவர். ஆர் - மனம் நிறைவுடைய பழங் கண் - இங்கே, பழைய கண்ணோட்டம் என்று பொருள் கொள்ளுவது சிறப்பு. நகைவர் - தன் சார்பில் மகிழ்ச்சியுடையவர்கள்; அவர்கள், நண்பர் இரவலர் முதலியோர். கலம் - அணிகலன். சிதறி - சிந்தி. செயிர் - தீது. செம்மல் - தலைமையுடையவர், செம்மால் - தலைவரே. நல இசை - மிக்க புகழ் உயிர்ப்பமணக்க. துளங்கு - அசைகின்ற; அதாவது, கலங்குகின்ற. வலம்படு வென்றி - மேலுமேலும் வெற்றிகள் உண்டாவதற்குரிய அடிப்படையான வெற்றி புடையில - மாலை. கோடு - கொடுமை கோடா - கோணாத நன்று பெரிது - மிகப் பெரிது. உலகத்தோர்க்கு - உலகத்தோர்பொருட்டு. (௨0)

## கொடையும் வீரமும்

[புகழுக்குக் கொடை அடிப்படை, கொடைக்கு வீரம் அடிப்படை; அரசனுக்கு வீரமும் கொடையும் மேம்பட்டிருத்தல் வேண்டும். அதனால், நாட்டில் அறிஞர்களும் கலைஞர்களும் ஓங்கி, மக்கட்கு வாழ்க்கையில் விளக்கம் உண்டாகி வாழ்தலும் மிகும் தெருவெலாம் அவன்புகழ் முழக்கம் பெருகும்.]

அட்டு ஆனானே குட்டுவன்; அடுதொறும்
பெற்று ஆனாரே பரிசிலர் களிறே;
வரைமிசை இழிதரும் அருவியின் மாடத்து
வளிமுனை அவிர்வருங் கொடிநுடங்கு தெருவில்

சொரிசுரை கவரும் நெய்வழிபு உராலின்
பாண்டில் விளக்குப் பரூஉச்சுடர் அழல
நன்னுதல் விறலியர் ஆடும
தொன்னகர் வரைப்பின்அவன் உரைஆ னவே.

—பதிற்றுப்பத்து, ௪௭.

'செங்குட்டுவன் பகைவரை அழித்து அமையான், பகைவரை அழித்து அவன் வெற்றிபெறுந்தோறும் பரி சிலா களிறுபெற்று அமையார், தெருவில் விறலியா ஆடல் பாடல் செய்கின்ற பழமையான நகரங்களில் அவன் புகழ் நிறைந்து அமையா' என்பது இப்பாட்டின் பொருள்.

அதனை மேன்மேல் வீரமும மேன்மேற் பரிசளித்த லும இவற்றால் மேன்மேற் புகழ் பெறுதலும உடையவன் குட்டுவன் என்பது கருத்து.

கருத்தை வெளிப்படுத்தும முறை பாட்டில் நன்கு யிருக்கின்றது.

குறிப்புரை: அட்டு - கொன்று, இங்கே, அழிக்தென்னும கருத்தில் வந்தது. ஆனுன - நிறைவுடையான. களிறு - யானை. இழிதரும - வீழ்கின்ற, வளிமுனை - காற்றுள்ள இடத்தில்; முனை - இடம அவிர்வரும - விளங்குகின்ற 'வரைமிசை அவிர்வருங் கொடி' என்பதற்கு, 'மலையின்மேல அசைந்து வீழ் கின்ற அருவியைப்போலக், காற்று வீசுகின்ற மேலிடத்தில் விளங்கு கின்ற கொடி' என்பது பொருள் நுடங்கும - அசைகின்ற. மாடத்திற் கொடிகள் அசைகின்ற தெரு, 'தெருவில தொன்னகா' என்பதற்கு, 'தெருவினகண், நெய்சொரி திரிக குழாய் ஏற்றுக்கொண்டிருக்கின்ற நெய்யை விளக்குகளில் வழிய விட்டுக்கொண்டு அங்கும இங்கும சிலா செலல, அக் காற்றுவிளக்கு களின் பருமன்ன சுடா ஒளிவிட்டு எரிய, அதன வெளிச சத்தில் அழகிய நெற்றியையுடைய விறலியா ஆடல பாடல செய்யும பழைய நகா' என்பது பொருள். சொரி - ஊற்றுகின்ற, சுரை - உள் புரையுடையது; இங்கே, திரிக்குழாயக்கு வந்தது கவரும - ஏற்றுக்கொண்ட. வழிபு - வழியவிட்டு. உராலின - உலவுதலின். பாண்டில விளக்கு - காற்றில அவிந்துவிடாதபடி வைக்கும பெரிய

அகல் விளக்கு. பரூஉ - பருமனான. அழல - எரிய. நல - அழகிய. நுதல் - நெற்றி. விறலியர் - ஆடல் பாடல் செய்யும் ஒருவகைச் சாதி மகளிர். தொல் நகர் - பழைய நகரங்கள். இங்கே குறிப்பிடப்பட்டவை அரசுடைய நகரங்கள். வரைப்பின் - எல்லையில்; அந் நகர எல்லைகளில் என்பது கருத்து. உரை - புகழ் மொழிகள். ஆனு - நிறைந்து அமையா. (உக)

## அரசனுக்கு இருக்கவேண்டிய மாட்சிமையான இயல்புகள்

[தம்மை மதிப்போர் எளியராயினும் அவர்களை மதித்து அணைத்துக் கொள்ளுதல் அரசர்க்கு இன்றியமையாதது, பிறரைக் குறையே கூறுவோர் சொல்லில் நம்பிக்கையின்மையும், நடுவு நிலைமையும், அருளெண்ணமும், வீரமும், அன்பும், எதனையும் ஆராய்ந்து செய்தலும் அவர்கட்கு வேண்டும்]

வழிபடு வோரை வல்அறி தீயே;
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே,
நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி;
வந்துஅடி பொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும் தணிதிநீ பண்டையின் பெரிதே,
அமிழ்துஅட்டு ஆனாக் கமழ்குய் அடிசில
வருநர்க்கு வரையா வசைஇல் வாழ்க்கை
மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர்
மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப!
செய்துஇரங் காவினைச் சேண்விளங் கும்புகழ
நெய்தலங் கானல் நெடியோய்!
எய்தவந் தனம்யாம், ஏத்துகம் பலவே.

—புறநானூறு, கO.

"நெய்தலங் கானல்" என்பது ஓர் ஊர்.* அது

* 'நெய்தல் வாயில் அல்லது நெய்வாசல் என்று காவிரிப்பூம்பட்டினத்துக்கருகே ஓர் ஊர் உள்ளது' என்று ஆசிரியர் உ. வே. சா. அவர்கள் தமது பதிப்புக் குறிப்பிற் குறிப்பிட்டிருக்கின்றனர்.

'சோழன் இளஞ் சேட் சென்னி' என்னும் அரசனுக்கு உரியது. ஒரு நாள் 'ஊன்பொதி பசுங்குடையார்' என்னும் புலவர்பிரான் அவனிடம் போனார். அவனிடம் அமைந்திருக்கும் நல்லியல்புகளை அவன்முன் எடுத்துப் பாராட்டி, அவனோடு அளவளாவி மகிழவேண்டுமென்று அவருக்கு விருப்பமுண்டாயிற்று. அந்த விருப்பம் இந்தப் பாட்டாக மலர்ந்தது.

"பெருமானே, உன் எண்ணங்களின் வழியே நடந்து கொள்கின்றவர்களை நீ விரைவாய்த் தெரிந்து அணைத்துக் கொள்கின்றாய், பிறரிடமுள்ள குற்றங்களை மட்டும் பிரித்தெடுத்துச் சொல்லுகிறவர்களின் சொற்களில், நீ நம்பிக்கை வைப்பதில்லை. நீ உண்மையென்று தீர் மானித்த குற்றம் ஒருவனிடம் காணப்பட்டால், முறைக் குப் பொருந்த ஆராய்ந்து அதற்குத் தக்கபடி அவனைத் தண்டிக்கின்றாய். அப்படித் தண்டிக்கப்பட்டவன், தான் உள்ளந் திருந்தி வந்து உன் திருவடியையடைந்து முன் நிற்பானானால், நீ முன் நிலையைவிட மிகுதியாக அருள் கூர்ந்து அந்தத் தண்டனையையும் நீக்கிவிடுகின்றாய்.

"அமிழ்தத்தின் பெருமையைக் குறைத்து உண்ணத் தெவிட்டாதபடி, அத்தனை மணம் வீசும் தாளிப்புப் பொருந்திய பொங்கல் உணவை, வருகின்ற விருந்தினர்க்கு அளவு படுத்தாமல் வழங்குகின்ற, பழியில்லாத மனை வாழ்க் கையையுடைய நின் வாழ்க்கைத் துணைவியரே, நினது மார்பைத் தமது அன்பினால் மாறுபடுத்துவரே யல்லாமல், பகை வீரர் தமது போரால் மாறுபடுத்துவதென்பது இல்லை. வான விலலுக்கு ஒப்பான பல நிறங்கள் அமைந்த மலர் மாலைகளை அணிந்த அத்தகைய மார்பை யுடையவனே!

"ஏதேனும் ஒன்றைச் செய்துவிட்டுப் பின் என்ன செய்துவிட்டோம் என்று இரங்கிக்கொண் டில்லாதபடி அமைந்த செயல் திறமையும், தொலைவான இடங்களிலும் விளங்குகின்ற புகழும் உடைய பெரியோய்! நெய்தலங் கானல் என்னும் ஊர்க்கு உரிய தலைவ! உன்னிடம் உள்ள

இந்த உயர் குணங்கள் கண்டு உன்னேடு அளவளாவும் பொருட்டு உன்னை அணுக வந்தேன், எனக்குள்ள மகிழ்ச்சியால் உன்னை இப்படி பலவாக ஏத்துகின்றேன்." இவை இந்தப் பாட்டிலுள்ள கருத்துக்கள்.

இதனால் ஓர் அரசனுக்கு இருக்கவேண்டிய நல்லியல் புகள் இவையென்பது நன்கு புலப்படுகின்றது.

குறிப்புரை:—வல - விரைவாய் அறிதீயே - அறிதியே, அதாவது, அறிகின்றனேயே என்பது. அட்டு - இங்கே அடக்கி என்னும் கருத்தில் வந்தது மலைத்தல் - மாறுபடுத்தல். மள்ளா - வீரா. நெடியோய் - பெரியோய் எய்த - அணுக (உஉ)

## அரசனுக்கு அறமே முதன்மை; படை முதன்மையன்று

[வெற்றிக்குக் காரணம் படை வலிமையன்று, அற முறைமையே. அறம் என்பது நடுநிலைமை, அதாவது, நம்மவரென்று அவரது தீமைக்கும் ஆக்கமும் அயலவரென்று அவரது நன்முயற்சிக்கு அழிவும் சூழாதிருத்தல். வீரமும், மென்மையும் கொடையும் உரிய விடங்களிற் புலப்படுத்தித் தனது கடமையைக் காத்தல். இதனால் நாடு வளமும் பெறும்]

ஓங்குமலைப் பெருவில் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூஎயில் உடற்றிப்
பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல
வேந்துமேம் பட்ட பூந்தார் மாற!
கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல் மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும், மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்; அதனால்,
நமரெனக் கோல்கோடாது
பிறரெனக் குணங்கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்

வானத் தன்ன வண்மையும மூன்றும்
உடையை யாகி இல்லோர் கையற
நீநீடு வாழிய, நெடுந்தகை! தாழ்நீர்
வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறைக்
கடுவளி தொகுப்ப ஈண்டிய
வடுஆழ் எக்கர் மணலினும் பலவே.

—புறநானூறு, ருரு.

பழைய காலத்திற் புலவர்களுக்கு நல்ல செல்வாக்கிருந்தது காரணம், அவர்கள் சிறந்த கொள்கைகளும் உயர்ந்த ஒழுக்கங்களும் உடையவர்களா யிருந்தமையே. 'மதுரை மருத னிளநாகனார்' என்பவர் அக்காலத்திலிருந்த அரிய புலவர்களுள் ஒருவர், அவர் சான்றோர் அவர் காலத்துப் பாண்டிய மன்னன், அவரிடத்தில் உயர்ந்த மதிப்பு வைத்திருந்தான். அந்த அரசனைப் 'பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்' என்பர்.

அரசர்களுக்கு அரசியலில் எத்தனையோ வகையான மன அலைவுகள் இருக்கும். அந்த அலைவுகளால் அவர்கள் அறநெறியில் தவறிவிடாமலிருக்க வேண்டுவது, கடடாய மாகும். அதற்காக அவர்கள், எப்போதும் பெரியோர்களின் அறிவுமொழிகளைக் கேட்பதில் உள்ளமுடையவர்களாயிருப்பார்கள் புலவர்களும் அந்த விருப்பந் தெரிந்து, சிறந்த கருத்துக்களை அவர்கள் உள்ளத்தில் ஊன்றி, அவர்களையும் நாட்டையும் நல்வழிப்படுத்துவார்கள் கேட்பவர்களுக்கு இங்ஙனம் செவியறிவுறுத்தும் செயல், நூலில், 'செவியறிவுறூஉ' என்று வரும். இந்தப் பாட்டில் அச் செயல் காணப்படுகின்றது.

புலவர் அரசனை நோக்கி, 'மாற!' என்று அழைக்க முற்பட்டவர், 'அழகிய மலர் மாலைகளை அணிந்திருக்கும் மாற' என்று மங்கலமாக அழைக்கின்றார்; பாண்டியனே என்பது கருத்து. அப்படி அழைக்கும்போது ஒரு சிறப்புத் தருகிறார். 'சிவபிரானுக்கு, இரண்டு கண்களுக்குமேல்

நெற்றியில் ஒரு சிறப்புக் கண் உண்டு. அதுபோல, தமிழ நாட்டிலுள்ள சேர சோழ பாண்டிய வேந்தர்களுள் பாண் டியனை நீயே மற்ற இரண்டு அரசர்களைவிட மேம்பட்ட வனாயிருக்கின்றாய்' என்றார். சிவபிரான் என்று சொல்லும போது அவருடைய சிறப்புகளை, 'மலையாகிய வில்லில் பாம பாகிய கயிற்றைக் கட்டி ஓர் அம்புகொண்டு முப்புரங்களை அழித்துத் தேவர்களுக்கு வெற்றியைக் கொடுத்த, கறை யைக் கழுத்தில் உடைய அண்ணல்' என்றும், 'அவ ருடைய அழகிய தலையில் நெற்றியின்மேல் பிறை வைத் திருக்கின்றார், அந்த நெற்றியில் ஒரு கண் உண்டு அதனைப் போல' என்றும் முதல் ஐந்து வரிகளில் வெற்றிச் சிறப் பாகக் கூறிக்கொண்டார்.

அதன்பின், அடுத்த பத்து வரிகளில் அரசனுக்கு நல்ல கருத்துக்களை அறிவுறுத்துகின்றார்.

"ஓர் அரசனுக்கு யானை குதிரை தேர் காலாள் என்று நான்குவகையான படைகளும் இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். மேலும், கடுமையான சினத்தோடுகூடிய கொல்கின்ற யானைகளாகவும், விரைவான ஓட்டமுடைய மனம் செருக்கின குதிரைகளாகவும், நீண்ட கொடியை யுடைய உயர்ந்த தேர்களாகவும், அஞ்சாத நெஞ்சை யுடைய போர் விரும்பும் வீரர்களாகவும் அவை மாட்சி மைப்பட்டிருப்பதாகவே வைத்துக்கொள்வோம். ஆனாலும், அரசாட்சியின் வெற்றி, அந்தப் படைகளால் இல்லை. அர சாட்சியின் வெற்றி, அறநெறியையே அடிப்படையாகக் கொண்டுள்ளது.

"அதனால், நம்மவர்களென்று ஒரு பக்கமாயச் சாய்ந்தும், அயலாரென்று அவர்கள் நற்குணங்களைப் பாராட்டாமலும் நீ இருக்கக்கூடாது. நடுநிலைமை என்னும் அறநெறியை நீ கடைப்பிடித்திருக்க வேண்டும்.

மேலும், வீரங் கொள்ளவேண்டிய இடத்தில் நீ ஞாயிற்றைப்போலக் கொடிய வலிய ஆண்மையுடையவ னாக இருக்கவேண்டும்; அன்பு காட்டவேண்டிய இடத்

தில நிலாவைப்போலக் குளிர்ச்சியும் மிக மெனமையு முடையவனுக இருக்கவேண்டும, உதவி செயயவேணடிய இடததில மழையைபபோலப பயன கருதாமலும எல லாாககும ஒபபவும தாராளமாகவும வழஙகும வள ளனமை யுடையவனுகவும இருககவேண்டும, இநத மூன்று குணஙகளும நீ ஒருஙகே உடையவனு யிருகக வேண்டும.

"அப்படியிருநதால நினது நாட்டில் செலவமிலலா தவரே இருககமாட்டாாகள, எலலாரும நலம நிறைநதவர் களா யிருபபாாகள்" எனபதே அப் புலவா அறிவுறுததிய அறிவு மொழிகள.

பினபு, "கடலில வெண்ணிறமான தலையையுடைய அலைகள அலைக்கினற திருசசெநதூர் எனனுந திருப்பதியில பெரியோனுன முருகவேள் நிலையாய எழுநதருளியிருக்கும அழகிய அகனற கடல துறையில, பெரிய காறறுத திரட்ட அதனுல குவிநதிருக்கும, வடுககள ஆழநத மணற குவியல் களில எததனை மணலகள இருககினறனவோ அவைகளை விட மிகுதியான பல ஆண்டுகளாகப பெருநதகையே, நீ நெடுஙகாலம வாழுவாயாக" எனறு கடைசி ஐநது வரி களில ஓா அருமையான வாழ்ததுங கூறி முடிக்கின்ருா.

இந்தப பாட்டில, அரசாட்சியின வெறறிக்கு அற நெறியே முதற காரணம எனபதும, அறநெறியிலலாத அரசு எவவளவுதான படைவலி உடையதாயினும முடி வான வெறறியைப் பெறமுடியாதெனபதும படைகள் ஓரளவுக்கே துணைககாரணமாக உதவும எனபதும, அற நெறியாவது எப்போதும நடுவுநிலைமையா யிருப்பதோடு எஙகெங்கே தேவையோ அஙகஙகே வீரமும அன்பும வளளனமையுங காட்டுங கடமையுணாவோ டிருபபதுமே யாம எனபதும, ஒனருெடொன்று வேறுபட்ட வீரம, அனபு, வளளன்மை என்னும இம மூனறு குணங்களும ஒருவரிடமே ஒருஙகிருக்கவேண்டுமெனபதும, இக் குணங் களையுடைய அரசனது நாட்டில, எலலாரும நலம நிறைந்த

வர்களா யிருப்பார்கள் என்பதுமாக உயர்ந்த கருத்துக் ளெல்லாம் கவர்ச்சியாய் அமைந்திருக்கின்றன.

**குறிப்புரை** —ஞாண - கயிறு, கொளீஇ - இங்கே, கட்டி என்னும் கருத்தில் வந்தது. மூ எயில் - முப்புரம், உடற்றி-அழித்து. காமர் - அழகு பிறை நுதல் - பிறையை மேலே சூடியிருக்கும் நெற்றி, வேந்து - வேந்தர்களில், மூவேந்தர்களில் என்று கொள்க. பூந்தார் என்பதில் பூ, அழகு கதழ் - விரைவு உணர்த்தும் பரி - நடை, பரிய - நடையையுடைய புகல - விரும்புகின்ற. மாண்ட - மாட்சிமைப்பட்ட. கொற்றம் - வெற்றி சாயல் - மென்மை. கையற - இல்லாமற் போக புணரி - அலை வியல் - அகலமான ஞணடிய - குவிந்த வடுவாவது, காற்றினால் மணலில் அலையலையாகத் தோன்றுவது, எக்கர் - மணற்குன்று. (உரு)

## கல்வி கற்றலைப்பற்றி ஓர் அரசன் சொல்லும் சொல்

[கல்வி எவ்வளவு இடர்ப்பட்டும் பொருளிழந்தும் கற்றற்குரியது, தாயின் அன்புள்ளமும் அரசன் அறிவுள்ளமுங்கூடக் கல்வி யுடையோன் பக்கமே திரிந்துவயமாகும், கல்விக்குமுன், குலத்தின் மதிப்பு ஒரு மதிப்பாகாது]

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே,
பிறப்புஓர் அன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயுமனம் திரியும்,
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
'மூத்தோன் வருக' என்னாது அவருள்
அறிவுடை யோனாறு அரசும் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே.

—புறநானூறு, கஅங

இது, 'பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன்' என்னும் அரசன் பாடிய பாட்டு. கற்றலின் சிறப்பைப்பற்றிப் பாடியிருக்கிறான். இவன் பெரிய

அரசன்; செல்வத்தில் திளைப்பவன். இப்படிப்பட்டவன், தானே நன்றாய்ப் படித்துப் பெரும் புலமை பெற்றிருப்பதுடன், மற்றவர்களுக்கும் அக் கல்வியின் சிறப்பை எடுத்துக்காட்டுகிறான். கல்வி நிலையைப் பற்றி ஒரு புலவர் பாராட்டுவதைவிட ஓர் அரசன் பாராட்டிச் சொல்லுவதே சிறந்தது. அதுவும் விளக்கமாகச் சொல்லியிருக்கிறான.

"ஒருவன் தன் ஆசிரியர்க்கு இடர் உண்டாகுங் காலங்களில் உடனிருந்து உதவியும், அவருக்கு மிக்க பொருளைக் கொடுத்தும், அவரைப் பின்பற்றி நின்று வழிபடுதலில் கசப்புக் கொள்ளாமல் அவரிடம் கல்வி பயில்வது நல்லது.

"பிறப்பில் ஒரு தன்மையாக ஓரே வயிற்றிற் பிறந்தவர்களிலும், கல்விச் சிறப்புள்ள பக்கம், தாயும் மனம் வேறுபட்டு விரும்பிநிற்பாள.

"ஒரு குடும்பத்திற் பிறந்த மக்கள் பலருள், ஆண்டில் மூத்தவனை வருக என்று அழையாமல், அவர்களுள் கல்வியறிவிற் பெரியவன் எவனோ அவனைத் தன் அரசவையில் அழைத்து வைத்து, அவன் கூறும் அறிவுரை வழியே அரசனும் நடந்துகொள்வான்

"வேறுபாடு கருதப்பட்ட நான்கு குலங்களுள்ளும் கீழ் குலத்தைச் சேர்ந்த ஒருவன் கல்வி கற்றிருந்தால், மேல் குலத்தைச் சேர்ந்த ஒருவனும் அவனிடத்தில் வந்து அவன் வழியாவான்" என்பது.

'கற்றல் நன்று' என்பது கருத்து. 'தாயின் அன்புள்ளம், அரசன் அறிவுள்ளம் என எல்லாம் கல்வியின் வழியில் வயமாயவிடும்' என்னுங் கருத்து இப் பாட்டில் தெளிவாக அமைந்திருக்கின்றது.

**குறிப்புரை:** உற்ற உழி - உற்ற காலம் உறு - மிக்க. பிற்றை நிலை - பின் நிற்கும் நிலை; பின்பற்றும் நிலை; அதாவது வழிபாட்டு நிலை ஆறு - வழி; அவன்கண் படும் - அவனிடம் வந்து வயமாவான.

(உச)

## அரசன் வரிப்பொருள் வாங்கும் முறை

[குடிமக்களுக்கு மேன்மேலும் வளமுண்டாக்கிக் கொடுத்து அரசன் அவர்களிடம் அன்புடன் திறை பெறுதல்வேண்டும்; பகுதி பகுதியாகவும் எளிய முறையிற் பெறுதல் வேண்டும்; அதிகாரமும் ஆரவாரமும் இவ்வகையிற் பயன்படா. தானுங் கெட்டு உலகமுங் கெடுதற்கே அவை இடமாகி விடும்.]

காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்,
நூறுசெறு வாயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்,
அறிவுடை வேந்தன் நெறிஅறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்,
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்,
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே.

—புறநானூறு, ௧௮௪.

பாண்டியன் அறிவுடை நம்பி என்பவர் அரசர்; சிறந்த புலவருமாவர். இவர் காலத்தில், அப் பாண்டி நாட்டிற் 'பிசிர்' என்னும் ஓர் ஊரில், 'ஆந்தையார்' என்னும் புலவர் பெருமானும் இருந்தார். பெரும்பாலும் ஊரின் பெயரும் சேர்த்துப் 'பிசிராந்தையார்' என்றே அவரை அழைப்பார்கள். அவர், தூய்மையும் ஆற்றலும் நிறைந்த பெரியார்.

ஒருநாள் பாண்டியன் அறிவுடை நம்பியினிடம், பிசிராந்தையார் வந்தார். இருவரும் புலவர்கள், மேலும் ஒருவர் வளத்தில் மிகுந்தவர் ஒருவர் தூய்மையிற் சிறந்தவர். ஆகவே இந்தச் சந்திப்பு அவர்களுக்கு எவ்வளவோ மகிழ்ச்சி தந்திருக்கும். நம்பி ஆந்தையாரைத் தகுதியாக

வரவேற்க இருவரும் மகிழ்ந்து அமர்ந்து, அவரவா நலங்கள் குறித்து உசாவி மனங் கலந்து பேசிக்கொண் டிருந்தனர்.

பிசிராந்தையார் தூய சான்றோராதலால், குடிமக்கள் வாழ்க்கை நலங்களிலும அரசன் அரசியல முறைகளிலும் அவர் சிறப்பான கருததுககளை அழகாக வெளியிடக் கூடு மென்று கருதி நமபியாா, பொதுவில அரசியல பக்கமாய்ச் சறறு விரிவாகப் பேசிககொண் டிருநதாா பேசசு அரசன குடிமககளிடம திறைகொள்ளும் முறைகளைப்பறறி வநதது. நம்பியாரும இநதக கருததில மிக்க அககறையுள்ளவராத லால, கருததாகக கேட்டுக்கொண்டு வநதாா. சொலலு வோா பிசிராநதையாராதலால, அவா நலல உவமையையும இடையே கோததுப் பேச்சை அழகுபடுததுவாா எனறும அவாக்குத தெரியும் அபபோது பிசிராநதையாா, அது குறிததுத தமது கருததைப பினவருமாறு வெளியிட்டாா.

“குடிமக்கள தமது திறைபபொருளைத தாமே அன் புடன் செலுததுமபடி அரசன் நடநதுகொள்ள வேண்டும. மேலும், அவாகள பகுதி பகுதியாக அதனை எளிதிற் செலுததவும இடங்கொடுகக வேண்டும இவ வகைகளில், அரசன தன் ஆட்சி வலியைச் செலுததி, தானே முனைநது போய அவர்கள திறையை வலிநது கொளளப் பாாபபது நல்லதாகாது.

“தன் குடிமக்கள மேலுமமேலும வளமாகவும நல மாகவும வாழவதறகு, தான் இனனும எனனென்ன செயயலாம எனறு அரசன் தன அறிவு நுட்பததால ஆராயநது அவவபபோதும நலல நல்ல வழிகளையும வசதி களையும அவாகளுக்கு உண்டாக்கிககொண்டிருக்க வேண டும. அறிவுடைய அரசனுககுததான் இது முடியும்.

“அப்படியல்லாமல் அறிவில அவன் மெல்லியவனு யிருநதால, அவனுல் புதுப் புது வழிகளும் வசதிகளும் கண்டுபிடிக்க முடியாது. நல்ல அமைச்சர் முதலானவர் களைத் தனக்கு உயர்ந்த உத்திகள் கூறும் சுறறமாக அவ னுல் அமைததுக்கொள்ளவும் முடியாது. தரம் அறியாத

சுற்றங்களே வெறும் ஆரவாரத்தோடு அவனைச் சூழ்ந்திருப்பார்கள். அவர்கள் உயர்ந்த உறுதிகள் தேர்ந்து அரசனுக்குச் சொல்லாமல், அரசன் சொல்வனவெல்லாம 'சரி' 'சரி' என்று தாமும் ஒத்துக் கூறிவிடுவார்கள்.

"இந்தக் காரணங்களால், குடிமக்கட்கு நலம் விளையாமற்போகும். அதனால் அவர்களுக்கு வருவாய் குறைந்து பகுதிப் பணம் கட்டமுடியாமலும் போகும். அப்போது இந்த அறிவு மெலிந்த அரசன், தன் ஆட்சி வலிவைச் செலுத்திக் குடிமக்களுக்குப் பின்னும் அன்பு கெடும்படி, கட்டாயமாய்த் திறைப்பொருள் திரட்டவேண்டிய நிலை உண்டாய்விடும். அப்போது தகுதியறியாத இந்தச் சுற்றங்களும் அப்படித்தான் செய்ய வேண்டுமென்று மேலுந் தூண்டி, தாமே அதற்கு உதவியாயிருந்து, கல்லென்று ஆரவாரமாய்ப் போய், குடிமக்களை அலைத்துக் கெடுக்க முற்படுவார்கள். இதனால், அவர்களுக்கு எதிர்பார்க்கும் அளவு திறை கிடைப்பதில்லை. குடிகள் கெட்டுவிடுதலால், மறுபடியும் மறுபடியும் அவர்களிடமிருந்து திறைப்பொருள் வருதலும் நின்றுவிடுகிறது. ஆகவே அறிவுமெலிந்த அரசன், தானும் உண்ணாமல் உலகமும் கெடுவதற்கு இடமாக்கிவிடுகின்றான்.

"ஆனால், அறிவுள்ள அரசனது ஆட்சியில், குடிமக்கள் மேலுமேலும் வளமுறுவதனால், அரசனுக்கு அவன் உண்டாக்கிக் கொடுக்கும் புதிய வழிகளில் பல புதுப் புது வரிகள் கிடைக்கவும் இடமிருக்கின்றது, குடிமக்களும் அவ்வழிகளைக் கடைப்பிடித்து முயற்சியோடு தழைக்கவும் இடமிருக்கின்றது, திறையும் அரசன் இருக்குமிடத்தைத் தேடிவரும். ஆண்டுதோறும் கிடைப்பதற்கும் கிளை வாங்கிச் செல்கின்றது.

"யானை இருக்கிறது; அது மக்களுக்கு அருமையாய்ப் பயன்படும்போது, மக்கள், விளைந்த நெல் கதிர்களை அறுத்து யானை இருக்குமிடத்திற்குக் கொண்டுபோய்க் கவளங் கவளமாகக் கொடுக்கிறார்கள். அந்த முறையிற

பார்ததால், ஒரு மா அளவு சிறிய நிலமாயிருநதாலும் அதில் விளைநத நெல யானைககுப் பல நாள் உணவாய உதவும; மக்களும் ஆண்டுதோறும் விளைதது அதற்குக் கொடுததுக் கொண்டிருப்பார்கள். ஆனால் மககளுக்குப் பயன்படாத நிலையில் யானைக்கு, யாரும உணவு தரமாட்டாாகள்; தான் இருக்குமிடததிறகு உணவு வராமையால் அநத யானையே வயல்களுக்குத தனியாய் வநது, தனக்குள்ள வலிமையால தன்னை யாரும அணுகித தடைசெயயமாட் டாாகள் என்று கருதி நெறகதிாகளை உண்ணத தொடங் கினால, தனிததனியான நெறகதிா அதன் வாய்க்குப் பிடி படாமையாலும அஃது அங்குமிங்கும அலைததுககொண்டு போவதனாலும, அநேக நூறு கழனிகள் இருககுமாயினும் அதன் வாயினுள் போவது சிறிதாகததான இருக்கும். வாய உண்பதைவிட அதன் காலகள் மிதிததுக் கெடுதது விடுவதே மிகுதியாயிருக்கும.

"ஆதலால அறிவுடைய வேநதன் மேறகாட்டியபடி முறையறிநது கொண்டால, குடிமககள கோடி கோடி யாகத திறைபபொருளை உண்டாக்கிக் கொடுததுத தாமும் மிகவும தழைபபா. அரசன் அறிவில மெலிநதவனாய், எப்போதும தகுதியறியாத ஆரவார மிகக அமைசசா் முதலிய சுறறஙகளோடு அன்புகெடக் கொள்ளும திறைத தொகுதியை விரும்பினால, அநத யானை கழனி புகுந்தது போல, தானும் உணணான உலகமும கெடும" என்பது.

இதைக கூாநது கேட்டுக்கொணடிருநத நம்பியார், இக் கருததுக்களின மேனமைக்கும அழகுககும உவமைக் கும மிகக மகிழசசியடைநது, பிசிராநதையாரை மேன் மேலும பாராட்டிப் பயன்படலானார்.

இநதப் பாடடில குடிமக்களிடம் திறைவாங்கும் அரிய முறைகள் நுட்ப திட்பமாய விளஙகுகின்றன.

**குறிப்புரை** —காய - காயககும, விளைந்த என்பது கருதது. மா நிறைவு - மா என்னும அளவு. செறு - வயல். தமிதது - தனிதது. உணின் - உணணின, உணடால. கோடி - மிகுதி என்னும் கருததில்

•

வந்தது. யாத்து - தொகுத்து. நந்தும் - தழைக்கும். கிழவன் - தலைவன; 'கிழவன மெல்லியனுகி' என்று கூட்டிக்கொள்ள வேண்டும். வைகலும் - நாளும், எப்போதும் என்பது கருத்து. வரிசை - தகுதி. கல் - ஆரவாரம். சுற்றம் - சூழ்ந்திருப்பவர், இங்கே அமைச்சர் முதலியோரைக் குறிக்கும் பரிவு - அன்பு, தப - கெட. எடுக்கும் - கொள்ளும். பிண்டம் - தொகுதி, பொருள் தொகுதி. நச்சின - விரும்பினுல். புக்க - புகுந்த (உகி)

## நாட்டின் நல்வாழ்வுக்கு ஆட்சித்திறனே காரணம்

[உலகத்தில் ஒவ்வொருவருக்கும் ஒரு நிலை இருக்கின்றது, அந்நிலை கொண்டு செய்யவேண்டிய கடமை இருக்கின்றது, அவரவரும் இவ்வுண்மையை அறிந்து நடந்துகொள்ளவேண்டும், அரசனுக்கு இவ்வாறு அறிந்துகொள்ளுதல் இன்னும் முதன்மையானது]

நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே,
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்;
அதனுல், 'யான் உயி' ரென்பது அறிகை
வேலமிகு தானை வேந்தற்குக் கடனே.

—புறநானூறு, கஅசு.

நெல்லும் நீரும் மக்கள் வாழ்க்கைக்கு முதன்மையானவை. ஆகவே, உலகத்துக்கு நெல்லும் நீருமே உயிர் என்று பொதுவாக எல்லாரும் கருதுகின்றனர். ஆனுல், நாட்டில் அங்கங்கும் நீர்நிலைகள் எடுப்பித்து வளம்பெருக வழிசெய்து, பகை கொள்ளை முதலியவற்றுல் மக்கள் அச்சங்கொள்ளாமல் அமைதியாக வாழ்க்கை நடத்தவும், பிணி தீர்ச்செயல் முதலியவற்றுல் அவர்கள் தம் காரியங்கள் கெடாமல் முயற்சியாயிருக்கவும், இவற்றிற்கெல்லாம் அடிப்படையாகத் தேவையுள்ள பொதுஅறிவு கலையறிவுகளை அவர்கள் பெருக்கிக்கொள்ளவும் பலபல திறமான ஏற்பாடுகளும் சட்டங்களும் செய்துவைத்து அரசன் தக்கவாறு ஆட்சிசெய்தாலன்றே, முன்னே சொன்ன நெல்லும் நீரும் மக்களுக்குத் தகுதியாகக் கிடைக்கும்?

ஆகவே, இந்த உலகத்துக்கு நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று, இந்தப் பரந்த இடத்தையுடைய உலகம் மன்னனையே உயிராக உடையது என்பது தெரிகின்றது.

ஆனால், நாட்டுக்கு அரசனாயிருப்பவன், தான் இங்ஙனம் உலகத்துக்கு உயிர்போலிருக்கும் உண்மையை அறிந்து அதற்கேற்ப ஆட்சி நடத்தினாலன்றோ நன்மையுண்டாகும்! உண்மை இவ்வாறிருத்தலால், 'நாட்டுக்கு யான் உயிர்' என்பதனை அறிந்துகொள்ளுதல், வேல் மிகுந்த படைகளையுடைய அரசனுக்குக் கடமையாயிருக்கின்றது.

அறிந்தால், அதற்கேற்ப அவன் நடந்துகொள்வான்; அவரவரும் அறிந்துகொள்ளவேண்டிய உண்மைகளை அறிந்து, அதற்கேற்பத் தத்தம் கடமைகளைச் செய்யாமையினாலேயே, உலகம் இடர்ப்படுகின்றது; அறிதல், செருக்குறுதற்கன்று.

உண்மைகளை ஆழ்ந்து பார்த்து அறியத்தக்க நிலைமை சிலர்க்கே உண்டாகும் அவர்கள் அவற்றை உலக நன்மை கருதி வெளியிடவேண்டும். வெளியிட்டால், மற்றவர்களும் ஆழ்ந்து நோக்கி அறியவேண்டுவன அறிந்து நன்மை பெறுவார்கள்.

மோசிகீரனார் என்னும் அறிஞர், நன்றாய் ஆழ்ந்து நோக்கி, 'நெல்லும் உயிரன்று நீரும் உயிரன்று, அரசனே இவ்வுலகத்துக்கு உயிர்' எனக் கண்டு, இப் பாட்டின் வாயிலாக அதனை வெளியிட்டிருக்கின்றார்.

குறிப்புரை — மலர் - பரந்த; தலை - இடத்தையுடைய, மலர் தலை உலகம் - பரந்த இடத்தையுடைய உலகம். அறிகை - அறிதல்; அதாவது, அறிந்து அதற்கேற்ப நடந்துகொள்ளுதல். தானை - படை; கடன் - கடமை (௨௬)

## ஆண்மையும் தண்மையும்

[எளியார்க்கு எளியராயும் வலியார்க்கு வலியராயும் இருத்தல் அரசனுக்குக்கடமை; முறைப்படி நடப்போர்க்கு முறைப்படியும்

அன்பில் திளைப்போர்க்கு அவ்வாறும் இருத்தல், அமைந்த காலத்தில் அமைதியோடும் கிளர்ந்த காலத்திற் கிளர்ச்சியோடும் இருத்தல் போல்வனவும் அவனுக்கு இன்றியமையாதன.]

உடைய னாயின் உண்ணவும் வல்லன் ;
கடவர் மீதும் இரப்போர்க் கீயும ;
மடவர் மகிழ்துணை , நெடுமான் அஞ்சி !
இலவிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றா திருக்கவும் வல்லன் , மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்தான் தோன்றுங் காலே !

—புறநானூறு, ௩௧௫.

கருத்துக்களைப் புலப்படுத்துவதில் ஒளவைப் பிராட்டியார் மிகவும் வல்லவர். நயமாகவும் இருக்கும்; அதே நேரத்தில் தெளிவாகவும் இருக்கும். ஒளவையார் உள்ளம் உலகியலிலும் நூலியலிலும் நன்றாய்ப் பண்பட்டுக் கனிபோலப் பழுத்துச் சொற்சாறு சொட்டத் திகழ்வது.

நெடுமான் அஞ்சி ஒரு வள்ளல். ஒளவையாருக்கு மிகவும் வேண்டியவன்.

செல்வர்களெல்லாருமே செல்வராக ளாகமாட்டார்கள். நெடுமான் அஞ்சி ஒரு செல்வனுதலால், அச் செல்வத்தினால் அவன் எப்படி பெருமைப்படுகிறான் என்பதை ஒளவையார் இங்கே சில வரிகளில் அருமையாகப் புலப்படுத்தி யிருக்கின்றார் :

"நெடுமான் அஞ்சி பொருளுடையவன், மற்றவரைப் போலன்றி, இவன் அதனை நன்றாய் நுகரவும் வல்லவன்; தன்னிடம் கடமைகள் செய்யும் வீரர், அலுவலாளர் முதலியவர்கட்கெல்லாம் அவர்கள் மகிழும்படி கொடுத்து, அங்ஙனங் கடமை செய்யாமல் இரந்துநிற்போர்க்கு அவர்களைக்காட்டிலும் மிகுதியாகக் கொடுப்பவன். அறிவு நிரம்பாதவர்களும் மகிழுந் துணையாயிருப்பவன்.

"வீட்டின் இறப்பிற் செருகியிருக்கும் தீக்கடைகோல் போலத் தன் ஆற்றலை வெளிக்காட்டாமல் இருக்கவும் வல்லன்; நேரம் வரும்போது, அத் தீக்கடைகோலினின்றும் வெளிப்பட்டுத் தோன்றுகின்ற செறிந்த எரிபோலத் தான் ஆற்றலோடு விளங்கவும் வல்லன்"

இங்ஙனம் ஔவையார் அவன் நிலைமைக்குத் தக்கபடி அவன் இயல்புகளை விளங்கப் புலப்படுத்தியிருப்பது எவ்வளவு திறமாயிருக்கின்றது!

குறிப்புரை :—கடவர் - கடமை செய்கின்றவர்கள், அலுவலாளர், அவர், வீரர் முதலியோர், கொடையைப்பற்றிக் கூறுமிடத்தில் வருதலால், அலுவலாளரில் இங்கே சிறப்பாக எடுத்துச் சொல்லுதற்குரியோர் வீரர். இவரே தக்க நேரங்களில் அரசனால் மிகுதியாக நன்கொடை பெறுதற்குரியவர். மடவர் - பேதையர். இறை - இறப்பு ஞெலிகோல் - தீக்கடைகோல், ஞெலிதல் - கடைதல். கான்றுபடு - வெளிப்பட்டுத் தோன்றுகின்ற. கனை - செறிகின்ற. எரி - தீ. (௨எ)

---

## 6. சான்றாண்மை

### பற்றற்ற வழிபாடு

[பற்று நீங்கிய கடமையுள்ளம் செம்மையுள்ளம், தலைமையான உள்ளம் இறைவன் திருவுள்ளத்தை எண்ணும் உள்ளம் அவ்வுள்ளத்தில் தோன்றும் நினைவெல்லாம் இனிய நினைவே; ஆருயிர்த் தொண்டே, ஆருயிர்த் தொண்டாயினும், பற்றுள்ளம் இடையே நிகழலாகாது, அப்போதுதான் அது பயன் வீறுகொண்டு பலவாக நன்கு நடைபெறும்]

சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயின், பலவுடன்
நன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே.

—திருமுருகாற்றுப்படை, ௬௨—௬௬.

"நல்லதுகூடவா செய்யக்கூடாது? செய்யாமற் போனாலும், மனத்திலாவது இது செய்யவேண்டும், அது செய்யவேண்டும என்று விரும்பவுங் கூடாதா?" என்று ஒருவா கேட்டார்.

எதிரிலிருநதவர், "அப்படி யாரும் சொல்லமாட்டார்கள்; எதுவும நாம செய்கிறோம; நாம விருமபுவதனாலே தான் நடககிறது எனனும் செருக்கெண்ணம கூடாது எனறு சொல்லியிருப்பாாகள; உண்மையாகப பாாததால, உலகததில எதுவும ஆணடவன் செயலாகவே இருககிறது. நாம கருவிகளாகததாம இருக்கிறோம.

"எநத நேரததில் என்ன கட்டளையோ என்று, நலலதோ கெட்டதோ நமக்கெனறு ஒரு விருபபமும இலலாமல மனததைப பளிஙகுபோல துடைதது வைததுக் கொண்டு ஆண்டவன குறிப்புககு இடமாயிருக்க வேண்டுவது ஒனறுதான் நமது கடமை.

"நமமைக்கொண்டு ஏதாவது ஒன்றை இநத உலகததில நிறைவேறறவேண்டும எனபது இறைவன குறிபபாயிருநதால, அக குறிபபு அபபோது நமது பளிஙகுபோனற உளளததில ஊககமாய நிழலாடும. நாம் அதனபடி நடநது கொளவது எனபதுதான நமககு 'முயறசி' என்பது. அபபடி நடநதுகொள்ளுமபோதும, அநதக காரியததைத திருததமாகச செயவது ஒனறிலேயே நமது கருததிருக்க வேணடும, அதறகுததான ஔவையாா, 'கடமையைச் செயய விருமபு' எனனுங கருததில, 'அறஞசெய விருமபு' எனறாா, மறறபபடி, அநதக காரியம எபபடி முடிவு பெறுமோ? எபபோது முடிவுபெறுமோ? முடிவில எனன பயன தருமோ? எனபவைகளிலெலலாம எண்ணமிருக்கக் கூடாது. அப்படி எண்ணமிருநதால, அது பறறுள்ளமாகும; நாமே விருமபி ஏதோ செயவதுபோல ஆகும. அநத அவா இலலாமலிருநதால, களஙகமறற நமது உள்ளததில தோனறிய அக்குறிபபுகள், பறறோடுகூடி நினைதத காலததைவிட மிகுதியான பயனை எளிதில கூடடிவைதது

விடும். ஆகவே, நல்லது என்பதை 'நாம் செய்யவேண்டும' என்னும் செருக்கான விருப்பம கொள்ளக்கூடா தென்றே யாரும சொல்லியிருப்பாாகள், எடுப்பது நல்ல காரியமானாலும அதில பற்று இருக்கக்கூடாது, என்பது அவாகள் கருததேயல்லாமல உலகததில நல்லது நிகழக்கூடாது, ஒருவரும செயயககூடாதுஎனபதுஅவர்கள் கருததாயிராது, முன சொன்னபடி தமக்கென்று ஒரு விருபபமுமிலலாமல் பளிஙகுளளம படைததவாகளெல்லாரும இயல்பாகச் செயகிற காரியஙகள் நலல காரியங்களாகததாம இருக்கும. சிறிது உன்னிப் பார்ததால், அவைகள்தாம நலல காரியங்கள் என்று சொல்லுவதறகு உண்மையில் உரியவை," எனறு சொன்ஞர். சொலலிச சிறிது நேரத திறகெலலாம், "அவை இருக்கட்டும; உஙகளுககு யார் அப்படி சொனஞாகள்?" என்று கேட்டாா.

'அப்படியா' என்று அதுவரையில கருததாகக் கேட்டுககொண்டு வநதவா,

"நம நககீரரைததான சொலலுகிறேன்; திருமுருகாறறுப் படையில அவர் சொனனதைக் கண்டு நான் எனன என்னவோ நினைததுவிட்டேன். இப்போது அதன் கருத்து மெலல மெலலத தெரிகினறது.

"இறைவன திருவருட் குறிப்பொன்றையே கருதும் பளிங்குபோன்ற தலைமையான உளளம பெறறிருக்க வேண்டும. நாமதாம நலலது செய்கிறோம எனறு பற்றுள்ளமாகக் கொள்ளும கொள்கை யறிவும நீங்கியிருக்க வேண்டும, இபபடிபபட்ட, கடமைபபோககொன்றையே நாம விரும்பினல், அததகைய நலல நெஞசததில இறைவன் குறிப்பினல தோனறும நினைவுகள், முனனையினும மிகுதியான பல பயனகளை உடனே பெறக்கூடும' என்பது அவா கருததாயிருக்கவேண்டும. ஆ, முன்னே நான் எவவளவு தவருகக கருதிவிட்டேன்" என்று சொல்லிக் கொண்டார்.

'தலைமையான உள்ளம் என்பது எது?' என்னும்

மறை பொருளான அரிய கருத்தை இந்தப் பகுதி அருமையாக எடுத்துக் காட்டுகின்றது.

**குறிப்புரை**:—சேவடி - சிவந்த திருவடி, இறைவன் திருவடி என்பது, இறைவன் குறிப்பு பட்ரும் - கருதும் செம்மல் உள்ளம் - தலைமையான உள்ளம். நலம் - நன்மை, புரி - விரும்புகிற. கொள்கை - இங்கே பிடியான கருத்து, அதாவது பற்றுள்ளம். புலம் - அறிவு; எண்ணம். கொள்கைப் புலம் - பற்றுள்ளமான எண்ணம் நலம் புரி கொள்கைப் புலம் - நன்மை விரும்பும் பற்றுள்ளமான எண்ணமும் பிரிந்து உறையும் செலவு - நீங்கி இறைவன் குறிப்புவழி நிற்கும் போக்கு அதுவே, 'கடமை' என்னுங் கருத்தோடு கூடிய போக்கு உறைதல் - இறைவன் குறிப்பு வழி நிற்றல். செலவு - போக்கு நயந்தனையாயின் - விரும்பினையானால். பலவுடன் - நினைத்ததினும் பலவான பயன்களுடன் நன்னர் - நல்ல இன் நசை - இனிய விருப்பம், வாய்ப்ப - கைகூட, இன்னே பெறுதி நீ முன்னிய வினை - உடனே அடைவாய் நீ கருதிய காரியத்தை, கருதிய காரியம் என்றது இங்கே வீடுபேறு, இனிய விருப்பம் என்றது. தூய உள்ளத்தில் தோன்றும் இறைவனது அருட்குறிப்பின் வழியான நினைவு, பற்றுள்ளங் கலவாததாதலால், அந்த விருப்பம் இனிய விருப்பம் எனப்பட்டது. இனி, இப் பகுதிக்கு, 'இறைவன் திருவடியை நினைக்கும் தலைமையான உள்ளத்தோடு, ஆருயிர்கட்கு நன்மை புரியுங் கொள்கையினால் புலன்களின் வழி நின்றே அவற்றைப் பிரிந்து ஒழுகும் ஒழுக்கத்தை நீ விரும்பினையானால், அத்தகைய நல்ல நெஞ்சத்தில் இனிய விருப்பங்களே எழ, நீ கருதிய வினையைப் பல பயன்களுடன் உடனே பெறுவாய்' என்று பொருள் கொள்ளுதலும் உண்டு, இது வீடுபேறு அறிவுறுக்கும் இடமாதலின், வினைகளுள் ஒன்றான நல்வினைத் தன்னையும் நீங்கி நிற்றல் வேண்டுமெனனுங் கருத்துப்பற்றி, முன் உரை சிறப்பாகக் கொள்ளப்பட்டது. (உஅ)

## முனிவரர் மாட்சி

[முனிவரர் உடம்பும் உள்ளமும் நோன்பு நிலை வாய்ந்து விளங்கும்; கலவிகள் முகிழ்க்கும் உள்ளம் அவர்களுடையது, குணம் பழுத்தது, துன்பங் காணாதது எதனையும் முனியாதது அம்முனிவர்கள் உள்ளம்]

சீரை தைஇய உடுக்கையர்; சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்;

மாசற இமைகரும் உருவினர்; மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்புஎழுந் தியங்கும் யாக்கையர்; நன்பகல்
பலஉடன் கழிந்த உண்டியர்; இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர், யாவதும்
கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர், காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர்; இடும்பை
யாவதும் அறியா இயல்பினர்;.. ...
துனிஇல் காட்சி முனிவர்.

—திருமுருகாற்றுப்படை, கஉசு-கங்எ.

சிலரை 'முனிவர்' என்று சொல்லுகிறார்கள். உடனே அவர்கள் எப்படி இருப்பார்கள்? அவர்கள் உள்ளம் எப்படி இருக்கும்? ஒழுக்கம் எப்படி இருக்கும்? என் பதையெல்லாம் திட்டமாகத் தெரிந்துகொள்ள விருப்பமுண்டா கிறது. திருமுருகாற்றுப்படையில் ஆசிரியர் நக்கீரர் அதனை நன்றாகத் தெளிவுபடுத்தியிருக்கிறார். அவர் சொல்லுவது

'மரவுரியினால் செய்த உடையையுடையவர்; அழகு பொருந்தியதோடு, நிறத்திலும் வடிவத்திலும் வலம்புரிச் சங்கினையும் ஒக்கும் வெண்ணிறமான நரைமுடியையுடைய வர்; ஒரு நாளைக்குப் பல தடவை நீராடுவதனால், அழுக் கில்லாமல் ஒளிவிடுகின்ற உருவம் உடையவர்; மான்தோல் போர்த்த தசை குறைந்த மார்பின், எலும்பு தோன்றி உலவும் உடம்பினையுடையவர், நல்ல பகற்பொழுதுகள் பல தொடர்பாகக் கழிந்தபின் உண்ணும் உணவுடைய வர், மாறுபாடுகளோடு பகைமையும் நீக்கிய மனமுடைய வர்; கற்றோர்-சிறிதும் அறிந்துகொள்ளமுடியாத அறிவினை யுடையவர், ஆனால் அக் கற்றோர்க்குத் தாம் வரம்பான தலைமையுடையவர், காமம் என்பதனோடு கடிய சினம் என் பதனையும் நீக்கிவிட்ட தெளிவினை யுடையவர், மனவருத் தம் சிறிதும் அறியாத இயல்பினையுடையவர்; ஒருவ

ரோடும் வெறுப்பில்லாத உணர்வினையுடையவர்; இப்படிப் பட்ட நிலைமைகளையுடையவர் முனிவரர்' என்பது.

குறிப்புரை —சீரை - மரவுரி. தைஇய - பொருந்தி அமைந்த; உடுக்கை - உடை. சீர் - அழகு. வலம்புரி - வலமாக உள் வளைந் திருக்கும் சங்கு; இது சங்குகளில் உயர்ந்தது. புரையும் - ஒக்கும். வால் - வெண்மையான. மாசு - அழுக்கு, அற-இல்லாமல். இமைக் கும் - ஒளிவிடும். உரிவை - தோல், முனிவர்கள், மான் தோலை மார்பில் கட்டியிருப்பார்கள். தைஇய - தைத்த, தைஇய என்பது, அவர்கள் அதனைக் கட்டியிருக்கிறார்கள் என்பதைக் காட்டும். எழுந்து - தோன்றி, நெறியான நோன்பினாலும் விட்டு விட்டு உண் ணும் பட்டினியினாலும் தசைகுறைந்து மார்பெலும்பு தோன்றிற்று. இயங்கும் - உலவும், நடமாடும். நல்ல பகல்வேளையென்றார், பசி மிகுதிபாக எடுக்கக்கூடிய உச்சிக்காலம் என்பதற்கு, நண்பகல் - நல்ல பகல், வழக்கமாக உண்ணும்போது முனிவர்கள் நல்ல உச்சிப் பொழு தில் ஒரு வேளையே உண்பார்கள். சில நோன்புகளில், பல உச்சி நேரங்கள் தொடர்பாகவும் பட்டினிகிடந்து கழித்து அதன்பின் உண் பதும் உண்டு. ஒரு மாத காலங்கூட இங்ஙனம் பட்டினி கிடப்ப துண்டு. அதனால் 'நண்பகல் பல உடன்கழிந்த உண்டியர்' என்றார். 'உடன்' என்பது இங்கே, 'தொடர்பாக' என்பதற்கு வந்தது. இகல் - பிறரோடு கொள்ளும் மாறுபாடு. செற்றம் - நெடுங்காலப் பகைமை, அதாவது அந்த மாறுபாட்டினால் மனத்தில் தோன்றும் பகைமையை அப்படியே நீண்டகாலம் செறிய வைத்துக்கொள்வது. யாவதும் - சிறிதும். 'காட்சியர்' என்பதில். 'காட்சி' தெளிவு என்பது உணர்த்தும். இடும்பை - துன்பம். துனி - வெறுப்பு. 'துனியில் காட்சி' என்பதில், காட்சி என்பதற்கு, 'உணர்வு' என்று உரைத்துக்கொள்ளலாம். (௨௧)

## அந்தணர் இயல்பு

[ஞானப்பெருக்கமும் அதன் பாதுகாப்புமே இவர்கள் நோக்கம். தூயோர் உணர்வு முறையில் வளர்ந்து வாழ்க்கை நடத்து வோர்; இறைவனை வழிபடுவோர், மந்திரங் கூறுவோர்; மெய்யுணர்வு நூல் ஓதுவோர்; தக்கோர்.]

இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி இளமை நல்யாண்டு

ஆறினிற் கழிப்பிய அறன்நவில் கொள்கை
மூன்றுவகைக குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக காழகம புலர உடீஇ
உச்சிக கூப்பிய கையினர் தன்புகழ்ந்து
ஆறெழுத்து அடக்கிய அருமறைக கேள்வி
நாவியல மருங்கின நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து
ஏரகத்து உறைதலும உரியன.

—திருமுருகாற்றுப்படை, ௧௭௭-௧௮௯.

ஒரு பிறப்பிலேயே இருபிறப்பு என்றால் யாருக்குமே வியப்பாகத்தான் இருக்கும். இது, பிறப்பின் நோக்கம் இன்னது என்பதையே எடுத்துக் காட்டுகிறது. பொதுவாக, குழந்தைகள் பிறந்தவுடன அதற்கு உணவு தந்து, உடம்பைப் பாதுகாக்கும் நோக்கம் உண்டாகிறது. உணவு முறை ஓர் ஒழுங்காகி வழிப்படுவதற்கு ஏறக்குறைய ஐந்தாறு ஆண்டுகள் ஆகின்றன. அதன்பின், அந்தக் குழந்தைக்குக் கல்வி தந்து அதன் உணர்வைப் பாதுகாக்கும் நோக்கம் உண்டாகின்றது. பெற்றோர் தகுந்தவராயிருந்தால், குழந்தைக்குப் பால் கொடுக்கும் பருவத்திலிருந்தே அப் பாலுணவின் வழியாகவும் பிற வழிகளாகவும் ஞான முறைகளும் ஊட்டி வருவர்.

இப்படி ஒரு குழந்தை உணவு முறையிலும் உணர்வு முறையிலும் வளர்ந்துவந்தால், அதனை உணவுக் குழந்தையென்றுஞ் சொல்லலாம்; உணர்வுக் குழந்தையென்றுஞ் சொல்லலாம். ஒரு பிறவியிலேயே இருவகையாக அக் குழந்தை வளர்கின்றது, ஒரு குழந்தையே இரண்டு குழந்தைகளாக வளர்கின்றதென்றுஞ் சொல்லலாம். ஒரு பிறவியிலேயே இரு பிறவிபோன்ற நினைவை அது நமக்குத் தருகின்றதன்றோ!

பொதுவாக மக்கள், உணவுப் பிறவியாகவே வளர்கின்றனர். ஆகவே, உணர்வில் சிறப்பாக நாட்டங்கொண்டு வளர்கின்றவர்கள் 'இருபிறப்பாளர்' ஆகின்றனர் அப்படிப்பட்டவர்களின் நிகழ்ச்சிகள் எப்படி எப்படி இருக்கும் என்று அறிந்துகொள்வதில், பலர்க்கும் விருப்பம் இருக்கக்கூடும். நல்ல காலமாக அவை இந்தப் பாட்டில் விளக்கப்பட்டிருக்கின்றன. பாட்டில் வரும் கருத்துகள் இவை

'அவர்கள் நூல் ஓதுவார்கள், பிறர்க்கும் சொல்லி வைப்பார்கள்; அவர்கள் வேள்வி செய்வார்கள், மற்றவர்களுக்கும் வேள்வி செய்துவைப்பார்கள். தமக்கு மற்றவர் உதவும் உதவியை ஏற்றுக்கொள்வார்கள், தாமும் பிறர்க்கு உதவி செய்வார்கள். இந்தக்கருத்துகளில் அவர்கள் தவறுவதில்லை. இத்தகைய இருபிறப்பாளரின் மரபுகள் ஒரே வழியில் வந்தவையல்ல. பல இடங்களில் பலவாகத் தோன்றியவை. அவை, ஒன்றுகொன்று தொடர்பில்லாமல் வேறுபட்டவையே; மேலும், பழமையானவை. தாயவழியிலும் தந்தைவழியிலும் இம் மரபுகள் மேற்காட்டிய ஒழுக்கங்களால் மதிப்புவாய்ந்தவை

'இப்படிப்பட்ட பழங்குடியில் தோன்றிய இவர்கள், நாற்பத்தெட்டு ஆண்டு நல்ல இளமையை நூல்நெறியில் கழிப்பார்கள். அதுவரையில் திருமணம் செய்துகொள்ளாமல் ஒழுக்கமாய் இருப்பார்கள். ஞானப் பெருக்கமும் அதன் பாதுகாப்புமே இவர்கள் நோக்கம். எப்பொழுதும் நன்மையையே பேசும் கொள்கையுடையவர்கள்.

'வேள்வித்தீ இவர்கள் செல்வம்; அது மூன்றுவகையான உண்மைகளைக் குறித்த மூன்றுவடிவக் குறிப்புடையது, அதனால் அது 'முத்தீ' என்று சொல்லப்படுகின்றது.

'இருபிறப்பாளர் என்பவர்கள் இப்படிப்பட்டவர்களே. இவர்கள் 'திருவேரகம்' என்னுந் திருப்பதியிலும் விளங்குகின்றார்கள். முருகக் கடவுள் அங்கே திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கின்றார்.

'இவர்கள் அப் பெருமானுககுக் காலமறிநது வழுத் துரைகள கூறுமபொருட்டு, உரிய நேரததில நீராடி, மொத தததில ஒன்பது பகுதிகொண்ட மூன்று பிரிவாய் முறுக் கேறிய மெலலிய பூண் நூலோடு, தோய்ககபபட்ட உலராத ஈர உடையும உடம்பிலேயே கிடநது உலருமபடி உடுதது, உச்சியில குவிதத கைகளையுடையவராயத திருக்கோயிலுக் குச் சென்று அவனை வழுத்துவாாகள்.

அபபடி முதலில் பொதுவான வழுத்துரைகள் சொன னபின், அவனைச சிறப்புமுறையில் வழிபடுமபொருட்டு, ஆறு எழுததுக்களை அடக்கிககொண்டிருக்கின்ற அரிய மறைபொருளான, குருமுகமாகக கேட்ட 'நமோ குமா ராய' என்னும முருக மநதிரததை தமது நாக்கு அசைகின்ற அநத அளவிலமட்டும திருததமாகச சொல்லிககொண்டே, மணம பொருநதிய தூய மலாகளைக கையில ஏநதிக்கொள் வாாகள. அபபடி அவாகள வழிபடுவதறகு மலாகளை ஏநதுதலால, முருகன் அதறகுப் பெரிதும உளமகிழநது 'திருவேரகம' என்னும அத திருப்பதியிலேயே நிலையாய எழுநதருளியிருததறகும உரியவனுயிருககின்றுன' என்பது. இவவாறு இறைவன் மனம மகிழ வாழுபவாகள இவ விரு பிறப்பாளா என்பது தெரிகினறது

இப்படி, உணாவு முறையில வாழ்வது எவவளவு அரு மையும பெருமையும உடையது! யாருககும் இது வியப்பா கததான இருக்கும.

குறிபபுரை :—இருமூனறு - ஆறு, ஓதல், ஓதுவிததல், வேட் டல், வேட்பிததல, ஈதல, ஏறறல என்னும ஆறு ஒழுககஙகள். இரு மூனறு எயதிய இயலபினின வழாது - ஆறு ஒழுககங்களையும வாழக்கைமுறையாக அடைநத மரபின தனமையில வழுவாமல. சுட்டிய - மதிதத; அறுநானகு - இருபததுநானகு, அதன இரட்டி எனபது நாறபதெட்டு. ஆறு - நெறி; நூலநெறி, நவிலுதல - பழககமாகச சொல்லுதல; நுவல - நுவலும பொருட்டு; 'பொழு தறிநது' எனபது, முருகன உவககும நேரம தெரிநது என உணாததும. அதாவது, செவ்வி தெரிந்து வழுததுமபொருட்டு ஈர உடையுடனேயே காததிருநது நோக்கிட்டியதும அவனைப

புகழ்கின்றனர் என்பது கருத்து. ஞாண் - இங்கே நூல், பூணூல்; நூலுக்கு நுண்மையாவது, அது மெல்லியதாயிருத்தல். புலரா - உலராத, காழகம் - உடை. கையினர் தன் புகழ்ந்து - அங்கையினராய அவனைப் புகழ்ந்து 'அருமறைக்கேள்வி' என்பதில் அருமை என்பது உயர்வு குறிக்கும்; பிறர்க்குக் கேட்காதபடி நாக்கு அசையும் அளவில மறையச் சொல்லுவதாதலால் 'மறை' எனப்பட்டது, கேள்வி - மந்திரம், குருமுகமாகக் கேட்கப்படுவது என்பது கருத்து. நா - நாக்கு, இயல - அசையும், மருங்கில் - அளவில நவில - வாய் நிறையும்படி திருத்தமாக, பாடி - நுண்மையாக ஒலித்துக்கொண்டே; விரை - மணம், ஏந்தி - ஏந்துதலால், ஏந்துதலால் உவந்து முருகன் ஏரகத்துறைகின்றான் என்பது (௬௦)

## அன்பினால் உள்ளம் ஆழ்ந்து ஆற்றல்பெறுதல்

[சிறந்த ஆற்றல்கள் பிறர் உள்ளத்தைக் கவர்ந்து தம்மைப் பற்றியே நினைக்கும்படி செய்து ஒருவழிப்படுத்திவிடுகின்றன. அகப்பொருள் நிகழ்ச்சிகளில், தலைவனுடைய ஆற்றல்களால் உள்ளங் கொள்ளை கொள்ளப்பட்டுத் தலைவி அவனது பிரிவில் எண்ணம் ஒருமுகப்பட்டு நிற்றலே இதற்குச் சான்று. தலைவியின் இவ்வொருமுக நினைவினால் தலைவனுடைய ஆற்றல்கள் பின்னும் வலுப்பட்டு, அவன் காரியங்களும் விரைவாகவும் இனிமையாகவும் நிறைவேறுகின்றன.]

பானாள் விளக்கின் பரூஉச்சுடர் அழல
இடஞ்சிறந்து உயரிய எழுநிலை மாடத்து
முடங்கிறைச் சொரிதரு மாத்திரள் அருவி
இன்பல் இமிழிசை ஓர்ப்பனள் கிடந்தோள்
அஞ்செவி நிறைய ஆலின; வென்றுபிறர்
வேண்டுபுலம் கவர்ந்த ஈண்டுபெருந் தானையொடு
விசயம் வெல்கொடி உயரி, வலனேர்பு
வயிரும் வளையும் ஆர்ப்ப, அயிர
செறியிலைக் காயா அஞ்சனம் மலர,
முறியிணர்க் கொன்றை நன்பொன் கால,
கோடற் குவிமுகை அங்கை அவிழ,
தோடார் தோன்றி குருதி பூப்ப,

கானம் நந்திய செந்நிலப் பெருவழி
வானம வாய்த்த வாங்குகதிர் வரகில
திரிமருப் பிரலையொடு மடமான உகள,
எதிர்செல வெண்மழை பொழியுந திங்களின்,
முதிர்காய் வளளியங் காடுபிறக கொழியத,
துனைபரி துரககுஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுநதேர் பூணட மாவே.

—முலலைபபாட்டு, அகு-௪0௩

முலலைக் கானகததில் ஒரு மாளிகை; ஏழடுக்கு உள் ளது, இடம சிறந்து உயாநதிருக்கின்றது. மாலை நேரம; மழை பெயதுகொணடிருநதது.

அநத ஏழடுக்கு மாளிகையின் நடு மாடததில் ஒரு கட் டில; அதன பக்கததில ஒரு பெரிய பாவை விளக்கில் பரும னுள தீச்சுடா ஒளிவிட்டுககொண டிருநதது கட்டிலில ஒரு பெண் சறறுச் சாயவாயப படுததுககொண டிருந் தாள். அங்கே வேறு எவருமிலலை பகை யரசரோடு போா புரிவதறகாக அவள கணவன் அவளைப் பிரிநது போய நீண்ட நாடகள ஆயவிடடன. மழைகாலத தொடக்கததில வநதுவிடுவதாகச் சொலலிப் பிரிநதவன, இன்னும வரவிலலை. அவளுககு அவனைப் பிரிநதிருககக் கூடவிலலை அவள மிகவுங கலககததுடன அவன வருகை யின்மேலேயே நினைவாய வருநதிககொண்டிருநதாள்.

இடம அமைதியா யிருநதது மழை பெயவதனுல அருவிபோலக கூடலவாயில திரண்டுவிழும நீர் பலவகை யான இனிய ஒலிகளை உணடாக்கிக்கொண் டிருநதது. அந்நேரததில் அநத ஒலிமட்டும் காதில விழ, அவள அப் படியே வாட்டத்துடன் படுத்துக்கொணடிருநதாள்.

திடுமென்று அவள் காதுகள் நிறையுமபடி, மாளிகை யின் தெருவாயிலில அவள் கணவனுடைய தேர்க்குதிரை கள் ஆரவாரமாயக் கனைததன. கணவன் வருகை தெரிந்த

தும் ஆ, அவள் உள்ளம அடைந்த கிளர்ச்சி நிலையை யாரே எடுத்துச சொல்லுகிறவர்!

அவள் கணவனுக்கும மகிழ்ச்சி சொல்லத தரமில்லை. மேலும அவன, போரில வெறறிபெறறுத திருமபியிருந தான் வெறறிபெறருனே இல்லையோ, அவன் அன்பின் மனைவி அவனுளளததில இடம பெறறுவிட்டாள். பகை யரசா, விருபபததோடு வைததுக்கொண்டிருந்த நிலமெல லாம இவனை வயமாயவிட்டன. சிதறியிருநத படைகளெல் லாம உடனே திரண்டன வெறறிக்கொடி பறக்க, கொமபு ஊத, சஙகு முழங்க எலலாரும் விரைவாயப புறப பட்டு வநதனர்.

அவாகள வநத முலலைக்காட்டு வழியில் காயாமபூச செடிகள மைபோலக் கருநீல மலாகளைப பூததிருநதன. கொனறை மரஙகள் நலல பொனபோன்ற மலாகளைச் சொரிந்துகொணடிருநதன. காநதட் செடிகளின் மொக்கு கள், உளளஙகைகள போல மலாநதிருநதன. தோனறிச செடிகள இரததம போனற சிவநத பூக்களைப் பூததிருந தன. காடு இப்படி செழிததிருந்தது. வழி, மழையினல செமமண கரைநது சிவபபா யிருநதது. மழை பெயது கதிா வாஙகியிருநத வரகங கொலலைகளில மானகள் ஆணும பெண்ணுமாய்க் கூடி மகிழச்சியாயத திரிநது கொண்டிருநதன. இவையெலலாம அத தலைவனுககுத் தன காதலியின நினைவை மேலுமேலும மிகுதிபபடுததின. இநநிலையில அக கார்காலத திஙகளின தொடககததில் அவாகள எலலாரும், எதிரில் தோன்றிய வள்ளிக் காடுக ளெலலாம பினனே போக, தம தோககுதிரைகளை விரை' வாகச் செலுததிகொண்டு வநதாாகள. இஙஙனம வநத தன் கணவனது தேரிற பூட்டிய குதிரைகளின் கனைப் பொலியே தலைவியின் காதுகளிற கேட்டது.

காதலர்கள்பால நிகழும அன்பின நிகழ்ச்சியைக் காா காலக் காட்சியுடன இப் பாட்டு ஓவியமபோல எடுததுக் காட்டுகின்றது.

**குறிப்புரை** :—பருஉ - பரு; பருமனை முடங்கு இறை - வளைந்த இறைப்பு. ஓர்ப்பனள் - கேட்டவளாய் அகுசெவி - அகஞ் செவி, உட்செவி. ஈண்டு - திரளுகின்ற தானை - படை விசயம் - வெற்றி விசயம் வெலகொடி - வெற்றியைக் குறிக்கும் வெற்றிக் கொடி வயிர - ஊதுகொம்பு வளை - சங்கு அயிர - நுண் மணல். அயிர - நுண் மணலிடத்தில் உள்ளனவான செறி இலைக் காயா - நெருங்கின இலைகளையுடைய காயா - என்னுஞ் செடிகள் அஞ்சனம் - மை முறி - தளிர். இணர் - பூங்கொத்துகள் கோடல் - காந்தள் அங்கை - அகங்கை, உள்ளங்கை தோடு ஆர் தோன்றி - தொகுதியா யுள்ள தோன்றிச் செடிகள். நந்திய - செழித்த வரகு பயிர்க்கு மழை நீரே ஆதாரமாதலின், அது தக்க காலங்களிற் கிடைத்தது என்பது தோன்ற 'வாய்ந்த' என்றார் வாய்ப்பு என்பது தற்செயலாகத் தோன்றுவது. வாங்கு கதிர் - வளைந்த கதிர்களையுடைய, வரகு - வரகு பயிர்களில் திரிமருப்பு - முறுக்குண்ட கொம்பு இரலை - ஒருவகை ஆண்மான் மடமான் - மடப்பத்தையுடைய பெண்மான், மடப்பம் - மென்மை உகள - திரிய எதிர் செல் வெண்மழை - இனிமேற் பெய்வதற்காகச் செல்கின்ற வெள்ளிய மேகம். கார்காலம் என்பது ஆவணி புரட்டாசித் திங்கள். தலைவன் வந்தது ஆவணி முதலில் மழை பெய்வதற்கு இன்னுங் காலமிருப்பதனால் ஆவணித் திங்களை எதிர்செல் வெண்மழை பொழியுந் திங்கள் என்றார் பிறக்கு - பின்னால். துனை - விரைவு. துனைபரி - விரைவாய்ச் செல்லுங் குதிரை. வினைவிளங்கு - தொழில் திறம் விளங்குகின்ற. மா - குதிரை (௩௧)

## கடமை இன்னலைப் பாராது

[பொருள் தேடவேண்டும்; வாழ்க்கையைச் செவ்வையாய் நடத்த வேண்டும், பொருளில்லா திருத்தல் இரத்தலைவிட இழிவானது. முன்னோர் செல்வம் பின்னோர்க்கு உரியது அதனைச் சிதைத்தல் நன்றன்று, தானே முயன்று தேடுதல் கடமையாகும். கடமைக்குமுன் வினைய இன்னல்களெல்லாம் பொருளல்ல]

உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவெனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர் வாழி தோழி; என்றும்
கூற்றத் தன்ன கொலைவேன் மறவர்

ஆற்றிருந்து அல்கி வழங்குநர்ச் செகுத்த
படுமுடை பருந்துபார்த் திருக்கும
நெடுமூ திடைய நீர்இல ஆறே.

—குறுந்தொகை, உஅரு.

காதல தவிர்க்கமுடியாததுதான்; எனறுலும, கடமை அதனினும தவிாககமுடியாததேயாகும.

வாழுக்கைக்குத தேவையான பொருளைத தேடவேண்டுவது தலைமகனுககுக் கட்டாயமாயிறறு.

'முனனோா செலவம நிறைய இருந்தாலும அங்ஙனம உள்ளதைச் செலவுசெயது அழிபபோா, உயிரோடு இருப பவரெனறு கருதப்படமாட்டாா. உள்ளதை அழிக்காவிட் டாலும, அதன பயனை மட்டுமேனும துயததுகொண்டு தாம ஒன்றும முயறசியிலலாதிருப்பவரது வாழுக்கை, பிச்சையெடுக்கும் வாழுககையினும இழிவானது;' ஆத லின் தன முயறசியிற பொருள தேடவேண்டுவது தலை மகனுககுக கட்டாயமாயிறறு.

தலைவன இப் பொறுபபை உணர்நது, பொருள் தேடும் ஆணமையுடன தலைவியைப பிரிய உறுதிசெயதான். 'அவவாண்மை தோன்ற மேறகாட்டிய காரணங்களுடன் தலைவியினிடமும சொன்ஞன். சொலலிய வன்மையைச் செயலிலும தெளியக காட்டிஞன்'

அவன் செனற வழிபோ மிகவும கடுமையானது. 'எனறும கூறறுவனைப போன்ற கொலைவேல மறவாகள் அஙகே வழியில தங்கியிருநது, அங்கு வருகின்றவாகளைக் கொனறு போடுதலால், அதனுல உண்டான முடைநாறற முடைய தசைகளைப பருநதுகள் தாம உண்ணுவதறகு எதிர்பாாததிருககின்ற, நெடுநதொலைவு பரநத நடமாட்ட மிலலாத இடஙகளையுடையதான, நீரிலலாத வழியா யிருக கினறது.'

எனறுலுங் கடமையுணர்வு இத துன்பங்கட்கெல்லாம அஞ்சுமோ? தலைவன் அஞசாது அவ வழிச் சென்றுன்.

'தோழி, நீ வாழி; தலைவர் இக் கொடிய வழியிற் கடமை மேற் சென்றனர்; பிரிவாற்றாமை ஒரு பக்கமாக, இக் கொடிய வழியின் தன்மையை நினைக்கும்போது, அதுவே பொறுக்கக் கூடாததா யிருக்கின்றது; என் செய்வேன்' என்று தலைவி சொல்லுவதாக உள்ளது இப் பாட்டு.

**குறிப்புரை** :—சிதைப்போர் - அழிப்போர். உளர் - உயிரோடிருப்பவர், இலரோர் - முயற்சியில்லாதவர், இரத்தல், சிறிதேனும் முயற்சியுடையதாதலால், ஒரு முயற்சியு மில்லாதவரது வாழ்க்கை அதனினும் இழிந்ததாயிற்று கொலை வேல் - கொல்லுந் தொழிலைச் செய்யும் வேல் ஆற்றிருந்து அலகி - ஆற்றில் அலகியிருந்து, ஆறு - வழி; அலகி - தங்கி வழங்குநர் - வழியிற் செல்வோரை. செகுத்த - கொன்ற, படு - உண்டான, புடை - தசை; முடைநாற்றமுடைய தசை. மூது - பழமையை யணாததும். நடமாட்டமில்லாதது என்பது பொருள் இடைய - இடத்தையுடைய. 'நீரில ஆறு சென்றனர்' என்று கொள்ளவேண்டும். அதுவே கவலையாயிருக்கின்றதென்பது கருத்து. ஆறு - வழி. (௬௨)

## அறவுணர்வு எல்லா நலனுந் தரும்

[அறமுறை நிலவாத நாட்டில் ஒரு நன்மையும் உண்டாவதில்லை; ஓரறிவுயிர்களும் செழுமையாக வளர்வதில்லை, தக்க பயன் றருவதில்லை கடைசியில், பசி பிணி பகை முதலியன உண்டாகி நாட்டுக்கு இன்னல் விளைக்கின்றன]

சிறுகுடி யீரே, சிறுகுடி யீரே,
வள்ளிகீழ் வீழா, வரைமிசைத் தேன்றொடா;
கொல்லை குரல்வாங்கி ஈனா, மலைவாழுநர்
அல்ல புரிந்தொழுக லான்.

—கலித்தொகை, ௩௯: ௧௧-௪.

நாட்டில் அறவுணர்வு நிலவாவிட்டால் ஒரு நன்மையும் உண்டாவதற்கு வழியில்லை.

ஒரு தலைவியின் பொருட்டுத் தோழி பின்வருமாறு சொல்லுகிறாள்: 'இங்கே மலையில் வாழ்கின்றவர்கள் அற

மல்லாத காரியங்களை விரும்பிச் செய்வதனால், இனி இந்த மலையில் வள்ளிக் கிழங்குகள் நிலத்தினுள் இறங்கி விளைய மாட்டா. இந்த மலையின்மேல வண்டுகள் தேன்கூடுகள் தொடுக்கமாட்டா. இந்த மலைப் புனங்களில் தினைப்பயிர்கள் கதிர்வாங்கிப பயன தரமாட்டா.”

‘தலைவிக்கு இடுக்கண் நேர்ந்த காலத்தில உதவி செய்து அவள் உயிரை மீட்ட அவள்தன ஆருயிரக் காதலனுக்கே அவளை மணஞ்செய்து கொடுப்பதன்றோ அறம்? இம் மலைவாழநர் அதனைச் செய்யாமல பிறர்க்கு மணஞ்செய்து கொடுக்கும் அறமல்லாத முயறசியை விரும்பிச் செய்கின்றனரே’ என்பது தோழியின் வருத்தம்.

இப் பாட்டினால அறவுணர்வின முதன்மை நன்கு பெறப்படும். இது பெரிதுங் கருத்திருத்துதற்குரியது.

குறிப்புரை:—‘சிறுகுடி’ என்பது மலைப் பக்கங்களிற் சிறிய சிறிய குடியிருப்புகளாக அமைந்த சிற்றூர். சிலர் செய்யும் அறமல்லாச் செயல்களால் ஊர்முழுமைக்கும் தீமைவிளையுமாதலின், ‘சிறுகுடியீரே சிறு குடியீரே’ என்று ஊராரை விளித்துத் தோழி தன் கருத்தைத் தெரிவிப்பதாக உள்ளது இப் பாட்டு. கீழ் விழா - கீழ் இறங்கா. வரை - மலை, மிசை - மேல. தேன - தேன வண்டுகள். தொடா - தொடுக்கமாட்டா. குரல - கதிர். வாங்கி - விட்டு. ஈனு - தானியங்களைத் தரா. அல்ல - அறமல்லாதன; புரிந்து - விரும்பிச் செய்து; ஒழுகுவதனால் - நடப்பதனால்; புரிந்தொழுகுதல - விரும்பிச்செய்தல என்று ஒரு சொல்தன்மையிற் பொருள்படும். (௩௩)

## குணங்களின் கருத்து வரையறை

[பண்புகளை வரையறைசெய்து திட்டமாக அறிந்துகொள்ளுதலும் பழகுதலும் எளியவல்ல. இச் செய்யுளில் அவை தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளன. ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறை, முறை, பொறை என்பவற்றின் இயல்புகள் இதனால் இனிது விளங்கும்.]

ஆற்றுதல என்பதொன்று அலந்தவர்க் குதவுதல்;
போற்றுதல என்பது புணர்ந்தாரைப் பிரியாமை;

பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்,
அன்பெனப் படுவது தனகிளை செறாஅமை;
அறிவெனப் படுவது பேதையார் சொலநோன்றல;
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை;
நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை;
முறையெனப படுவது கணணோடாது உயிர்வௌவல்;
பொறையெனப் படுவது போறறாரைப் பொறுத்தல்.

—கலிததொகை, கங௩ . ௬-௧௪.

'வாழக்கைசெய்தல்' எனபது, வறுமைப்பட்டவர்களுககு ஒனறு உதவுதல. ஒனறைப 'பாதுகாததல்' என்பது, கூடினவர்களைப பிரியாமலிருப்பது. பிரியுமபடியான நிலைமைகள எதிரபபட்டாலும, கூடியவரையில உடனே பிரிநதுவிடாதபடி பாதுகாததுக்கொளள வேண்டும என்பது கருதது. 'மக்கள் தனமை' எனபது, உலக நடைமுறை அறிநது ஒழுகுதல்; 'அன்பு' என்பது, சுறறதத வாகளைக் கைவிடாதிருததல. 'அறிவு' எனபது, அறியாமையுடையாா சொனன சொறகளைப பொறுததுக்கொளளுதல. உறவு எனபது, ஒருவாககு ஒனறு கூறியதைப பின மறுக்காமற செயவதனுல உண்டாவது. 'நிறை' என்பது, மறைவுகளை வெளிப்படுததாமல அடஙகி ஒழுகுதல. 'முறை' எனபது, ஏறற பிழையாயின தமமவா எனறு கண்ணோட்டஞ செய்யாமல அவா உயிரைக் கொளளுதல, இம முறைமை அரசனை நினைநது சொலலியது. 'பொறுமை' எனபது, தமமை இகழவாரையும உரிய காலம வரையிற பொறுததுககொளளுதல

குணஙகளின இக் கருததுவரமபுகள் தெரிநதால, ஒழுகுவோாக்கு மயககமில்லாம லிருககும. இஙகே இவற றைத தெளிவாக வரையறை செயதபடி, இவவளவு எளிய முறையிலுந தொகுதியாகவும பிறவிடஙகளிற காண்பது அரிது.

**குறிப்புரை :—**ஆற்றுதல் - செயதல், இஙகே வாழககை செயதல்; அதாவது இல்லறம நடததுதல். அலந்தவா - வறுமையால்

துன்புற்றவர். போற்றுதல் - பாதுகாததல். புணாநதாா - கூடினவா, நணபா. பணபு - தனமை ; மககள தனமை பாடு - உலக முறைமை, அவரவாககும உளள குறைவு நிறைவுகள் தெரிநது ஏறப ஒழுகுதல ; கிளை - சுறறம, செறறு அமை - சினநது அகறறமை பேதையாா - அறியாதாா, நோன்றல - பொறுததல். செறிவு - நெருஙகி யிருததல, அதாவது உறவு மாறறமை - மறுககாமற செயகல, அதனுறறான உறவு பொருநதும எனபது கருதது. நிறை - உளளததை நிறுததுதல, மறை - மறைநத கருததுகள் செயலகள் முதலியன ; கணணோடாது - கணணோடடஞ செயயாமல, வெளவல - கொள்ளுதல. பொறை - பொறுமை. போறறாா - பகைவா. (௯௪)

## பயனகருதாத உதவி உயிராறறலை மிகுக்கும்

['உதவி செயதல' என்னுங குணம பிறவியை மாடசிமைபபடுததுகினறது, அறியாமையிருளால மூடபபடடுளள உயிரின இனிய பணபுகளை வெளிபபடுததி ஒளிவிளஙகச செயகினறது. பயன கருதாத உதவி, அதனிலும மறுமைபபயனுஙகருதாத உதவியே அநதத திறததிற சிறநதது.]

இம்மைச செயதது மறுமைககு ஆமஎனும
அறவிலை வணிகன ஆய்அலன, பிறரும
சானறோர் சென்ற நெறிஎன
ஆஙகுப் பட்டன்று, அவனகை வணமையே.

—புறநானூறு, கஙச.

சிலர் உடனே வரக்கூடிய பயனை எதிர்பாராததே மறறவாகளுககுச சில உதவிகளைச செய்துவருகிறாாகள. வேறு சிலா, இநதப பிறவியிலேயே பிறகாலததில உண்டாககக் கூடிய சில பயனகளைக கருதி, இபபோதிருந்தே உதவி செயது வருகிறாாகள். இனனுஞ் சிலா, இநதப் பிறவியில மறறவர்களுககு உதவிசெய்து வைததால அநத அறம மறுபிறவியில தமக்கு உதவியாயிருககும் என்று மறுமைப் பயன் கருதி, இமமையில அறஞ் செய்கிறார்கள்

முன் காலததில் நமது நாட்டில 'ஆய' என்னும வள்ளல் ஒருவன் இருந்தான். அவன, தான் ஒருவருக்கு

ஒன்று உதவிசெய்யும்போது, அந்த மறுமைப் பயனையும் எதிர்பாராப்பதில்லை. அந்தக் குணம எவ்வளவு உயர்ந்ததா யிருக்கிறது! சான்றோர்கள் இந்த முறையிலேதான் நடந்து காட்டினர்கள் என்று பிறரும சொலலுவாாகள. அதனிற சோநதது இந்த ஆய என்பவனின் கைவளம. மேலும, தமக்கு மறுமையில 'அறம்' உண்டாகுமா எனறு கருதி இபபோது ஒருவருக்குப் பொருள் கொடுதது உதவி செயதால், அதறகு 'உதவி' என்பது பெயராகாது. வேணடுமானுல அதனை, ஒருவகையான 'வாணிகம' என்று சொலலலாம. பொருளைக கொடுதது அறத்தைப பெறருல், அது பண்டமாறறுப்போல வாணிகமாகததானே முடிகிறது. அறததை விலைகொடுதது வாங்குமா அத்தகைய அறவிலை வாணிகன் அல்லன் ஆய் என்பவன்.

அவன் சிறப்பைப்பறறிப் புகழ்நதுபாட விருமபிய புலவா, இநதக் கருததுகளை வைதது மேலே காட்டியிருக் குமா பாடடைப் பாடியிருக்கிறுர்.

உதவி என்பது, அறமநோக்கிச் செய்வது அன்று; அபபடிச் செய்தால், ஒன்றை எதிர்பார்ததல் என்னும் குணமே மிகுதிபபடுமா; இரக்க உள்ளம உண்டாகாது; இரககம முதலிய உயிாக்குணங்கள் நன்ருய் மலரவேண் டுமா என்பதே பிறவியின் நோக்கம; அந நோக்கம ஈடேற வேண்டுமா. இவ் வுயர்நத கருததுகள் இப பாட்டிலிருநது நுட்பமாய் வெளிப்படுகினறன.

குறிபபுரை:—ஆஙகு - அநதத தன்மையில, பட்டன்று - பட்டது; சோநதது என்பது சுருதது அவன் கை வணமை - அவன் கையினுல செய்யும உதவி எனனுங கருததில் வநதது. (௫௫)

## புலவர் சிலரிடம் செல்வம் தஙகாமைக்கு ஒரு காரணம்

[செல்வம வேறு, திருவுடைமை வேறு, செல்வம போவதும வருவதுமாயிருககும், அது போதலும வருதலுமே வேணடும. ஆனுல அச செல்வததிற்குக காரணமாயுள்ள திருவுடைமை நிலையானது அது சானருணமையினுல் நிலைபெறுவது. புலவாககு அததிருவடைமை எஞ்ஞான்றும் உண்டு. செல்வம்

*இரக்கத்தின் செல்வழித்தற்குரியது; முதன்மையான காலங்களில் திருவுடைமை மீண்டும் அதனைப் படைக்கவல்லது ]*

நின்நயந்து உறைநர்க்கும், நீநயந்து உறைநர்க்கும்,
பன்மாண் கற்பின்நின் கிளைமுதலோர்க்கும்,
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்;
இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது,
வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி, மனைகிழ வோயே,
பழம்தூங்கும் முதிரத்துக் கிழவன்
திருந்துவேல் குமணன் நல்கிய வளனே.

—புறநானூறு, ௧௬௩.

பெருஞ் சித்திரனார் என்னும் புலவர்பெருமானின் போக்கு ஒரு பெருஞ் சித்திரமாகவே இருக்கின்றது. ஒரு நேரத்தில் மிகவும் வறியவராய் இருக்கிறார். இன்னொரு நேரத்தில், பெரிய தொகை ஒன்று கையில் வைத்திருக்கிறார் மறுநேரத்தில், அவரிடம் ஒன்றுமே இல்லை. செல்வமும் வறுமையும் ஆறு இடும் மேடும் மடுவும்போல் ஆகும் என்னும் உண்மை அவரிடத்தில் விளக்கமா யிருக்கின்றது.

அவர், தமது வறுமையைப்பற்றிச் சொல்லுங் காலங்களில் கன்னெஞ்சமும் நீராயக் கரையும்

"வீட்டில் உணவே இராதாம். தாயின் முலைப்பால் வற்றிக் கிடத்தலால் தன் புதல்வன் பாலுண்பதற்கும் வழியில்லையாம். அந்தக் குழந்தை சிறிதுநேரம் முலைக் காம்பை ஊச்சி ஊச்சிப் பார்த்துவிட்டு, பசி மிகுதியால் அடுக்களையுள் நுழைந்து அங்கே வைத்திருக்கும் பாண்டங்களை ஒவ்வொன்றாகத் திறந்து பார்த்து, அவைகளில் எதுவும் இல்லாமையால் ஏமாந்து அழுமாம் இரவிலும் இதே நிலைதான். அழுகையை மாற்றுவதற்காகத் தாய், 'புலி' 'புலி' என்று அச்சங் காட்டுவாளாம், ஒருகால் 'நிலா'

நிலா' என்று மகிழ்ச்சி ஊட்டுவாளாம; எதனுலும் அழுகை தீராமையின் அவள் மிகவும நொநது, 'ஐயோ, நினது வாடிய நிலையை நின் அபபாவுக்குததான காட்டு' என்று சொலலி மனங்கரைவாளாம்." (புறம். ௧௬௦)

இபபடிபபட்ட கொடிய வறுமையாளராகததான் இவா இருககிருா இருநதாலும், இவருக்குச செலவம இல்லை என்று சொலலுவதறகில்லை. சில நேரஙகளிற பேரளவான செலவமும இவருககுக் கிடைககினறது. ஆனல அபபோது அவா, ஒரு பரமபரையான பெருஞ செலவா போலவும, பெரிய வளளலபோலவுந தோன்று கின்ருா. உடனே அது செலவழிநது போகிறது.

ஒரு நாள குமணன என்னும நறகுணமுள்ள வளளல் இவா இல்லததின் வறுமைத துனபம தெரிநது, இவருககு ஒரு பெருநதொகையான பொருளை அன்புடன் வழஙகினை புலவா அதனை வீட்டுக்குக கொண்டுவந தார். வநதவர், தம அனபின மனைவியாரை அழைதது அதனை அவருககுக் காட்டி, பினவருமாறு சொலலுகிருர்.

"உனனை நேசிதது உன சாாபாயிருககும மாதா களுககும, நீ நேசிதது நீ சோநதிருககும மாதாகளுகதும, பல மாடசிமையான ஒழுககஙகளையுடைய உன உறவினா கடகு முதலவாகளாய ஆண்டில் மூததிருபபோாகளுககும், நமமைச சாாநது இஙகே இருககும நம சுறறங்களின் பெரும பசி நீஙகுவதறகாக முனனே நீ அளவு குறிதது வாஙகினமையால நெடுஙகாலமாகத 'திருப்பித தருவாய' என்று எதிாபாாததிருக்கும நின் கடன பொருளை அநத நேரததில உதவி செயதவாகளுக்கும, இனனும இனனுருக் குததான தாவேண்டும என்று எண்ணுமலும், என்னேடு கருதாமலும, இனி வலலமையாய் வாழககை நடததுவோம் என்று சிக்கனதனததயே நினையாமலும நீயும இநதபபெருஞ் செலவததை எலலாருக்கும வழஙகு ; நானும என் பகுதிப் பட்டவர்களுககெல்லாம வழஙகுவேன். மனைவீ ! பழுங் கள் தொஙகும முதிரமலைக்கு உரியவனை, திருந்திய

படைகளை ஏந்தும் குமணவள்ளல் நமக்கு நலமெண்ணத் துடன் அளித்த பெருநதொகை இது."

எப்படி இருக்கிறது இந்தக் குடும்பத்தவர்களின் சிக்கனமும் வாழ்க்கையும்! இவர்களிடம் செல்வம் எப்படி நிலைக்கும்?

பெருஞ் சித்திரனார் அந்த வறுமையிலும் தம் மனைவி யாரிடம் இப்படி பேச இடமிருந்ததென்றால், தம் கண வனார் உள்ளத்துக்கு மாறுபடாமல் இசைந்திருந்து இல்லறம் நடத்தும் நற்குணத்தில் அந்த அம்மையார் எவ்வளவு மேம்பட்டவர்களாயிருந்திருக்கவேண்டும்! மேலும், பெருஞ் சித்திரனார் இந்தப் பேச்சை இங்ஙனம் உரைநடை யிற் பேசினதாகத் தெரியவில்லை. தலைப்பிற் காட்டியிருக் கும் பாட்டு வடிவமாகவே பேசியிருக்கிறார். அந்த அம மையாரும் அதனை அறிந்துகொள்ளத் தக்க புலமை வாய்ந் தவராகவே இருந்திருக்கவேண்டும். இருவரும் கலவிச் செல்வர்கள்.

இவர்களைப் பொருட்செல்வம் இல்லாதவர்கள் என்று சொல்லத்தான் இடமிருக்கிறதா?

செல்வத்தைப்பாதுகாப்பது இவர்கள்கருத்தாக இல்லை. அதனைத் தக்கவாறு பயன்படுத்துவதே இவர்கள் கருத்தா யிருக்கிறது. தமக்குப் பொருள் கிடைக்கும்போது தம்மைப்போலத்தானே மற்றவர்களுக்கும் துன்பம் உண்டு என்று இவர்கள் உள்ளம் நினைக்கிறது. அதனால் தாமே அதனைப் பயன்படுத்திக்கொள்ள இவர்களுக்கு மனம் வர வில்லை. இதுவன்றோ, நாகரிகம் என்பது. செல்வத்தை வைத்துப் பாதுகாத்துக்கொண் டிருப்பவர்கள் செல்வர்கள் அல்லர். அதனைத் தக்கபடி பயன்படுத்தி வாழ்பவர்களே உண்மைச் செல்வர்கள்.

பெருஞ்சித்திரனார், நல்லுணர்ச்சிகளுக்கு ஒரு களஞ்சி யம்.

புலவர்களின் உயர்ந்த உள்ளப் போக்குகளே அவர் கள் சில நேரங்களிற் பொருளில்லாமல் இருப்பதற்குக்

காரணம் என்பது இந்தப் பாட்டிலிருந்து நன்றாய் விளங்குகின்றது.

**குறிப்புரை** —நயந்து - விரும்பி, ‘நின் நயந்து உறைநர்’ என்று குறிக்கப்பட்டவர்கள் அந்த அம்மையாரின் அறிவு ஆற்றல்களுக்குக் கீழ்ப்பட்டவர்கள். ‘நீ நயந்து உறைநர்’ எனப்பட்டவர்கள் அந்த அம்மையாரினும் உயர்ந்தவர்கள். மாண் - மாட்சிமையான. கற்பு - ஒழுக்கம். கடும்பு - சுற்றம். ‘யாழ’ என்பதற்குப் பொருளில்லை, அசை. நீயும் கொடு என்றமையால், நானும் கொடுப்பேன் என்னும் கருத்துப் பெறப்பட்டது. ‘கொடு மதி’ என்பதில் ‘மதி’ என்பதற்குப் பொருளில்லை, அசை. மனைகிழவோய் - மனைக்கு உரிமையுடையோய், மனைவி என்பதற்கு வந்தது. தூங்கும் - தொங்கும். கிழவன் - உரியவன். நல்கிய - நல்லெண்ணத்துடன் கொடுத்த; வளன் - இங்கே மிக்க பொருள் என்பது குறித்து நின்றது. (௩௬)

## அன்பின் இயற்கை

[அன்பு, வெள்ளத்திற்கு ஒப்பானது; பள்ளம் வெள்ளத்தை ஏற்கும், அவ்வாறே ஆழ்ந்த உள்ளமும் அன்பு நிறைதற்குரியது. தாம் சேர்ந்திருக்கும் தக்கோரின் ஆழ்ந்த பெருங் குணங்களாலே தான் தமக்கும் ஆழ்ந்த உள்ளம் உண்டாகும், பின்பு அன்பும் நிறையும்.]

எந்தை வாழி ஆதனுங்க என்
நெஞ்சம் திறப்போர் நின்காண் குவரே;
நின்யான் மறப்பின் மறக்குங் காலை
என்னுயிர் யாக்கையின் பிரியும் பொழுதும்
என்யான் மறப்பின் மறக்குவென்; வென்வேல்
விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
உலக இடைகழி அறைவாய் நிலைஇய
மலர்வாய் மண்டிலத் தன்ன நாளும்
பலர்புரவு எதிர்ந்த அறத்துறை நின்னே.

—புறநானூறு, ௧௭௫.

ஆதநிரையனார் என்பவர் புலவா; ஆதனுங்கன் என்பவன் அரசன். அவா அவனிடம மிகுநத அனபு வைத்திருநதாா. மிகுந்த அனபு எனறால, எவவளவு அனபு என்று தெரிந்துகொளளமுடியும?

புலவரே அதனை யாரும நனறாய்த தெரிநதுகொளளக் கூடிய வகையில வெளிப்படுததுகினறாா. அவா இபபடி சொலலுகிறாா:

"என தலைவனே! ஆதனுங்க! நீ நெடுஙகாலம வாழ வாயாக! என நெஞசததை யாராவது திறநது பாாத்தால, அவர்கள் அதனுள உனனைக காண்பார்கள், வேறு யாரும என் நெஞசததை இடஙகொண்டிலலை. அபபடியிருக்கும போது உனனை நான மறக்கும நேரம எனபதும ஒன்று உண்டோ? ஒருகால உனனை நான் மறபபின, அம மறககுங்காலம எது தெரியுமா? என உயிா இநத உடமபை விட்டுப் பிரியுஙகாலததிலும என்னையே நான மறநதுவிடுங் காலம நேருமாயின, அதுதான நான உனனை மறநதுவிடுங் காலம" எனகிறாா ஆ! அநத அரசனைபபறறிய அன்பு அவருள்ளததில எவவளவு ஆழமாகவும எவவளவு கலப்பாகவும அமைநதிருககினறது!

ஆதனுஙகனிடம இவவளவு அன்பு ஏன்? அவனுடைய அருமையான பெருஙகுணநதான புலவரை இஙஙனம கவர்ந்துவிடடது. உண்மையான நறபண்புகளே பிறா உளளஙகளை இவவளவு உளளுா அளள வலலது.

அப்படி ஆதனுஙகனிடம அமைநத குணநதான் யாது? தாம இவவளவு அனபிற றிளைத்தறகுக் காரணமாயிருநத அவனது குணம இனனதென்பதையும ஒரு வியப்பான உவமையுடன் புலவா வெளிப்படுததுகின்றாா.

இமயமலை இருக்கிறது; அப் பக்கத்தில 'மோரியா' என்னும அரசா அரசாண்டுவநதனர். அவாகள இமயமலைக்கு இபபாலும் அப்பாலும் தமது ஆட்சிச் சககரத்தைச் செலுத்தும பொருட்டு, அம் மலைச்சாரலில தாழவா

யுள்ள ஒரு பக்கத்தில, ஒரு வழி வெட்டியமைக்கப்பட்டது அந்த வழி உலகததுக்கே ஓா இடைகழிபோல அமைந்தது. அப்படி இடையறுக்கப்பட்ட இடததில, ஒரு நாடும் நிறுவபபட்டது. அது வழியில இருநததலால, இமயமலைக்கு அப்பாலும இப்பாலும செலவாாககு அங்கே பல வசதிகள் செயதுதர நோ்நதது. இதனல வருவாரையும போவாரை யும எநநேரமும வரவேறறு உதவும அறததுறையாய அநத இடம திகழலாயிறறு.

அதுபோலவே ஆதனுங்கனும் இரவுபக லென்னுமல் வருவோரை வரவேறறுப் பலரையுங் காததலை மேற கொண்டு அறததுறையாய விளங்குகினறனன்.

இந நறபண்பு புலவருள்ளததை அவவளவு கவர்ந்து விட்டது!

உலகத்தில் தமக்கு நேரும உதவிக்காக அன்பு செலுத் துவோரே பலா. ஆததிரையனா் அவன் இயறகைப் பண்பு நோக்கியே இததனை அன்பு செலுததுகின்றார்.

இவ விருவருள்ளங்களின் மாட்சிமை எவவளவு பெரிது!

குறிப்புரை :—நின காணகுவா - நின்னைக காணபா; நின யான் - நினனை யான, யாககையின - யாககையிலிருநது மறககு வென - மறபபேன வென்வேல - வெலவேல, வெற்றிவேல். விணபொரு நெடு குடை - வானததை முட்டும உயாநத குடை. கொடித தோ - கொடியினல அணிசெயயபபட்ட தோ. மோரியா - ஒருவகை அரச மரபினா. வேலையும குடையையும தேரையும் உடைய மோரியா எனறு கொள்ளவேணடும. திண் கதிாத திகிரி - வலிய கதிரையுடைய ஆட்சிச சககரம. திரிதா - இயஙக; குறைதத - வெட்டபபட்ட ; அறை - இடை அறுககபபட்ட. வாய - இடம. நிலைஇய - நிலைபெற்ற மலா - அகனற, வாய - இடததையுடைய. மணடிலம - நாடு. புரவு - பாதுகாததலை. எதிாநத - மேற்கொணட. அறததுறை - அறமாகிய இடம (கஎ)

## உலகம் இருக்கிறதா இல்லையா என்பதற்கு விடை

[உலக வாழ்க்கை, உண்மையில் ஒப்புரவாளர் செய்கையினாலேயே இயங்கி வருகின்றது. அச் சான்றாண்மையே உலகியலின் மூலக்கயிறு. சான்றாண்மை இல்லையாயின் உலகம் இல்லை. தன்னலங் கருதாது அறத்தின்வழி நின்று கடமைகள் ஆற்றுதலே அவ் வொப்புரவுப் பண்பாகும். அதனால் உலக வாழ்வும் என்றும் உயிர்கொண்டு இயங்கி வருகின்றது.]

உண்டால் அம்மஇவ் உலகம், இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும், இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சி,
புகழெனின், உயிரும் கொடுக்குவர், பழியெனின்,
உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.

—புறநானூறு, க அ உ.

ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வகையான ஐயம் உண்டாவதுண்டு. சிலர் உண்மையில் ஐயங் கொள்ளாமலே, ஐயங் கொள்வது போலவும் அதற்கு விடை காண்பது போலவும் நடிக்கின்றனர்.

'இளம் பெரு வழுதியார்' என்பவர் ஒருவர். அவர் பாண்டிய மரபைச் சேர்ந்தவர். அவருக்கு ஒரு வியப்பான ஐயம் எழுந்துவிட்டது. இந்த உலகம் இருக்கிறதா, இல்லையா என்பதுதான் அது. இதற்கு விடைதான் மேலே உள்ள பாட்டு. இவரைக், 'கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதியார்' என்றும் சொல்வதுண்டு. இவர் கடலுள் மாய்ந்தமையால், இந்த அடைமொழியைச் சேர்த்திருக்கிறார்கள். என்ன காரணத்தால் இவர் கடலுள் மாய்ந்தாரோ அது தெரியவில்லை.

அவருக்கு எழுந்த இந்த ஐயமும் அவர் பெயருக்கு

அமைந்த இந்த அடைமொழியும் ஒப்ப நோக்குகிறவர்களுக்கு, ஒரு காலத்தில் திருமால் கடலினுட்புகுந்து உலகத்தையே மறுபடியும் மேலே கொண்டுவந்ததுபோல இவரும் உலகத்தைத் தேடிக்கொண்டுதான் கடலுக்குள் மறைந்து விட்டாரோ என்று வேடிக்கையாகத் தோன்றும். மேலும், இந்த ஐயத்துக்கு விடையாக உள்ள மேற்காட்டிய பாட்டுப் புறநானூற்றில் வருகின்றது. அதன் அடியிலேதான 'கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியார் பாட்டு' என்று இந்த அடைமொழியுடன் அவர் பெயர் காணப்படுகின்றது. பரிபாடல் என்னும் நூலிலும், இவர் பாடியதாகப் பதினைந்தாம் பாடல் ஒன்று உண்டு. அதனடியில் 'இளம்பெருவழுதியார் பாட்டு' என்றுதான் காணப்படுகின்றது அங்கே இந்த அடைமொழி இல்லை. மேலே கொண்ட வேடிக்கைக் கருத்துக்கு இதுவும் ஒரு சான்றாய் உதவும் என்றே வைத்துக்கொள்வோம். மேலும் இந்தப் புறநானூற்றுப்பாடல், உலகம் உண்டு என்று விடை அமைந்த பாட்டாகவேயிருக்கின்றது. ஆதலால், கடலினுள் மறைந்தவர், உலகத்தை எடுத்துக்கொண்டு வெற்றியுடன் திரும்பி வந்துவிட்டார் என்று கொள்ளலாம். ஆம், அவர் உடல் மாய்ந்தாலும், அவர் இந்தப் பாட்டு வடிவமாய் இன்றுங் காட்சி கொடுத்துக் கொண்டுதானே இருக்கிறார். அவர் குரல் இதோ கேட்கின்றது

"உண்டு இந்த உலகம், ஏனென்றால், தேவர்கள் உண்ணும் அமிழ்தமே இங்குக் கிடைப்பதாயிருந்தாலும், இனியதொன்று கிடைத்துவிட்டது என்று கருதி அதனை எடுத்துக்கொண்டுபோய்த் தனியாய் உண்பவர்களும் இங்கே இல்லை யாரிடமும் எதனோடும் வெறுப்புக் கொள்ளுகிறவர்களும் இல்லை பிறர் அஞ்சும் இடர்களுக்குத் தாமும் அஞ்சி அதனால் புதிய புதிய நற்செயல்களைச் செய்யாமல் மனம் மடிந்திருப்பவர்களும் இல்லை. புகழ் தரக்கூடிய காரியமென்றால் தம் உயிருங் கொடுப்பார். பழி தரக்கூடிய காரியமென்றால், அதனால் உலக முழுதுமே பெறுவதாயிருந்தாலும் அந்தக் காரியத்தை மேற்கொள்ளமாட்டார்கள்.

காரியங்கள் செய்யும்போது தளர்ச்சி கொள்கிறவர்கள் இல்லை. அப்படிப்பட்ட மாட்சிமை வாய்ந்து, அம் மாட்சிமையே உருவாகித் தமக்கென்று முயலாத வலிய பெரு முயற்சியுள்ளவர்களாயப் பிறர்க்கென முயலுகின்றவர்கள் இருத்தலால்;" என்பது

'இப்படிப்பட்ட மாட்சிகளெல்லாம் உடையவர்களாய, பிறர்க்கென முயலுகிறவர்கள் இருப்பதனால், இந்த உலகம் உண்டு' என்றே துணியப்படும் என்பது கருத்து.

மேற்காட்டிய மாட்சிமையான அறிவின் இயல்புகள் இல்லாவிட்டால், மக்களுக்குள் அமைதியில்லாமல் ஒருவரையொருவர் வீழ்த்திக்கொண்டு உலகம் நிலைகுலையும் அதனால் உலகம் இருக்கிறதா இல்லையா என்று ஐயங் கொள்வதற்கு இடமுண்டாயிற்று.

நல்லவர்களும் நற்செயல்களும் மேலுமேலுந் தோன்றி நடைபெறுவதனாலேதான் நாடு இயங்கிக்கொண்டிருக்கிறது; இல்லாவிட்டால் மனித வாழ்வு கெட்டு விலங்கு வாழ்வுக்கிடமான காடாயவிடும். அப்போது இதனை உலக மென்று சொல்லுவது அவ்வளவு பொருத்தமா யிராது. இதன்கண் இவ்வுண்மைகள் விளக்கப்பட்டிருக்கின்றன

**குறிப்புரை:**—உண்டு ஆல் அம்ம என்று பிரிக்கவேண்டும். ஆல், அம்ம என்பவை அசைச் சொற்கள். அவைகளுக்குப் பொருள் இல்லை 'இந்திரர் பொதுவாகத் தேவர்கள் என்னும் பொருளில் வந்தது தமியர் - தமியராய், முனிவு - வெறுப்பு துஞ்சல் - தூங்குதல், அதாவது மனம் மடிந்திருத்தல் பிறர் அஞ்சுவது அஞ்சி என்றமையால், புதிய புதிய செயல்கள் என்னும் உயர்ந்த குறிப்புப் பெறப்படும். பழைய செயல்கட்கு மக்கள் அஞ்சுவதில்லை யாதலால் என்று கொள்க உடன் - முழுதும். அனையர் - அவ் வுருவினராய என்று உணர்த்தும் பொருட்டு வந்தது. நோன் தாள் - வலிய முயற்சி; பெரிய பெரிய முயற்சிகள் என்று கொள்ளவேண்டும். முயலுநர் - முயலுவோர். உண்மையான - இருத்தலால், 'முயலுநர் இருத்தலால் உண்டு இவ்வுலகம்' என்று கூட்டிக்கொள்ளவேண்டும்.

## உள்ளத்தின் உரம்

[முயற்சியின் வகைமை இச் செய்யுளில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. தக்க முயற்சியே ஒவ்வொருவரும் செய்தற்குரியர். பொருள் தேடுதல் பெரிதன்று, அதனை உயர்வான நன்முயற்சிகளின் வாயிலாகத் தேடுதலே வேண்டப்படுவது. அதனால் உயிராற்றலும் உள்ளத்தின் உரமும் கிளர்ந்து மிகும்.]

விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டுஅளை மல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி உள்ளதம்
வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொடு
இயைந்த கேண்மை இல்லா கியரோ,
கடுங்கண் கேழல் இடம்பட வீழ்ந்தென
அன்றுஅவண் உண்ணா தாகி வழிநாள்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து
இருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
உரனுடை யாளர் கேண்மையொடு
இயைந்த வைகல் உளவா கியரோ.

—புறநானூறு, ௧௯௦.

எலியின் குணமென்ன புலியின் குணமென்ன என்பவற்றை விளக்கி, எலியின் குணம் போன்றவர்களோடு நட்புக்கொள்ளாமல் புலியின் குணம் போன்றவர்களோடு நட்புக்கொள்ளவேண்டும் என்னும் கருத்தை இப் பாட்டு அழகாக அறிவுறுத்துகின்றது.

வயலில் நெல் விளைந்து முற்றிக் கிடக்கிறது. அங்கே எலி இருக்கிறது. அது, விளைந்த பதத்தையுடைய அச் சிறிய இடத்தைப் பார்க்கிறது. எலிக்கு, மேலே ஏறவேண்டிய முயற்சிகூட இல்லை. எலி வளையின் அருகிலேயே கதிர்கள் வளைந்து சாய்ந்து தரையோடு தரையாய் விழுந்து கிடக்கின்றன. உடனே அந்த எலி, வளைந்து கிடக்கும் அக் கதிர்களாகிய உணவைக் கதிர் கதிராகவே கறித்துக்

கொண்டு போய்த் தனது வளையில் நிறைய வைத்துக்கொள்கின்றது எலியின் முயற்சி இவ்வளவுதான்

மக்களிலும் பலர் இங்ஙனம் எலி முயன்றாற்போலும் சிறிய முயற்சியுடையவரா யிருக்கின்றனர். பெருமுயற்சிக் குரிய உள்ள மேம்பாடு அவர்களிடம் இல்லை. அத்தகைய வர்களோடு பொருந்தும் நட்பு, நல்ல நட்பன்று.

இனி, புலி என்ன செய்கின்றதென்பதும் நினைத்துப் பார்க்கவேண்டும். புலி தன்வழியே போய்க்கொண்டிருக்கிறது. இது விசையாய்ப் பாய்ந்துபோன போக்கில் ஒரு பன்றி கீழே விழுந்தது. அந்தப் பன்றி அஞ்சுதற்குரிய தறுகண்மை யுடையதுதான். ஆண்பன்றியுமாகும். இருந்தாலும், அது பன்றிதானே! மேலும், புலிக்கு இடப்பக்கமாக அது வீழ்ந்தது. அதுவுமன்றி, புலி தனது முயற்சியால் அதனோடு வீரமாய்ப் பொருது அதனை மாய்க்கவில்லை. தற்செயலாய்த் தானே வீழ்ந்தது அதனால், புலிக்கு அப்போது பசியிருந்தாலும் அன்று அங்கே அந்தப் பன்றியைக் கிழித்துத் தின்னவில்லை. அச் செயல் அதற்கு ஒரு குறைவாகத் தோன்றியது. மறுநாள், பெரிய மலையிலுள்ள தனது குகையின் இடம் தனிமையாகும்படி அங்கிருந்து புறப்பட்டது. அன்று உணவுக்கென்றே புறப்பட்டது. அப்படி உணவை விரும்பி எழுந்துபோய் அந்தப் பெரிய மலைப் பிளவுகளிற் பாய்ந்து ஒரு பெரிய ஆண் யானையைத் தனது வலிமை மிகுந்த வலப்பக்கத்தில் விழுந்து இறக்கும்படி வீழ்த்தியது. அதன்பின் அப் புலி தனது ஆண்மைக் கிளர்ச்சி தோன்ற அந்த யானையைக் கிழித்துப் பெருமிதத்தோடு தின்று பசி யாற்றிற்று என்று சொல்லவும் வேண்டுமோ?

அங்ஙனஞ் செய்கின்ற புலி பசித்தாற் போன்ற மெலிவில்லாத நினைவும் அதற்கேற்ற முயற்சி யூக்கமும் உடைய நல்லோரது நட்பே நல்ல நட்பாம். அத்தகைய சிறந்த நட்போடு பொருந்திய நாட்களே, வாழ்வில், உண்டாக வேண்டும்.

இந்தக் கருத்து எவ்வளவு அழகாகவும் மக்கள் வாழ்க்கையை எவ்வளவு முன்னேறக்கூடியதாகவும் இருக்கின்றது! முன்னோர் சொத்தாவது, எவரேனும் நன்கொடையாக அளித்துவிடும் சொத்தாவது, எந்த வகையான இயைபுமற்றியோ தானே வந்துசேரும் சொத்தாவது, மிக எளிய முயற்சியினாலும் களவு சூது கள்ளம் ஏமாற்றம் கடு வட்டி முதலிய இழிந்த இயல்புகளாலுந் திரளும் சொத்தாவது எப்படியேனும் வாய்க்குமா என்று ஏங்கிக் கிடக்கும் அவித்தன்மையுள்ள மக்களின் இழிந்த நிலைக்கும் இப் புலியின் உயர்ந்த நிலைக்கும் ஆ, எவ்வளவு வேறுபாடு! மன்பதை யுலகம் இன்ப உலகாய்த் திகழவேண்டுமானால், இத்தகைய ஊழல்கள் ஒழிந்து மக்களில் ஆடவர் மகளிர் என்னும் இரு பாலாருமே எவருங் குறைகூறக்கூடாத உயர்ந்த நினைவும் அதன்கண் உரமும் உடையவர்களாய்த் திகழவேண்டும்.

இச் சிறந்த வாழ்க்கை முறையை இவ்வளவு அருமையாகப் புலப்படுத்திய உரனுடையாளர் சோழன் நலங்கிள்ளி என்னும் ஆசிரியராவர். இச் செய்யுள் ஒன்றிலேயே, உலகம் அவரது பெரும்போக்கும் பெருமாட்சிமையும் நினைந்து நினைந்து பெரிதும் வியந்து வியந்து இன்புறுதற்குரியதா யிருக்கின்றது.

குறிப்புரை :—சீறிடம் - சிறு இடம்; சிறிய வயலிடம். வல்சி - உணவு. மலர - நிரம்பும்படி. வைக்கும் - சேர்த்து வைக்கும். பின் உதவும் என்று எலி சேர்த்து வைப்பதுபோல மக்கள் பொருளைச் சேர்த்து வைப்பதுகூட உயர்ந்த செயலாகாது என்பதும் பெறப்படும். ஆண்மையால் பொருள் தேடவேண்டும். தனக்கு வேண்டிய அளவுக்கு இன்பமாய் நுகரவேண்டும். உடம்பு உள்ளங்களைச் செவ்வையாய் வைத்துக்கொள்ள வேண்டும். எஞ்சியதை அவ்வப் போதும் மாட்டாதாருக்கு ஈதல் வேண்டும். அங்ஙனம் ஈந்து வைப்பதே தொகுக்கும் சொத்து. இதுவே முறை வாழ்க்கையிலும் உலக வியற்கையிலும் தன்னுள்ளத்திலும் நம்பிக்கை யில்லாதோரே பின் உதவும் எனத் தொகுத்து வைப்போராவர். எலி அங்ஙனந் தொகுத்துவைத்துப் பெருவாழ்வு வாழ்ந்து விடவுமில்லை. புலி அவ்வப்போதும் புதுப் புது உணவு தேடி உண்டுவிடுதலால், அது

கெட்டுவிடவுமில்லை முயன்றனையாகி - முயன்ருற்போன்றவராகி. வளன - செல்வம். வலியுறுக்கும் - இறுகப் பிடிக்கும், அதாவது செலவழிக்காமல் கெட்டியாய்த் தொகுத்துவைத்திருக்கும் உளம் இலாளா - முயற்சி மேம்பாடிலலாதவா உளம - முயற்சி மேம்பாடு. இலலாகியா - இல்லையாகுக; இலலாமற் போகட்டும் எனபது கடுங்கண - தறுகண, அதாவது வனகணமை, கொடுமை. கேழல - ஆணபனறி. இடம - இடப்பக்கம இடமபட வீழ்நதது - இடப்பக்கத்தே விழுமபடி வீழநதது வழிநாள - பினநாள விடா - மலைப் பிளவு, இங்கே புலி இருக்கும இக்கறபிளவுகளைக் குகைகள் எனறும் சொலவதுணடு அகம - இடம விடாகம - பிளவிடம. புலமப - தனித்து நிறகுமபடி வேட்டு - விருமபி, உணவையும அதற்கான முயற்சியையும் விருமபி எனறு கொள்ளவேணடும. களிறு - இங்கே பொதுவாக யானை எனனும கருத்தில வநதது ஒருத்தல் - ஆண; களிறறு ஒருத்தல - யானையின ஆண, ஆண யானை எனபது நல - மிகுநத, வலிமை மிகுநத மெலிவு இல உளளதது உரம - இளபபமிலலாத மேறகோளையுடைய செயலுறுதி. வைகல - நாள. உளவாகியா ஓ எனறு பிரிக்கவேணடும ஓ எனபதறகுப் பொருளிலலை, அசை. உளவாகியா - உளவாகுக. (நக)

## சான்ருணமையின ஆறறல்

[பொருள்களின மாறுபாடுகளெலலாம பணபுகளால் நிகழ்தற்குரியன, அவ்வாறே உடமபின மாறுபாடுகடகும உள்ளத்தின பணபுகளே காரணம; நலல பணபுகள் நலல உடமபினை உருவாக்குகின்றது. செழுமையும ஒளியும பெறச செயகினறது]

யாண்டுபல வாக நரைஇல ஆகுதல
யாஙகா கியர்?என வினவுதி ராயின்
மாண்டஎன மனைவியொடு மக்களும நிரமபினர்
யான்கண் டனையர்என் இளையரும வேநதனும்
அல்லவை செயயான் காக்கும அதன்தலை
ஆன்று அவிநது அடங்கிய கொளகைச்
சான்ருேர் பலர்யான் வாழும ஊரே.

—புறநானூறு, கக௧

பிசிராந்தையார் அருளிச்செய்த இநத அரிய திருப்

பாட்டில், இளமை குன்றும லிருப்பதறகு வழி காட்டப் படுகினறது.

ஆண்டுகள் பல ஆக ஆக மக்களுக்கு நரைதிரை உண்டாகின்றன. அபபடி யாண்டுகள் பல ஆனுலும நரைதிரை இலவாகுமபடி செயயவேண்டும். பிசிராநதையார் அங்ஙனம நரைதிரை யிலலாமல் விளஙகினா. அவரைப் பார்ததவர்கட்கு வியபபு உணடாயிறறு. ஆண்டுகள் பல ஆகியும் நரை இலவாகுதல எஙஙனமாகும எனறு அவரை வினவினர். நீஙகள் அபபடி வினவுதிராலை, அதறகுரிய காரணங்களைச் சொலலுகிறேன் கேளுங்கள எனறு கூறி இளமை குன்றுமலிருப்பதறகு வழி சொலலுகிறா.

ஆண்டுகள பல ஆனுலும நரைதிரை இலலாமல இளமையாகவும அழகாகவும இருப்பதறகு யாாககும விருப்பமிருககும. ஆனுல அதறகேறற உண்மையான வழியை யார் தெரிவிககிறாகள்? சிலா சில தவறுன வழிகளுங் கறபிததுவிடுகிறாகள. அவாகள் கறபிக்குந தவறுன வழிகளாற செலவும் மிகுதியாகினறன. வீண முயறசிகளும் உண்டாகின்றன. மேலும, அவ வழிகள, பலகாலம் பொறுதது வரவிருக்கும நரை திரைகளையும் மிக விரைவில் வரவழைதது இளமையிலேயே கிழததனததிறகு இடமாக்கி விடுகினறன.

பிசிராநதையார் காட்டும வழி இயலபானது; உண்மையில் இளமையில வைபபது; நிலையானது; செலவிலலாதது. என்றும எங்கும் வாழவு தருவது. நரைதிரை உணடாகாமல் நெடுஙகாலம இளமையாகவே இருக்கவேணடும என்று ஒருபோதும நினையாதவாகளைககூட அவாகள் அறியாமலேயே அநநிலையில இருததுவது. இதுவே முதுமையை ஓட்டும ஒரே வழி. அவா சொன்னது இது:

"நான இலவாழக்கையி லிருக்கிறேன. என மனைவி, வாழ்க்கைக்கேறற மாடசிமையான குணஙகள் உளளவள்; அறிவும நிரமபியவள். என் புதல்வாகளும அறிவு நிரமபியவர்கள். என் வேலைககாரர்கள் இளைஞாகள்; நான் கருது

வதையே அவர்களுங் கருதுவார்கள். என் நாட்டு அரச னும முறையல்லாதவறறைச் செயயமாட்டான். தகுநத வறறையும அவ்வப்போதுஞ் செயது குடிகளைப பாதுகாப் பான். இன்னும், நான் குடியிருநது வாழகின்ற ஊரில், சான்றோராயிருப்பவரே பலா. அவாகள அறிவு நிறைநது புலன அவிநது அருளிற படிகின்ற வாழக்கை முறையை யுடையவாகள. இவையே நான் நரை திரை இல்லாம லிருபபதறகுக் காரணம" எனபது.

இப்படி எலலாரும இருநதால, உலகததில் நரை திரை உண்டாகா. மககளும நெடுங்காலம வாழநதிருப்பாாகள். ஆண்டு மிகுதியாகி மூததவாகள்போலத தோன்றினும், இருக்கும வரையில் நரைததிலலாமல வலிவோடிருநது பின் மறைவாாகள். நோயினால பல நாட்கள வருநதி இறததல் எனபது அபபோது இராது. உடமபு பழுதாகி மறைய வேண்டு மெனபதிலலை; வினை முடியுமபோது பிசிராநதை யாரைபபோல ஏதானும நறசெயல காரணமாகவே மறைய நேரும.

நறகுண நறசெயலகளே உடம்பை நோயில்லாமலும நரைதிரை யில்லாமலும இளமையாகவும திருததமாகவும மேனியாகவும வைககும என்னும அரிய பெரிய உண்மை இதனகண் காட்டபபடுகின்றது.

இளமைக்காகவும நோயிலலாமைக்காகவும மருநது முதலியன பயனபடுததுவது சிறநத முறையன்று என் பதும, நலல உணவு முதலியவறறையும விட நலல உணாவு செயல முதலியவைகளே இதறகு முதனமையானவை யென்பதும இதிலிருநது வெளிபபடும

**குறிப்புரை :**—'மாணட என' எனபதில் 'என' எனபதறகும 'மாணட' எனபது அடைமொழியாய நின்று நானும நறகுண நற்செயல்களிற் சிறநதிருககிறேன என்னுங கருததையுங குறிபபாகப புலபபடுததககூடும. 'வாழககையில மாடசிமைபபடடுள்ள எனறன்' என்பது உரையாம் கணடு அனையா - கணடாற போன்றவா. அதாவது கருதினாற் போனறவா. காணடல் எனபது இஙகே கருது

தல் என்னும் பொருளில் வந்தது. இளையர் - பணியாட்கள். இளைமைப் பருவமுடையோரே பணிக்குத் தகுதியானவராதலின் 'இளையர்' என்று வந்தது. அதனால் - அதற்குமேல். மனைவி, மக்கள், பணியாளர், அரசன் என்பவர்களை ஒரு பிரிவாகவும், சான்றோர்களை மற்றொரு பிரிவாகவும் பிரித்துச் சொல்லுவதற்காக 'அதனால்' என்று ஒரு சொல் கொடுத்திருக்கின்றது. மனைவி மக்கள் பணியாளர் அரசன் என்பவர்கள் பொதுவாக நற்செயலுள்ளவர்கள். ஆனால், சான்றோர்கள் உணர்வு முறைமையையே ஆட்சியாக உடையவர்கள். இல்வாழ்வில் இருந்தாலும் உணர்வாட்சியினாலேயே தமது வாழ்வை நடத்துகின்றவர்கள். ஆன்று - அமைந்து, நிரம்பி என்பது கருத்து. அவிந்து - புலன்வழி அவிந்து, மனம் அறிவின் வழியாய் நிகழ்ந்து என்பது குறிக்க வந்தது. அடங்கிய - அருளில் ஒருமையுற்ற என்பது உரை. இந்த அடக்கம் நிகழும்பொழுது மனமொழி மெய்கள் இயல்பாகவே அடக்கமாக நிகழும். (௯௦)

## ஏதானும் நல்லது செய்யவே வேண்டும்

[பிறவியினாற் பெறத்தகுந்த முடிந்த பயன் 'தெளிவு' என்பது. அதனைப் பெற்றோர், வேறு பெறவேண்டுவது யாதுமில்லை. பின்பு அவர் செய்வனவெல்லாம் நல்லனவே. காரணம், ஐயந் திரிபுகளற்று மெய்யுணர்வு நிலையாக அது விளங்குதலேயாகும். தெளிவடைந்த பெரியோர்க்குப் பிறவெல்லாம் பொருளல்ல.]

செய்குவங் கொல்லோ நல்வினை யெனவே
ஐயம் அறாஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவில் லோரே,
யானை வேட்டுவன் யானையும் பெறுமே,
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே;
அதனால், உயர்ந்த வேட்டத் துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கின் எய்தல் உண்டெனில்,
தொய்யா உலகத்து நுகர்ச்சியும் கூடும்;
தொய்யா உலகத்து நுகர்ச்சி இல்லெனின்;
மாறிப் பிறப்பின் இன்மையும் கூடும்;
மாறிப் பிறவா ராயினும், இமயத்துக்

கோடுஉயர்ந் தன்ன தமஇசை நட்டுத்
தீதுஇல் யாக்கையொடு மாய்தல்தவத் தலையே.

—புறநானூறு, உகச.

இந்தப் பாட்டின் அடிப்படையில் ஆ, எத்தகைய அருமையான வீர வுள்ளம் திகழுகின்றது!

முதன்மையான செய்தியிலேதான் பலர்க்கு ஐயப்பாடு நிகழுகின்றது. இப்பாட்டு அதனை அருமையாகத் தெளிவு படுத்துகின்றது.

நல்ல செயல்களைச் செய்யவேண்டுமென்று எல்லார்க்குமே விருப்ப மிருக்கும். ஆனால், அதனால் உண்டாகக் கூடிய பலவகையான இடையூறுகள் கருதி அந்த விருப்பம் செயலில் வருவதில்லை. சிறிது செயலில் வந்தாலும் அதனை முடிவுபோகச் செய்வதில்லை. சில வேளைகளில் இத்தகைய நல்ல செயல்கள் செய்யவேண்டுவது கட்டாயந்தானா என்னும் ஐயுறவும் சிலர்க்கு உண்டாகிவிடும். அந்த ஐயம் எளிதில் அகலுவதுமில்லை.

அழுக்குச் செறிந்த அறிவும் அதிலிருந்து நீங்கமாட்டாத முயற்சியற்ற உள்ளமும் உடைய தெளிவில்லாதோரே இங்ஙனம் ஐயம் அுறுதவர்கள் என்று சொல்லுகிறார்கள்.

நற்செயல்களைச் செய்துகொண்டிருக்க வேண்டுவது ஒன்றே மக்களுக்குக் கடமை. அவை நிறைவேறுகின்றனவா? நல்ல பயன் தருகின்றனவா? என்பனவெல்லாங் கருதுதல் கடமையன்று.

பிறவியின் கடமை உணர்வு விளக்கம் பெறுவது என்பது ஒன்றுதான். அந்த விளக்கம் நற்செயல்கள் செய்து கொண்டிருப்பதனாலேதான் உண்டாகும். செயல்கள் நடைபெறுகின்ற அளவுக்கு அவ் விளக்கமும் உண்டாவது திண்ணம். மற்றப்படி மக்கள் விருப்பப்படியே எல்லாம் நடைபெறவேண்டுமென்னும் முறைமை ஒன்றுமில்லை. மக்கள் நினைப்பவையெல்லாம் சரியானவையே என்று

துணியக்கூடாமையால் அவர்கள் நினைப்பின்படியே நிறை வேறவேண்டுமென்னும் முறைமையும எதிரபார்க்கக்கூடிய தன்று.

மிகவும் அரிய செயலான யானைவேட்டைக்குச் செல் லும் யானை வேட்டுவன ஒருவன், அவன் கருதியபடி யானை யைப பெறவுங் கூடும. ஆனல மிக எளிய செயலான காடை வேட்டைக்குச செலலுங் காடைவேட்டுவன அது பெருமல வறுங் கையோடு திருமபவுங் கூடும. முயறசி செயவதொனறே மககள் கருதவேணடுவது. மறறவை கருதுவது அவர்கள கடமை யன்று. இமமுறையில நற செயலகள செயவோரே உயர்நதவராவர். உயாநதவரென் பதறகு அடையாளம அவா உயாந்த விருப்ப முடையவரா யிருபபதுதான.

இததகைய உயாநதோாககு அவர்கள் செயகினற நற் செயலகளின் சாாபில எவையேனும நனமைகள் அடையக் கூடியவை நேருமாயின் ஆ, இன்பததிற சோர்வு என்பதே இலலாத 'உமப ருலகததது நுகாசசி'யென்னும மிகப் பெரிய போகமும அடையககூடும்.

ஆனல அபபடியொனறு நேரககூடு மெனபதிலும அத தெளிவிலலாதோாககு ஐயம உண்டாகும. நறசெயலகளா லாகிய அநத நனமை இபபிறபபிலேயே கைகூடாமல், உம் பருலகததினகண்ணும கூடாதாயின, மாறிப பிறகுகும மறு பிறபபிலேனும ஒருகாற கைகூடும, அலலது அதனகண ணுங் கூடாமறபோனலும போகலாம.

ஆனல் மறுபிறபபு எனபதொனறு உண்டா என்பதே முதலில, சிலாககு ஐயமா யிருககும். அப்படி மாறிப் பிறப்பதே இலலையானலும இமயமலையின் உச்சி எவவளவு உயரததில ஓஙகியிருககினறதோ அவவளவு பெரிய புகழை யேனும் தம நறசெயலகளால இவவுலகததில நிலைநிறுததி விட்டுப பழிகதத லில்லாத உடமபோடு இறநதுவிடுவது மிக வுஞ சிறநததாயிருக்குமனறே!

ஆதலால எவவகையாற் பார்த்தாலும், நறசெயல்களைக்

கூடியவரையிற் செய்துகொண்டிருப்பதே நல்லது என்னும் முடிபில் யாரும் ஐயங் கொள்வதற்கு இடமில்லை யென்பது தெளியப்படும்.

இக் கருத்து இப் பாட்டில் அழகாக அறிவுறுத்தப் பட்டிருக்கின்றது.

குறிப்புரை :—'செய்குவம் கொல் ஓ' என்று பிரிக்க வேண்டும். இவற்றிற் 'கொல்' என்பதற்குப் பொருளில்லை; அசை. அதை எடுத்துவிட்டால் 'செய்குவம் ஓ' என்பவை 'செய்குவமோ' என நிற்கும். 'செய்வோமா நல்வினை என்று கருதி ஐயம் அறாத் துணிவில்லோர்' என்பது தொடர். அறா - நீங்கா. ஈண்டு - இங்கே அழுக்கு ஈண்டு - செறிந்த காட்சி - அறிவு துணிவு - தெளிவு. குறும் பூழ் - காடை என்னுஞ் சிறிய பறவை. வறுங்கை - வெறுங்கை வேட்டத்து - விருப்பத்தையுடைய 'உயர்ந்து இசின் ஓர் கு' என்பவற்றில் 'இசின்' என்பதற்குப் பொருளில்லை. அதனை எடுத்துவிட்டால் மற்றவை 'உயர்ந்தோர்க்கு' எனச் சேரும். வினை மருங்கின் - வினைச் சார்பில் எய்தல் - இங்கே நுகர்தல் என்னுங் கருத்தில் வந்தது தொய்யா - சோர்வில்லாத, தொய்யா உலகம் - நுகர்வதில் சோர்வு இல்லாத இன்ப உலகம், இங்கே போக உலகத்தை உணர்த்தும். மாறிப் பிறப்பின் உண்மையும் கூடும்; இன்மையுங் கூடும் என்று கொள்ளவேண்டும். இன்மையும் என்று உம் கொடுத்துக் கூறினமையால் உண்மையும் என்பதும் பெறப் பட்டது நுகர்ச்சி உள்ளமையும் இல்லாமையும் என்று கொள்ள வேண்டும் கோடு - உச்சி. இசை - புகழ்; நட்டு - நிலைநிறுத்தி. யாக்கை - உடம்பு. அதற்குத் தீது என்றது பழி. தவ - மிகவும். தலை - சிறந்தது. (௪௧)

## நயமான பேச்சு

[சிலரைக் கண்டித்தால் திருந்துவர்; சிலரைப் பாராட்டினால் திருந்து வர், சிலரைப் பொருள் உதவி ஆதரவு செய்தால் திருந்துவர்; சிலரை ஆதரியாது நின்றால் திருந்துவர். தலைவனைத் திருத்தும் முறையொன்று இச் செய்யுளில் வருகின்றது. அழகிய இனிய நன் முறை.]

செந்தா மரைமலருஞ் செய்வயல் நல்லூர!
நொந்தாலமற றுன்னைச் செயப்படுவ தென்னுண்டாம்?

தந்தாயும் நீயே, தரவந்த நன்னலம்
கொண்டாயும் நீயாயக் கால்.

—திணைமொழி ஐம்பது, ௩௬.

எப்போதும் நயமான பேச்சுகளே உள்ளத்தைப் பதமாக்கத் திருப்பவல்லன; சுடு சொற்கள் சினத்தையும் எதிர்ப்பையும் உண்டாக்கும்.

அதுவுந் தலைவராயிருப்பவர்க்குத் தம்மேல் அன்பு உண்டாகும்படி அவருள்ளத்தைப் பதப்படுத்துவதென்பது அவ்வளவு எளிதாகுமா? அதற்கு எவ்வளவோ கண்ணியமும் மென்மையும் கடமையுணர்வும் வேண்டும்.

தலைவன் வெளியிற் பிரிந்து பின்வந்தான். அவனை மறுப்பது என்னவோ தலைவிக்கு முடியாத காரியம். அவன் உள்ளத்தை எப்படியானுங் கனிவித்துத் திருத்துவதொன்றே அவள் செய்யக்கூடியது. தலைவியின் தோழி பின்வருமாறு நயமாகச் சொல்லுகிறாள் :

"செந்தாமரைகள் மலர்கின்ற பண்படுத்தப்பட்ட வயல்களையுடைய நல்ல ஊரனே! எங்களுக்கு, முன், அழகு தந்தவனும் நீயே, இப்போது, அதனை வாங்கிக்கொள்கின்றவனும் நீயேயாயிருந்தால் நாங்கள் வருத்தப்பட்டு உன்னைச் செய்யக்கூடியது என்ன இருக்கின்றது? ஒன்றுமில்லையே."

இச் சொல், கடமையுணர்வுக்கு மீறியதாயில்லை, ஏனென்றால், அவனை அவள் மறுக்கவில்லை; அவன் தலைமைக்கு இழுக்கான முறைமையிலும் பேசவில்லை. மேலும், பெருந்தன்மையும் மென்மையும் வாய்ந்திருக்கிறது.

தலைவனோ அறிவுடையவன்; இது தக்க உருக்கத்தையும் திருத்தத்தையும் அவனுக்கு விளைவியாமற் போகுமோ!

நமது ஊரிலுள்ள வயல்கள்கூட நன்றாய்ப் பண்படுத்

தப்பட்டுச் செந்தாமரை மலர்களும் மலர்வதற் கேதுவா யிருக்க, நமதுள்ளம் அங்ஙனம் பண்படுத்தப்பட்டுச் சிறந்த நற்குணமலர்கள் மலர்வதற் கிடமாயில்லை என்னுங் குறிப் பினாலன்றோ, தோழி நயமைச், "செந்தாமரை மலருஞ் செய்வயல்நல் லூர" என்று முதலெடுப்பிலேயே உறுத்த லாகவும் நயமாகவும் விளித்திருக்கின்றாள் என்றெல்லாம் அவ னுள்ளம் நினைக்கத் தொடங்கிவிட்டது.

குறிப்புரை —நலம் - அழகு, தலைவனை கூடும்போது தலை விக்கு அழகுண்டாகிறது அவனை பிரியும்போது அப் பொலிவும் மங்கிவிடுகிறது ஆதலால் கொடுத்தவனும் வாங்கினவனும் அவனு கின்றான கொடுத்தவனே வாங்கிக்கொள்ளும்போது, செய்வது என்ன இருக்கின்றது? இந் நயந் தோன்றத் தோழி பேசியிருக்கிறாள்.

---

# 7. வீரம்

## சான்றோர் பாராட்டின முதன்மை

[சான்றோர்களால் பாராட்டப்படுதலும், ஏனையோரால் விரும்பப்படுத லும் எளிதில் அமைவன அல்ல, அமைந்தால் அவை மாட் சிமையானவையே அவ்வாறு அமையும்படி ஒழுகுதல் சிறந்த வீரமாகும் ஏனைப் பெரும்படை வீரத்தை இவ் வொழுக்க வீரம் வெல்லும்]

நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்று
உறுதுப் பஞ்சாது உடல்சினம் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎ னாயின் பொருந்திய
என்னிழல் வாழ்நர் செல்நிழற் காணாது
கொடியன்எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்

குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக,
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே.

—புறநானூறு, ௭௨.

உடம்பை அழகாக வைத்துக்கொள்வது சில நேரங்களில் இன்பந் தரும். உணர்வை அழகாக வைத்துக்கொள்வது எப்போதும் இன்பந் தரும். அந்த இன்பம் தூயதாகவும் இருக்கும்; என்றும் நிலைக்கும்; மேலும், வீரத்திற் சிறந்த வீரமும் அது.

அழகான உணர்வுகளில் இங்கே மூன்று உணர்வுகள் காட்டப்படுகின்றன. ஒன்று: பகைவர்க்கு இடங் கொடாமல் வாழ்வது. மற்றொன்று: தன்கீழ் வாழ்வார்க்கு இடருண்டாகாத முறையில் ஒழுகுவது. இன்னொன்று: சான்றோர்கள் பாராட்டி மகிழ்த் தக்க நிலையில் நிற்பது.

இங்கே சொன்ன இம் மூன்று உணர்வுகளில், ‘முதல் உணர்வு என்னிடம் இல்லாமற் போகுமானால், பின் இரண்டு உணர்வுகளையும் யான் இழந்தேன் ஆகுக’ என்று வஞ்சினங்கூறும் முறையில் இப்பாட்டு அமைந்திருக்கின்றது. இது தலையாலங்கானத்து நெடுஞ்செழியன் பாட்டு; இதனால் இச் செழியன், தன் உணர்வை அழகாக வைத்து வாழ்வதிற் பெருங்கருத்துடையவனாயிருக்கின்றான் என்பது நன்கு விளங்குகின்றது. மற்றவை அவனுக்குப் பொருளல்ல.

அவன் வீரவுணர்வோடு வஞ்சினங் கூறுவது வருமாறு:

“என்னை நோக்கி, ‘இவனது நாட்டை மேன்மையாகக் கூறுவோர் எங்களால் நகைக்கத்தக்கவர்கள்;

இவன் ஒன்றும் அறியாத சிறுவன்' என்று யான் மனம் வருந்தச் சொல்லி, யானையும் தேரும் குதிரையும் காலாட்களும் யான் உடையேன் என்று மிகுந்த வலிமைக்கு அஞ்சாமல், என்னோடு மாறுபடுகின்ற சினம் மிகுந்து என்னைப் புன்சொல் சொல்லிய இந்த அரசரை இதோ போரில் அழியத் தாக்கி அவரை அவர் முரசத்தோடு ஒருங்கு கைப்பற்று மற்போனேனானால், என நிழலில் வாழ்கின்றவர்கள் வேறு செல்லக்கூடிய நிழல் காணமாட்டாமல், கொடியன் எம அரசன என்று கருதிக் கண்ணீர் பெருக்கிப பழிதூற்றக் கூடிய கொடுங்கோல அரசனாக யான் ஆகுக;

"மாங்குடி மருதன் என்னும சான்றோரை முதல்வராக உடைய பெரியோர்கள் எனது நிலபபகுதியைப் பாராட்டிப பாடாமல நிறுத்திககொள்ளும்படி எனது நிலைமை கெடுவதாகுக!" என்பது.

இதனால், இவ்வரசனின் உணர்வு அழகுகள் மிகவும் பெருமிததோடு விளங்குதல காணலாம.

பகைவர்க்கு இடங்கொடாத உணர்வைவிட, பின் இரண்டுணர்வையும அவன மிகவும் மேலாகக் கருதிப் பாதுகாதது வந்திருக்கிறானென்பது, அவற்றின்மேல வைத்து அவன் வஞ்சினங் கூறினமையால் தெரிகின்றது.

அத்தகைய உயாநத உணர்வுகளில், சான்றோரால் பாராட்டபபடும நிலைமையில் ஒழுகுதல பினனும உயாநத தொன்றாகக் கருதப்பட் டிருந்ததலின், அக்காலததிற புலவர்கட்கிருநத நனமதிப்பும செலவாக்கும எவவளவு உயாநத நிலையில ஓங்கியிருநதன வெனபதுந தெளிவாகின்றது!

யாராயினும என்ன? அழகிய உணாவுகளைப் போற்றியொழுகுதலே இவவளவு மேன்மைக்குங காரணம!

குறிபபுரை:—நகுதககனா - நகைககததககவா; மீக கூறுநா - மேன்மையாகப புகழநது கூறுகினறவா. உளைய - வருநத; படுமணி இரடடும பா அடி பணைத தாள் நெடு நல யானை - ஒலிககும் மணிகள் மாறி யிசைக்கினற, பரநத அடியமைந்த பெரிய காலகளை

யுடைய உயர்ந்த சிறந்த யானை ; படுமணி இரட்டும் யானை என்று கூட்டிக்கொள்ள வேண்டும். படை அமை மறவர் - படைத்திறம் அமைந்த வீரர். உறு துப்பு - மிக்க வலிமை. உடல் - உடலுதல்; மாறுபடுதல் செருக்கி - மிகுந்து. சினம் கெழு வேந்தர் - சினம் பொருந்திய அரசர். அரு சமம் - கடும் போர். அகப்படேனாயின் - கைப்பற்றேனானால் என்னுங் கருத்தில் வந்தது. வாழ்நர் - வாழுங் குடிகள் இறை - அரசன் கோலேன் - கோலை யுடையேன் ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி மாங்குடி மருதன் - உயர்ந்த தலைமைப் பாட்டுக்குரிய சிறந்த கேள்வியை யுடைய மாங்குடி மருதன் உலக மொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின் புலவர் - உலகமுள்ளளவும் அத னோடு நிலைபெற்ற, பலர் புகழும் மேன்மையை யுடைய புலவர். 'உலகமொடு நிலைஇய சிறப்பு' என்று கூட்டிக்கொள்ள வேண்டும். வரைக - ஒரு வரம்பு செய்துகொள்ளட்டும் என்பது. அதாவது, எனது நாட்டின் அளவு வரையிற் பாடக்கூடாது என்று ஒரு வரம்பு செய்துகொள்ளட்டும் என்பது பொருள், பாடாமல் நிறுத்திக்கொள் ளட்டும் என்பது கருத்து. என் நிலவரை - எனது நாட்டின் அளவு. புரப்போர் புன்கண் கூர - என்னாற் காப்பாற்றப்படும் சுற்றத்தார் துன்பம் மிக. இரப்போர்க்கு ஈயா இன்மை - இல்லையென்று இரப் போர்க்கு ஒன்று கொடுப்பதற்கியலாத வறுமை. இன்மை - வறுமை. யான் உற - யான் அடைய; இரப்போர்க்கு ஈயமாட்டாத வறு மையை யான் அடைய; அதனால் புலவர் பாடாது வரைக என்று கூட்டி முடித்துக்கொள்ளவேண்டும். (௭௩)

## ஈகையும் வீரமும்

[இகழ்வாரமுன் பீடுநடை எவர்க்கும் இன்றியமையாதது ; வீரத்தின் உருவமே அது. ஊக்கம் அவ் வீரம் நிகழ்த்துதலிற் காட்டல் வேண்டும் இன்றேல், வாழ்க்கை உறக்கத்திற் சோர்ந்தாய ஒழியும் பொதுமகளிரொடு கூடுங் காமுகர் வாழ்க்கையினுந் தீயது அது ]

மெல்ல வந்துஎன் நல்லடி பொருந்தி
ஈயென இரக்குவ ராயின் சீருடை
முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம் ;
இன்னுயி ராயினுங் கொடுக்குவென்; இந்நிலத்து
ஆற்ற லுடையோ ராற்றல் போற்றாதுஎன்

உள்ளம் எள்ளிய மடவோன், தெள்ளிதின்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே; மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்திணி நீள்முளை போலச் சென்றுஅவண்,
வருந்தப் பொரேஎ னாயின், பொருந்திய
தீதுஇல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பலஇருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே.

—புறநானூறு, ௭௩.

சோழன் நலங்கிள்ளி ஓர் அரசன் ஒரு புலவருங்கூட. அவ் வரசனே இப் பாட்டைப் பாடியிருக்கிறான். அவன் வீரம் இப் பாட்டில் பலவகையாகப் புலப்படுகின்றது. கொடுப்பதிலும் உயர்ந்த வீரங் காட்டுகிறான், பகைவர்க்கு இடங்கொடாமையிலும் மிகுந்த வீரங் காட்டுகின்றான். பொருட்பெண்டிரைச் சாராத ஆண்மையிலும் பேராண்மை காட்டுகின்றான்.

கொடை வீரம்: நள்ளி சொல்லுகிறான்: “என் அரசை அடைய விரும்பும் பகைவர்கள், மெல்ல வந்து எனது நல்ல அடியை அடைந்து, ‘தேவரீர் கொடுத்தருள வேண்டும்’ என்று இரந்து கேட்பார்களானால், சிறப்புப் பொருந்தியதும் முரசு உடையதும் பழமையாய் வரும் உரிமையுடையதுமான இந்த அரசோ, அவர்களுக்கு எளிதிற் கிடைத்துவிடும். எனது இனிய உயிரேயாயினும், அங்ஙனம் அவர் இரந்து கேட்பாராயின் கொடுத்துவிடுவேன்” என்பது அவன் கொடை வீரப் பேச்சு. கொடுக்கும் இயல்பில் மற்றவர்களையெல்லாம் பின் தள்ளி அவன் எவ்வளவு மேம்பட்டவனாக விளங்குகின்றான்! ஒரு நிலையிலிருந்து அதனினும் உயர்ந்ததொரு நிலையில் மேம்படுதலன்றோ வீரம் என்பது.

படை வீரம்: “அப்படி இரந்து கேளாமல், இங்

நாட்டில் என் அமைச்சர் படைத்தலைவர் முதலிய ஆற்ற லுடையோரது வலிமையைப் பெரிதாகக் கருதாமல் என துள்ளத்தை இகழ்ந்த மடத்தன்மையை யுடையோன், தூங்குகின்ற புலியை இடறின குருடனைபோலப் பிழைத் துப்போதல் என்பதோ முடியாத காரியம். மூங்கில் காட் டிலே போய் மூங்கிலைத் தின்னும் வலிமையையுடைய யானையினது காலின்கீழ் அகப்பட்டுக்கொண்ட வலிய திண்ணிய மூங்கில் முளைபோல அவன் சிதைந்தொழியும்படி படையெடுத்துச் சென்று அவன் நாட்டிலேயே போர் செய்வேன்.''

இது, நள்ளியினது படைவீரப் பேச்சு. இதன்கண் வந்திருக்கும் உவமைகள் மிகவும் திறமானவை. அவன் உள்ளம் அவ்வளவு மேம்பாடான வீரம் படைத்திருப்பத னால், அவன் சொல்லில் அத்தகைய வீர உவமைகள் வெளி வரலாயின.

நடை வீரம்: "அப்படி நான் அவனைப் பொருது அழிக்காவிட்டேனானால், பொருத்தமான தீதில்லாத நெஞ் சத்தால் காதல்கொள்ளாத பொருட்பெண்டிரது பொருந் தாத முயக்கத்தினிடையில் எனது மாலை குழையட்டும்.''

இது நள்ளியின் நடைவீரப் பேச்சு. நடை-ஒழுக்கம்; ஒழுக்கத்தில் வீரங்காட்டுவது, வீர வுணர்வுகளெல்லாவற்றி னும் வீரமானது. உயர்ந்ததென்று கருதிப் போற்றிவரு கின்ற கருத்தின்மேலேதான், யாரும் வஞ்சினங் கூறுவது வழக்கம். ஆதலால், நள்ளி, கொடை வீரம் படை வீரம் என்பவற்றைப் பார்க்கிலும் நடைவீரத்தைப் பெரிது மதித்து ஒழுகிவந்தவன் என்பது நன்கு பெறப்படுகின்றது. வஞ்சினங் கூறுமுகமாகக் கருத்துகளைப் புலப்படுத்துதல் எவ்வளவு ஆற்றலாக இருக்கின்றது!

குறிப்புரை:—பெருமிதத்தினால், தனது அடியைத் தானே நல்லடி என்று புகழ்ந்துகொண்டான். முரசு - வெற்றி முரச வாச்சி யம். தஞ்சம் - எளிது. போற்றுது-பெரிதாக எண்ணுமல், எள்ளிய- இகழ்ந்த. மடவோன - அறிவிலான இடறினபின புலியைத்தான்

இடறினேம் என்று தெளிவாகத் தெரிந்துகொண்ட குருடன்போல என்றற்கு, 'தெள்ளிதின' என்றார். துஞ்சு - தூங்குகின்ற. ஏதடன் - குருடன். உயந்தனன் பெயாதல் - உயர்ந்தனனுயப் பெயாதல்; பிழைத்துத் தப்புதல் என்பது கருத்து அரிது என்பது முடியாமை காட்டிற்று. 'மைந்து உடை யானை' 'கழை தின் யானை' என்று கூட்டிக்கொள்ள வேண்டும் மைந்து - வலிமை; கழை - மூங்கில். சென்று - படையெடுத்துச் சென்று. அவண் - அவ்விடத்தில், அப் பகை நாட்டிலேயே. பொரேனுயின் - போர் செய்யேனுனல்; 'பொருந்திய நெஞ்சம்' 'தீது இல்லாத நெஞ்சம்' என்று கூட்டிக்கொள்ள வேண்டும். அத்தகைய நல்ல நெஞ்சத்தால் உண்மையான காதல் கொள்ளாத மகளிர் முயக்கிடை என் தார் குழைக என்றான். இங்கே கூறப்பட்ட மகளிர் பொருட் பெண்டிர். அது, கெட்ட ஒழுக்கமாதலின், அதன்மேல் வைத்து வஞ்சினங் கூறினன் பல் இரு கூந்தல் மகளிர் - பலவான கரிய கூந்தலையுடைய பொருட் பெண்டிர். கூந்தல், இழைபோலத் தனித் தனியாய்ச் சிக்கின்றி யிருத்தலால் 'பல கூந்தல்' என்றார். ஒல்லா - பொருந்தாத; முயக்கு - முயக்கம்; தழுவுதல். குழைக - கசங்குக. தார் - மார்பின் மாலை. (௭௨)

## வீரமும் இரக்கமும்

[வீரம் என்பது நற்குணங்களுள் ஒன்று, தன்னிலை தாழாமைக்கு ஆவன செய்யும் பண்பு அது; முரட்டுக் குணமன்று, வீரமுடையோர் உள்ளம், மிக்க இரக்க குணம் வாய்ந்து திகழும் பகைவராயினும் அவர் ஒன்று வேண்டுவாராயின் அவர்க்கு இரக்கங் காட்டுதல் வீரர் இயல்பு.]

அளிதோ தானே பாரியது பறம்பே,
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்
உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே;
ஒன்றே, சிறிஇலை வெதிரின் நெல்விளை யும்மே;
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழம்ஊழ்க் கும்மே;
மூன்றே,கொழுங்கொடிவள்ளிக்கிழங்குவீழ்க்கும்மே;
நான்கே, அணிநிற ஓரி பாய்தலின், மீதுஅழிந்து
திணிநெடுங் குன்றம் தேன்சொரி யும்மே;
வான்கண் அற்றுஅவன் மலையே; வானத்து

மீன்கண் அற்றுஅதன் சுனையே; ஆங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்,
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்,
தாளின் கொள்ளலிர்; வாளின் தாரலன்;
யான்அறி குவன்அது கொள்ளு மாறே,
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தலநும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே,
நாடும் குன்றும் ஒருங்குஈ யும்மே.

—புறநானூறு, ௧௦௯.

தமிழ் நாட்டில் 'பாரி' என்னும் வள்ளல் ஒருவன் இருந்தான். அவன் இரக்கமே வடிவானவன். கொடுப்பதிற் போபோனவன். அந்த வகையில் தமிழ் நாட்டில் அவனுக்குத்தான் முதற் பெயர் 'பறம்பு நாடு' என்பது அவன் நாடு. அதில் முந்நூறு ஊர்கள் உண்டு. பறம்பு மலை என்று ஒரு வளமான மலையும் உண்டு. அவன் இருப்பிடம் அதுதான். பெரிய வீரன்; போராற்றலுள்ளவன். அவனுக்குப் பெண்கள் இருவர் இருந்தனர்.

பாரிக்கு நாட்டில் பெரும் புகழ் ஓங்குவதனால், பெரிய அரசர்களான மூவேந்தரும் அவனைத் தமக்கு உறவினனாக ஆக்கிக்கொள்ள விரும்பி, அவன் மகளிரை மணஞ் செய்து கொடுக்கும்படி கேட்டார்கள். மணம் காதலின் வழி நடை பெறுவதாதலால், பாரியும் அவன் மகளிரும் அதற்கு இசையவில்லை. அதுகண்டு, மூவேந்தரும் சினங்கொண்டு, தம்முள் ஒருங்கு கூடி, அவன் பறம்பு மலையை முற்றுகை செய்து அவன் மகளிரை வலிந்து சிறைபிடிக்கத் தீர்மானித்தார்கள். உடனே தத்தமக்குரிய நான்கு வகையான பெரிய படைகளுடன் வந்து, அம் மலையைச் சூழ்ந்து கொண்டார்கள்.

பாரிக்குக் 'கபிலர்' என்னும் பெரும்புலவர் உயிர் நண்பர். நினைவு, சொல், செயல் என்னும் மூன்றிலும்

அவர் தூய்மையானவர். அவர் மூவேந்தரையும் அணுகி, "இந்த முற்றுகை அறநெறியைச் சேர்ந்ததாக இல்லையே; இது வேண்டாம; மேலும், பாரி, பெரிய வீரன; அவனை வெலல முடியாது" என்று அறிவுரை சொன்னார். அவர்கள அதற்குக் காது கொடுக்கவில்லை.

"அப்படியானால், இந்த மலையைப் பெறுவதற்கு இது வழியாகாது. அவனிடம நீங்கள பரிசில விருமபி, இரப்போராக வநதால, உடனே இரங்கிக் கொடுததுவிடுவான. அதுதான நடககககூடியது" என்று பாரியின ஆண்மை பின்னும புலப்படும்படி, அவர விளக்கினார். இந்தப் பாட்டில அககருததுகள் அழகாகக் கூறபபடுகின்றன. அவை வருமாறு:

"இரங்கத தககதோ 'பாரி'யின் பறம்பு மலை. அப்படி ஒன்றும் இல்லை. நீஙகளோ, பெருமை கொண்ட போர்முரசு உடையவர்களே; அப்படிப்பட்ட நீங்கள் ஒருவர யிலலாமல மூவிராய முற்றுகை செயதாலும் என்ன பயன?

"பாரியும் அவன் படைகளும எததனை நாளானாலும் கீழே வரவேண்டிய வேலையே இல்லை. உழவா உழாமல, தாமே பயிராகததககவையான நான்கு வகை விளையுளகளை இநதப பறமபு மலை உடையதாயிருககின்றது. வேண்டுமானால எண்ணிககொளளுஙகள ஒன்று: சிறிய இலைகளையுடைய மூஙகிலின் நெல விளையும. இரண்டு: தித்திப்பான சுளைகளையுடைய பலாவின பழம பழுக்கும். மூன்று: செழுமையான கொடிகளையுடைய வள்ளியின கிழஙகுகள நிலததின்கீழ இறஙகும. நான்கு: தேன் முதிருமபோது அதனிடததில அழகிய ஒளியையுடைய ஒருவகையான நீல நிறம பரநது தேன கூடு கனமாவதனால், அது தொஙகும் கொடி, மேறபககம அறுநது விழ அதனால இநத வலிவான பெரிய மலை எப்போதும் தேன் சொரிநதுகொண்டிருககும். இப்படி நெலவகை, பழவகை, கறிவகை, மதுவகை என எலலாம் இந்த மலையி லிருக்கின்றன. இன்னும் அவன்

மலையோ, வானத்தின் இடத்தை ஒத்தது; அப்படி மிகப் பெரியதாயும உயரமாயும இருக்கிறது. அந்த வானத்தி லுள்ள விண்மீனகளை ஒததது அநத மலையின நீரச்சுனை; அவை பலவாகவும தெளிவாகவும இருக்கின்றன. ஆத லால, பரவலான இடததுக்கும் நல்ல நீருக்குங்கூட இஙகே குறைவிலலை.

"அப்படிப்பட்ட மலையில, மரங்கள்தோறும உங்கள் யானைகளைக் கட்டிவைததீரகளாறுலும, இடமெல்லாம தோகளைப பரப்பிவைததீரகளாறுலும இநதப போர் முயறசியினல் இம் மலையைக கொள்ளமாடடீரகள. உங் கள் வாள வலியினல் அவன் தரமாட்டான்.

"நான் அறிவேன் அது கொள்ளும் வழியை. என்ன தெரியுமா? வடிதது முறுக்கபபட்ட நரமபுகளையுடைய சிறிய யாழுகள பண்ணி, நீங்கள் பாணாகளபோலக் கோலங் கொள்ளவேண்டும, மணமுள்ள தழைதத கூந் தலையுடைய உஙகள் மனைவிமார் பாடினிகள்போலக் கோலங்கொள்ளவேண்டும அவர்கள் பின்னேவர நீங்கள் ஆடுகிறீரகளாயப பாடுகிறீரகளாய் அவனிடம போனல, ஆம, அப்போது உஙகளுக்கு இநதப பறமபு மலையையும் இதுவலலாமல் இநதப் பறமபு நாட்டையுங்கூட ஒனருயக் கொடுதது விடுவான்" எனறு கபிலா சொன்ஞ ரென்பது.

இணையறற வீரமும, அதே நேரததில் அதன அடிப் படையில் மிகத தெளிவான இரக்க உளளமும் ஒருவ னிடததிலேயே கண்ணியமாய அமையககூடும எனனும் சிறநத உண்மையும, பிறவும் இநதப் பாட்டில தேங்குநீர் போலத தெளிவாய விளங்குகினறன.

குறிப்புரை:—அளிதோ - இரஙகத்தககதோ. நளி கொள் முரசு - பெரிய முரசு எனபது கருதது முரசு - போரிடுமபோது ஒலிககும் வாசசியம். வெதிர - மூங்கில். தீம் - தித்திப்பான. ஊழ்ககும - முதிரும; பழுககும என்ப'தறகும் அதுதான பொருள். ஓரி - இஙகே நீலம். பாயதல் - பரததல். மீது - மேல் இடம. வான்கண - வானிடம். அற்று - ஒததது. மீன்கண எனபதில,

கண் என்பதற்குப் பொருளில்லை ; அசை. தாள் - முயற்சி. சுகிர் புரி நரம்பு - சுகிர்ந்து புரிந்த நரம்பு; சுகிர்ந்த - வடித்த. புரிந்த - முறுக்கப்பட்ட, சீறியாழ் - சிறு யாழ். விரை - மணம் ; ஒலி - தழைத்த விறலி - பாடினி, பாடுகின்றவள். (சஙி)

## இரக்க வுணர்வு தகுதியறிந்துகொண் டிராது

[படைகள் கலக்கும்போது அரியேறுபோலப் போர்க்களத்தில் உலவும் வீரர்கள் இரப்போரிடத்திலும் உதவிக்குரியோரிடத்திலும் அன்பர்களிடத்திலும் குழந்தைகளைப்போல நடந்துகொள்வர். அத்தனை இரக்கவுள்ளம் அவர்களுடையது வீரங்கொள்ளும் போர்க்களத்தில் வேற்றுமை யில்லாததுபோலவே, இரக்கங் கொள்ளும் வினையிடத்தும் அவர் வேற்றுமையில்லாதவரே. வீரத்தின் சூழ்ந்த பண்பு இரக்கமெனல் பொருந்தும்]

அறுகுளத் துகுத்தும் அகல்வயல் பொழிந்தும்
உறுமிடத் துதவா துவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்கால் பேகன்
கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே.

—புறநானூறு, கசஉ.

கடைச்சங்க காலத்தில் இருந்த வள்ளல்களில், 'பேகன்' என்பவனும் ஒருவன். இவன் மற்றவர்களுக்குப் பொருள்களை எப்படி வழங்குகிறான் என்பதைப் பற்றி, 'பரணர்' என்னும் புலவர்பிரான் விளக்குகிறார்.

மழைபோல வழங்குகிறான் என்பது அவர் கருத்து. மழை, நீர் அற்ற குளத்திலும் பெய்கிறது; அகலமான விளை நிலங்களிலும் பொழிகிறது; இப்படியே பயன்படக் கூடிய தக்க இடங்களிலேயே மேலும்மேலும் பெய்து உதவாமல், வெறுங் களர் நிலங்களிலும் அது சொரிகிறது. அப்படி ஒரு வரம்பில்லாத முறையினையுடைய மழைபோலப் பேகனும், தக்கார்க்கே தரவேண்டு மென்னும் வரம்பு கொள்ளாமல் எல்லார்க்கும் வழங்குகிறான்.

'பாததிர மறிநது பிசைசயிடு' என்று ஒரு பழமொழி வழங்குகிறது. இவன் அதனை அறிவதில்லை; இப்படி, கொடுததலில் அறியாமைப்படுதலால், இதனைக 'கொடை மடம படுதல' எனபாாகள்.

இநத அறியாமை ஒன்றுதான் பேகனிடத்தில் இருக்கின்ற தலலாமல, மறறபபடி, பகைவா படைவநது கலக்குமாஞல், அதில அவன் அறியாமைப்படுவதில்லை, அதாவது, தகக வீரர்கள தனனை எதிாததுநின்ருல, அவாகளமேலமட்டும் படை வீசிச் சணடை செயவானே யலலாமல, வீரரலலாதவர், முதுகிட்டவா, புண்பட்டவா, ஆண்டு முதிாந்தவா, சிறுவா முதலியவாகளமேல படை தொடுககமாட்டான்; அவ வகையில தகுதி தெரிநது செயவான எனபது கருதது. அநதப பேகன, மதம மிகக யானைகளையும கழல கட்டிய காலகளையும உடையவன்

பேகன் நலல வீரன், எலலாாக்கும் கொடுப்பவன் எனபது கருதது

குறிப்புரை —உகுததும - சொரிநதும, உவா நிலம - களர் நிலம கழல - வீராகள் காலில அணியும அணி மடமபடுதல - அறியாமைபபடுதல (சசு)

## மகளிர வீரம்

[வீரம, தனனலங காணுதது மகளிா வாழவே தனனலங காணுத தனிசசிறபபுடையதாகலின, அவா, வீரததுக்கு, பினனுஞ சிறநதவாாகினருா. மகளிா தாயராஞல அவா பொருளெலலாம அவாதம புதலவாகளே. அப புதலவாகளையுங் கடமையின பொருட்டு அவா மகிழவோடு இழநதொழுகும பெரு வீர மிககவா.]

மீன்உண கொககின் தூவி அனன
வாலநரைக கூநதல முதியோள சிறுவன்
களிறுஎறிந்து பட்டனன என்னும உவகை
ஈனற ஞானறினும பெரிதே கணணீா்

நோன்கழை துயல்வரும் வெதிரத்து
வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே.

—புறநானூறு, உ௭௭.

ஒருத்திக்கு நீண்ட நாள் குழந்தையில்லாமலிருந்தது; ஏறக்குறைய நாற்பதாம் ஆண்டளவில் அவளுக்கு ஒரு குழந்தை பிறந்தது குழந்தை ஆண் குழந்தையாயிருந்தது. அருமையாக வளர்த்து வந்தாள், அந்தத் தாய், மறவர் குடியைச் சேர்ந்தவள். அதனால், புதல்வன் வளர வளர, அவள், அவனைப் படைக்கலப் பயிற்சிகள் முதலியவற்றில் நன்கு பழக்கித் திறமையாகவும் வளர்த்துவந்தாள்

பையன் நல்ல கட்டிளைஞனாய் வளர்ந்துவிட்டான், காட்சிக்கினியனாய் விளங்கினான். தாயோ முதியோளாய் விட்டாள். மீன் உண்ணுகின்ற கொக்கினது சிறகு மயிர் போல, அவள் கூந்தல் வெளேரென்று நரையுடைய கூந்தலாய் வெளுத்துவிட்டது. அத்தனை முதியோளாயவிட்டாள். பையன் எவ்வளவு கட்டிளைஞனாய் வளர்ந்துவிட்டாலும், இவள் முதுமையை நோக்க அவன் சிறுவனன்றோ!

ஒரு நாள் திடுமென்று ஊரிற் போர்ப்பறை கேட்டது. படை திரட்டினார்கள். தனக்கு ஒரே பிள்ளையாயிருந்தும், கடைசி காலத்தில் தனக்கு இவனைத் தவிர வேறு யாரும் ஆதரவில்லை என்று தெரிந்திருந்தும், புதல்வனைப் போர்க் களத்திற்கு அனுப்பத் துணிந்துவிட்டாள். போர் நடந்தது.

பையன் பகைவர் படையிலுள்ள பெரிய பெரிய யானை களையெல்லாம் வாள்வீசிக் கொன்று மிக வீரமாயப் போர் செய்தான் முடிவில் வெற்றியுண்டாயிற்று. ஆனால், கடைசி யாக இந்தப் பையன் ஓர் யானையின்மேற் பாய்ந்து வாள் வீசும்போது, அதனிடம் சிக்கி இறந்துபோனான்.

தாய்க்கு இச் செய்தி எட்டியது. "ஆ, களிறு எறிந்து என் மகன் பட்டனன், யான் மகப்பெற்றதன் பயனை இப் போது பெற்றுவிட்டேன். குழந்தையைப் பெற்றபோது, குழந்தை பிறந்ததற்காக எனது உள்ளம் மகிழ்ந்தது. அந்த

மகிழ்ச்சி எவ்வளவு! குழந்தை வளர்ந்து தனது கடமையை நன்றாகச் செய்து முடித்தது என்று கேட்க இப்போது எனது உள்ளம் எவ்வளவு மிகுதியாக மகிழ்கின்றது. யான் அவனுக்காகச் செய்த முயற்சியெல்லாம் இப்போதுதானே பயனுயின" என்று கருதி உள்ளம் பூரித்தாளாம்.

ஒரு பொருளைப் பெறுகின்ற காலத்தில் உண்டாகும் மகிழ்ச்சியைவிட, அதனாலான பயன் நிறைவேறுங் காலத்தில் உண்டாகும் மகிழ்ச்சியன்றே பெரியது. வீரர் குடியிற் பிறந்த ஒருவனால் உண்டாகும் பயன், போர்க்களத்திற் பகைவரை எதிர்த்து வீரமாய்ப் பொருவதுதான். இறப்பதும் பிழைப்பதும் பொருளல்ல; நோக்கமுமல்ல. கடைசிவரை பிற காரியத்தைச் செவ்வையாய்ச் செய்து முடிப்பதே முறையும் பயனுமாம். ஆகவே, அவள் ஈன்ற ஞான்றினும் பெரிது மகிழ்ந்தாள்.

வருத்தம் மிகுதியாலுற் கண்ணீர் உதிர்வதுபோலவே, மகிழ்ச்சி மிகுதியாலுங் கண்ணீர் பெருகுவதுண்டு.

இம் முதியோள் கண்களிலும் அவ்வுவகையால் கண்ணீர் பெருகிச் சிந்தின.

அவள் ஊருக்குப் பக்கத்தில் 'வெதிரம்' என்று ஒரு மலை உண்டு. அதில் மூங்கிற் காடுகள் நிறைந்திருந்தன. வலிய மூங்கில்களெல்லாம் செழுமையாய் வளர்ந்து அசைந்து கொண்டிருக்கும், மழை பெய்தால், அந்த மூங்கிலின் இலைகளிலிருந்து நீர் சொட்டுச் சொட்டாய்ப் பல துளிகளாய்த் துளித்துக்கொண்டிருக்கும்.

மகிழ்ச்சியால் இவள் சிந்தின கண்ணீர்த் துளிகள் அந்த மழை நீர்த் துளிகளைப் பார்க்கிலும் பலவாயிருந்தன.

குறிப்புரை :— தூவி - சிறகு வால் - வெண்ணிறம். எறிந்து - வீசிக்கொன்று. பட்டனன் - அழிந்தான் ஞான்று - பொழுது. நோன - வலிய. கழை - மூங்கில் துயல்வரும் - அசையும் வெதிரத்து - வெதிரம் என்னும் மலையில். வான - மழை. தூங்கிய - விழுந்த சிதர் - துளி. (சஎ)

நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயின் உண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ,
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே

—புறநானூறு, உ௭அ.

ஒரு கிழவி; மறக்குடியைச் சேர்ந்தவள். நரம்பு மேலே தோன்றி உடம்பு பொலிவழிந்திருந்தது. அவள் தோள்கள், சதை வற்றி இன்னும் முடிவு பெறாத நிலைமையில் தளர்ந்த மென்மைப்பட்டுவிட்ட தன்மையுடையனவாயிருந்தன. உலர்ந்த கட்டையைப் போன்ற இடுப்புடையவளாயிருந்தாள்; விரிப்பானேன்? நன்றாய் மூத்துப் போனவள்.

அவளுக்கு ஒரு புதல்வன்; அவன் இளைஞன். பகைவரோடு போர்புரிவதற்குக் காலையிற் போர்க்களத்திற்குப் போனான்.

பிற்பகலில் அவன் போருக்குத் தோற்றுப் புறங்காட்டி ஓடிவிட்டான் என்று பலரும் பேசிக்கொண்டார்கள். இது கிழவியின் காதுக்குக் கேட்டது.

அவளுக்குச் சொல்லமுடியாத சினம். அப்படி அவன் இந்த அடாத போருக்குத் தோற்றோடினானென்றால் அக்கொடியோன் பாலுண்ட என் மார்பை உடனே அறுத்தெறிவேன் என்று சினந்துகொண்டாள். அவ்வளவுதான்; அங்கே இருந்த வாள் ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டாள். நேராய்ப் போர்க்களத்திற்குப் போனாள். அங்கே அழிந்து கிடக்கின்ற பிணங்களைத் தன் கையிற் கொண்டு

போன வாளினுற புரட்டி, இரதத வெள்ளததாற சிவந் திருந்த அச்செங்களததைத துழவினுள.

அபபடி துழவுகினறவள, ஓரிடததில, பகைவா எறிந்த படை மாாபிற பட்டு உடமபு சிதைநது வேருகித தன மகன இறநது கிடப்பதைக கண்டாள, கண்டு சினம மாறி, வியநதாள். தான் அவனைப பெறற காலததைப பாாககிலும பெரிது மகிழநதாள.

எபபடி யிருககிறது தமிழக் கிழவியின் வீரம!

குறிப்புரை :—எழுநது - தோனறி, உலறிய - பொலிவு அழிநத. சிரமபா - முடியாத, சதைவறறுதல இன்னும முடியாத. மென - மெனமைபபடட, தளாவினுல மெனமைபபடடுவிட்ட முளரி - உலாநத விறகு அழிநது - தோறறு, மாறினன - புறங காட்டினன மணடு அமா - அடாநத போா உடைநதனன-தோறறு ஓடினன அறுததிடுவென - அறுததிடுவேன சினைஇ - சினநது. கொணட வாளொடு - கையிறகொணட வாளொடு, படு பிணம - இறநத பிணம பெயரா - பெயாதது, புரட்டி படுமகன கிடக்கை - இறந்த மகனது கிடக்கையை, கிடக்கை - வீழநதுகிடக்கையை. காணூஉ - கணடு (சஅ)

கெடுக சிநதை; கடிதுஇவள துணிவே,
மூதில மகளி ராதல தகுமே,
மேனுள உறற செருவிறகு இவளதனஐ
யானை எறிநது களததொழிந தனனே,
நெருநல உறற செருவிறகு இவளகொழுநன்
பெருநிரை விலஙகி ஆணடுபபட் டனனே,
இனறும, செருபபறை கேடடு விருபபுறறுமயஙகி
வேலகைக கொடுதது வெளிதுவிரிதது உடீஇப்
பாறுமயிாக குடுமி எணணெய் நீவி
ஒருமக னலலது இலலோள
செருமுகம் நோககிச செலகஎன விடுமே.

—புறநானூறு, உஎகூ.

மறவர் குடியின் வியப்பே வியப்பு! இக் குடியில் வந்த வயது முதிர்ந்த பெண்டிர் தம் புதல்வரைப் போர்க் களத்திற்கு அனுப்புவதும், அவர்கள் போரில் உயிர் துறக்க நேர்ந்தபோது, வீரமாயப் பொருது இறந்தாரகளென்று கேட்க நேர்ந்தால், ஈன்ற பொழுதினும்பெரிதாகப் பெரிது மகிழுவதும் பற்றிப் புறநானூற்றில் சில குறிப்புகள் வந்திருக்கின்றன.

இந்தப் பாட்டு வயது முதிராத மாதொருத்தியின் பெருவீர நிலைமையை எடுத்துக் காட்டுகின்றது.

நேற்றைக்கு முன்னாள் நடந்த போருக்கு இவள் தமையன் ஒழிந்தான்; அதுவும், யானைப் படைகள்மேல் வேல் ஓச்சிக் களத்தில் இறந்தனன்.

நேற்று நடந்த போருக்கு இவள் கணவனே இறந்து விட்டான்; இவன், எதிரி படைகளில் அணியாக வந்த பெரிய காலாட் படையோடு மாறுண்டு அங்கே பட்டனன்.

இன்றும் போர்ப்பறை கேட்டது. தமையனையும் கணவனையும் பறிகொடுத்துவிட்ட மாது, உள்ளந் தளர வில்லை. வெற்றிகாணுமவரை நாட்டுக்குத் தன் குடும்பம் முழுமையும் உரியது என்று நினைத்தாள்.

மேலும் விருப்பங்கொண்டு அதன் வயமாகி, ஒரே மகனன்றி வேறு குழந்தைகள் இல்லாதவளான இவள், அதுவுந் துணிகட்டக்கூடத் தெரியாத இளம்பருவத்தவனா யிருந்த தன் சிறுவனை அழைத்து, வீரமே நினைவாயிருந்தமை யால் முதலில் ஒரு வேலை அவன் கையிற்கொடுத்து, அதன் பின் அவன் துணிகட்டியில்லாமை தெரிந்து ஒரு வெள்ளைத் துணியை விரித்து அவன் இடுப்பிற் கட்டி, அப்புறம் தலை விரிந்து கிடப்பது நினைவுக்கு வர அவ் விரிந்த மயிர்க் குடுமியை எண்ணெய் தடவி வாரி முடித்துப் பின்பு அப் பசிளஞ் சிறுவனைப் பார்த்துப் 'போ, போ, போர்க் களத்தை நோக்கிப்போ' என்று சொல்லி அனுப்புகின்றாள்.

இவள் காட்டிய இவ் வரிய பெரிய வீரத்தன்மையை

நினைந்த 'ஒக்கூர் மாசாத்தியார்' என்னும் புலமைப் பிராட்டியாரே, 'என்ன இருந்தாலும் இப்படிப்பட்ட கொடிய வீர வுள்ளம் உதவாது' என்று கருதி, 'கெடுக இச் சிந்தை; இவள் துணிவு கடுமையானது' என்று இரக்கத்தோடு கூறி, பின் மறக்குடிப் பெண்டிர் அப்படித்தானே நடந்துகொள்ள வேண்டும் என்று அவள் கடமையை நினைந்தவராய், 'ஆ, இவள் மறக்குடி மகளிருள் ஒருத்தியாதல் தகும்' என்று வியந்தெடுத்துப் பேசுவாரானால், அதன்மேல், நாம் வியப்ப தென்பது என்ன இருக்கின்றது!

குறிப்புரை :—கெடுக - ஒழிக, குழந்தையையும் போர்க்கு அனுப்புகின்றாளே என்னும் இரக்கத்தால் 'கெடுக சிந்தை' என்றார். உண்மையிற் கெடவேண்டும் என்பது கருத்தன்று கடிது - கடுமையானது மூதில் - முதிய குடி; அதாவது பழைய மறக்குடி, மகளிராதல் - மகளிருள் ஒருத்தியாதல் மேல் நாள் - நேற்றைக்கு முன் நாள் உற்ற - நிகழ்ந்த, செரு - போர். தன் ஐ - தமையன். எறிந்து - படை வீசிக் கொன்று, கொன்றபோது இவனும் இறக்க நேர்ந்தது அதனால், எறிந்து களத்தொழிந்தனன் என வந்தது. களம் - போர்க்களம், ஒழிந்தனன் - இறந்தனன். நெருநல் - நேற்று; கொழுநன் - கணவன் பெருநிரை - பெரிய வரிசை, அதாவது பெரிய எதிர்ப்பக்கத்துப் பகைவீரர் வரிசை. விலங்கி - மாறுண்டு; பலபேரை அழித்து அங்ஙனம் அழிக்குமிடத்தில் தானும் இறந்தான் என்பது கருத்து ஆண்டுப் பட்டனன் - அங்கே இறந்தனன் பறை - மேளம் விருப்பு உற்று - விருப்பம் கொண்டு. மயங்கி - வயமாகி; அவ் விருப்பத்தின் வயமாகி என்பது பொருள். வெளிது - வெண்ணிறமான உடை, உடீஇ - உடுத்து பாறு மயிர் - அவிழ்ந்துகிடந்த மயிர் நீவி - தடவி, அவிழ்ந்துகிடந்த மயிரில் எண்ணெய் தடவி என்று வருவதனால், இவள் அதனை வாரி முடித்தனுப்பினள் என னுங் கருத்துங் கொள்ளப்படும். விடும் - விடுப்பாள், அனுப்புவாள் என்பது பொருள் (௪௧)

கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்
வெந்துவாய் மடித்து வேலதலைப் பெயரித்
தோடுகைத் தெழுதரூஉத் துரந்தெறி ஞாட்பின்
வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி
இடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய

சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி
வாடுமுலை யூறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே.

—புறநானூறு, உகடு.

கடல, எழுசசி பெறறதுபோலப் பாசறை ஒரே ஆர வாரமாயிருககிறது அகலமாக ஓா ஊாபோல அது கட்டப் பட்டிருககிறது. பகைவீரரும தமது இருககைககாக மறு பககததில இபபடிப பாசறை அமைததுககொண்டிருந் தாாகள. அவரவாகளுககு உதவியாக வநத துணை வீரரும அஙகஙகும இஙஙனம பாடி வீடுகள அமைததுக்கொண் டனா. நடுவில, போர் நடநதது.

ஒரு வீரத தாயின மகன் படையிற சோநதிருநதான. போா நடநதபோது எதிரிகளின்மேல அவனுககுண்டான மனப புழுககததுககு அளவே இலலை. அபபடி மனம புழுஙகி, சினததால வாய மடிதது, தனது வேலின் தலையை அசைதது, போரில எதிாப பக்கததிலிருநது முனனுல வருகினற படையைப் பிளநது இடம உண்டாகும படி செய்துகொணடு முனனேறிப போய, அதன பின வரு கினற நடுபபடையின பரபபிற போா செயயுமபோது, அவன உடமபு சிதைந்து வேறுகிவிட்டது.

அவவளவு தொலைவு முனனேறிச் சென்ற வீரததால அவன சிறபபுடையாளனுனை. சிறப்புடையாளன என் பதறகு இஙகே வீர மிகுதியுடையான எனபது கருதது.

இம மாட்சிமையை அவன் தாய கணடாள. மகிழ்ச்சி யால் உளளம குழைநதது. அததகைய பெருமையுடை யோன தன புதலவன என்னும நினைவினுல், வறறியிருநத அவள் மாாபுகள் புதுவதாக மகப் பெறறுறபோலப பால ஊறிச் சுரநதன.

எதறகு மகிழ்வது எதறகு அழுவது என்றே தெரி யாத உலகததுக்கு; இதுபோன்ற நிகழ்ச்சிகள் நல்ல எடுத் துக் காட்டுகளல்லவா!

குறிப்புரை :—கிளர்ந்து அன்ன - ஆரவாரித்தாற் போன்ற; கட்டு ஊர - கட்டிய ஊர, ஊர்போன்ற பாசறை வீடுகள். காப்பணங்டு. பெயரி - அசைத்து. 'தோடு உகைத்து எழுதரூஉத் துரந்து எறி' என்பது ஞாட்புக்கு அடைமொழி, 'தானிருக்கும் படைத்தொகுதியைப் பின் தள்ளி முன்தோன்றிப் பகைவரை வீசி எறிகின்ற ஞாட்பு' என்பது பொருள். ஞாட்பு, போர் வருபடை - முன்வருகின்ற படை. போழ்ந்து - பிளந்து வாய - இடம். பட - உண்டாக. விலங்கி - எதிர்த்து அழுவத்து - பரப்பில். மாண்பு - மாட்சிமை. அருளி - அவனுக்காகக் குழைந்து. வாடு முலை - பால்வற்றிய முலை. ஓடாப் பூட்கை விடலை தாய்க்கு - பின்னிடாத வலிமையையுடைய இளைஞனின் தாய்க்கு. பூட்கை - வலிமை, விடலை - காளை; காளைப் பருவமுடையவன். தாய்க்கு ஊறிச் சுரந்தன என்று கொள்ள வேண்டும். (ரு௦)

## மறவர் குடியில் வந்த ஒரு வீரத்தாயின் சொல்

[மகளிர் உணர்ச்சியுருவானவர்; உணர்ச்சி தனது கடமையை விரைந்துணரும். கடமையைக் குன்றாது செய்தலே வீரத்தின் அடையாளம். வீரமுடையோர்க்கு அதன்முன் எத்தகைய சிறந்த பொருளும் பொருளாகத் தோன்றாது; வீரத்திற்குத் துணையாகும் பொருள்களே பொருள்களாகும் புதல்வரும் அவ்வாறே. புதல்வரை அவ்வாறு தகுதிப் படுத்துங் கடமைகள் இச்செய்யுளில் வருகின்றன.]

ஈன்றுபுறந் தருதல் என்தலைக் கடனே,
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

—புறநானூறு, ஙஎ௨.

"புதல்வனைப் பெற்றுப் பாதுகாப்பது எனது முதல் கடன், பின்பு, அவனைப் படைக்கலப் பயிற்சி முதலியவற்றால் நிறைந்தவனாகச் செய்வது அவன் தந்தையின் கடமை; அவனுக்குப் படைக்கலங்களை வடித்துக் கொடுப்பது

கொலல்னின் கடமை. அவனுக்கு நல்லொழுக்கததை அளிப்பது வேநதனின கடமை; ஒளி விளங்கும வாள் கொண்டு கொடிய போர்களை அழிதது அங்குளள போர்க் களிறுகளைக கொன்று வெறறியுடன் திரும்புவது காளைப் பருவததவனுன அப புதலவனின கடமையாகும்."

மறவா குடியில பிறநத ஒரு மாதின மனப்பான்மை இதனுல நன்கு விளஙகுகிறது.

குறிபபுரை :—புறநதருதல - பாதுகாததல, நடை - போககு; ஒழுககம ஒளிரும - ஒளி தரும, சமம - போா; முருககி - அழிதது, கெடுதது. எறிநது - வீசி, வீசிக கொனறு எனனும கருததில வந தது பெயாதல - நீஙகுதல், போாககளததை விடடு நீஙகி வருதல என்பது கருதது. காளை - காளைபபருவ முள்ளவன. (கக)

---

## 8. காதல்

### காதலின் துணிவு

[அன்பும முறைமையும உடையது காதல். அவை அமையாதது காதலாகாது. காதலால் விளையும உள்ளததின நனமை அவை. அவற்றை நிறைவேறறும உணாவே காதல் எனபதும பொருந் தும இசசெயயுள இநநிலைகளை இனிது விளககும.]

நாடல் சானறோர் நமபுதல பழியெனின்,
பாடில கலுழும கண்ணொடு சாஅயச்
சாதலும இனிதே, காதலந் தோழி!
அநநிலை அலல வாயினும, சானறோர்!
கடனநிலை குனறலும இலரெனறு உடன்அமர்நது
உலகம கூறுவது உணடெனை, நிலைஇய
தாயம ஆகலும உரிததே, போதுஅவிழ
புன்னை ஓஙகிய கானல
தணணந துறைவன சாயல மார்பே.

—நற்றிணை, நஉ௪.

அறமுறையோடு ஒழுகுவோர்க்கு எப்போதும் துணிவும் உண்டு; ஒழுங்கும் உண்டு. தலைவி தோழியை நோக்கிச் சொல்லுகிறாள் : "அன்புள்ள தோழி! நம்மை நம்பி நாடுதலுடைய சான்றோரை நாமும் விரும்பி யொழுகுதல் பழிக்கத் தக்கதென்றால், அவரையே நினைந்து, தூக்கங் கொள்ளாதன வான அழுகின்ற கண்களோடு அப்படியே மேனி இளைத்து இறந்துவிடுதல் நல்லது. அந்நிலைகள் பொருந்தாதனவானால், இப்படி செய்யலாம். 'யார் எங்ஙனங் கருதினும் சான்றோர் தம் கடமைத்தன்மையிற் குறையார் என்று உலகம் ஒருங்கு விரும்பிக் கூறுவதுண்டு' என்று அம்முறைமையைக் கடைப்பிடித்தோமானால், போதுகள் மலர்கின்ற புன்னை மரங்கள் ஓங்கிய கானற் சோலையுடைய குளிர்ந்த கடற் கரைத் தலைவரது மென்மையான மார்பு, நமக்கு நிலைபெற்ற உரிமையாதலும் உடைத்து!'

முதலிற் சொன்னது வருத்தத்தால்; பின்பு சொன்னது முறைமையினால். முன்னது மனத்தின் தன்மை; பின்னது அறிவின் தன்மை. உண்மை யொழுக்கமுடையவர் பால் வெளிவருஞ் சொற்கள் இங்ஙனம் இரண்டி லொன்றாகவே யிருக்கும். முன்னது, பற்றற்ற உணர்வினால் அரும்பியது. பின்னது, கடமையுணர்வினால் விரும்பியது. சிறந்தது பின்னையதே, தலைவியின் உயர்ந்த நேயப் பான்மையை இப்பாட்டு நன்றாய் எடுத்துக் காட்டுகிறது.

குறிப்புரை —நாடல் - நாடுதலுடைய, பாடு - இங்கே, கண் படுதல். கலுழும் - அழுகின்ற. சாய் - மெலிந்து. காதலம்தோழி - அம் சாரியை; பொருளில்லை. காதல் - இங்கே அன்பு. உறங்காமை அழுகின்றமை இளைக்கின்றமை இறக்கின்றமை யென்னும் நிலைகளை நினைந்து 'அல்லவாயினும்' என்பப் பன்மையான வந்தது; அல்லவாயினும் - பொருந்தாதனவானாலும். உடன் அமர்ந்து - ஒருங்கு விரும்பி. உண்டு என - உண்டு என்று கொண்டால், நிலைஇய தாயம் - நிலைத்த உரிமை, போது - மலரும் பருவத்து மொக்கு; கானல் - கடற்கரைச்சோலை, தண்ணம் துறைவன் - அம், சாரியை; துறைவன் - கடற்கரை நிலத்தவன். சாயல் - மென்மை. (இஉ)

## நட்பின் அகலமும் உயர்வும் ஆழமும்

[காதலால் உள்ளம் பெருமையுறுகின்றது, உயர்வடைகின்றது; விரிவெய்துகின்றது. உள்ளத்தின் இப்பயன் பிறவியின் பயன்; இதற்குக் கருவி ஆண் பெண் நட்பு. இந் நட்பு நிலம் நீர் வான் முதலிய பருப்பொருள்களின் ஆற்றலினும் சிறந்து அவற்றை இயக்கவும் வல்லது.]

நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவு இன்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.

—குறுந்தொகை, ௩.

உணர்ச்சிக்கு நிகரானது உலகத்தில் ஒன்றுமில்லை, அதுவும் உண்மையான உணர்ச்சி ஆ, எவ்வளவு பெரியது! அது நிலத்தைவிடப் பரந்தது; வானைவிட உயர்ந்தது; கடலைவிட ஆழமானது. கணவனும் மனைவியும் உண்மையான உணர்ச்சி யுடையவர்களானால், அவர்களுக்கு எதிராவது எதுவுமில்லை.

தலைவனோடு செய்துகொண்ட நட்பின் நன்மைபற்றித் தலைவி மகிழ்ந்து சொல்லும் சொல் இப் பாட்டில் வருகின்றது.

தலைவனைப்பற்றி அவள் சொல்லும்போது அவனை, 'மலைச்சாரலில், கருநிறமான கொம்புகளையுடைய குறிஞ்சி மரத்தின் மலர்களைக் கொண்டு வண்டுகள் மிகுந்த தேனை உண்டுபண்ணுகின்ற இடத்தையுடைய நாடன்' என்று உள்ளுணர்வோடு சொல்லுகின்றாள், நற்குணங்கள் கொண்டு தலைவன் தனக்கு மிக்க இன்பம் விளைவிப்பவன் என்று அவள் மகிழ்ந்து கூறியபடியாம். மலர் - நற்குணங்கள்; தேன் - இன்பம்.

இங்ஙனமெல்லாம் நற்குணங்களால் உண்டாகும் உணர்ச்சிகள் கொண்டு வாழ்க்கை நடத்துவதாயிருந்தால்,

அங்ஙனம் நடந்துங் கணவன் மனைவியரின் கெழுதகைமை, உள்ளபடியே நிலத்தினும் வானினும் கடலினும் மேம்பட்டதேயாமன்றோ! உலகத்தில் இதனினும் நல்வாழ்க்கை யாவது வேறு எது?

குறிப்புரை — நீர் - இங்கே கடல், ஆர் - அருமை, அளத்தற்கு அருமை, அளவின்று - அளவினது, அளவினையுடையது. ஆர் அளவின்று - அளத்தற்கரிய அளவினையுடையது; என்றது, கடலின் ஆழத்தை. சாரல் - மலைப்பக்கம். பெருந் தேன் - மிக்க தேன். (௬௫)

## நெஞ்சக் கலப்பு இத்தகைய தென்பது

[காதல், இயற்கையின் ஆணையால் மக்கள் உள்ளத்தே நிகழ்கின்றது. அதுவே அதற்கு உரியாரை ஒன்றுகூட்டும், நன்கு கூட்டும், பிறர் உதவியின்றியுங் கூட்டும். அங்ஙனங் கூட்டுங்கால், அதன் முன் எவ்வகைத் தடையும் நில்லாது. ஏனை முறைகட்குத் தடையும் அச்சமும் உண்டு.]

யாயும் ஞாயும் யாரா கியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயல்நீர் போல,
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே.

—குறுந்தொகை, ௪௦.

உண்மையறிவுடன் இப்பாட்டு இயற்றப்பட்டிருக்கின்றது. உண்மைப் போக்குக்கு எவ்வகைத் தட்டுத் தடங்கலும் இல்லை; எவ்வகைப் பற்றுமில்லை; சாதி நிறம் நாடு மொழி முதலிய வேற்றுமைகளால் யாதொரு தடையும் யாதொரு மாறுபாடும் உண்டாவதில்லை. அது, தாராளமாய வீறுடன் நடைபெற்றுச் செல்கின்றது.

உண்மையில் உண்டாகும் உள்ள நெகிழ்ச்சி, இன்ன விடத்தில் இன்ன காலத்தில் இன்னாரிடத்திற்றான் றோன்றும் என்னுங் கட்டுப்பாடுடையதன்று. அந் நெகிழ்ச்சிக்கு

உரியார் எவரோ அவர் எதிர்ப்படும்போது, அது தானே தோன்றி அமையும். அதன்முன் ஒரு வேறுபாடும் எதிர் நில்லாது; வெள்ளம்போலப் பெருக்கெடுத்துப் பாயும்.

செம்மண் நிலத்தில் மழைநீர் பெய்து அம் மண்ணின் நிறமும் சுவையும் ஊறி அதன் தன்மையை அடைவது போல, அன்புடைய நெஞ்சம் இரண்டும் ஒன்றையொன்று கலந்து ஒரு தன்மையாய் நிற்கும். மண் வேறாகவும் மழை நீர் வேறாகவும் தனித்தனியா யிருக்கும்போது, உலகத்தில் எவ்வகையான வாழ்க்கையும் இல்லை. அதுபோலவே ஆண் பெண் உள்ளங்கள் தனித்தனியாய் நிற்கும்போதும் உலகத் தில் வாழ்க்கை யென்பது ஒன்றுமில்லை. அதனால், இயற்கை அங்ஙனம் தனித்தனியாய் இருக்கவிடுவதில்லை.

இயற்கை நிகழ்ச்சியின்படி ஒன்று கூடுவதே உண்மை நிகழ்ச்சி; அதுவே வலிவானது; தளராதது, உறுபயன் தருவது.

தலைவனும் தலைவியும், ஊழ்முறைமையின் வயத்தால் இயற்கையாக ஒன்றுகூடி, இருவர் நெஞ்சமும் செம்புலப் பெயல் நீர் போலக் கலந்து, ஒருவராயினர். தலைவர் என் றேனும் தன்னைப் பிரிந்துவிடுவரோ என்று தலைவிக்கு ஓர் எண்ணம் நிகழ்ந்தது. தலைவன் அதனைக் குறிப்பால் தெரிந்துகொண்டு அந்த ஐயத்தை அகற்ற நினைந்தான். எப் போதும் உண்மையை விளக்குவதே, நிலையாக ஐயந் தீர்க் கும் ஆற்றலுடையதாயிருக்கின்றது, தலைவன் மெய்யுணர் வோடு கீழ்வருமாறு சொல்லுகின்றான் :

"இதற்குமுன் என் தாயும் நின் தாயும் எத்தகைய தொடர்பேனும் உடையவரா? என் தந்தையும் நின் தந்தை யும் எந்த முறையில் உறவினர்? நானும் நீயும் ஒருவரை யொருவர் எப்படி அறிந்துகொண்டோம்? செம்மண் நிலத் திற் பெய்த மழைநீர்போல அன்புடைய நெஞ்சம் தாமே இயற்கையாகக் கலந்தன" என்றான்.

'நம் செயலால் அல்லது பிற தொடர்புகளால் நாம் கலவாதபோது, நம் செயலாலோ அல்லது பிற தொடர்பு

களாலோ நாம பிரிவதென்பதுமட்டும எபபடி நிகழும்? இயறகைக் கூட்டததை நமமாற பிரிக்க முடியுமா' என பது கருதது.

உண்மைக் காரணமாதலின தலைவிககு ஐயம அறவே தீர்ந்தது.

குறிபபுரை:—யாய - என தாய, ஞாய - நின தாய; யாரா கியா - யாரானவா, எததகைய தொடாபுடையவா, ஒரு தொடாபும இலரே எனபது கருதது. எநதை - என தநதை, நுநதை - உன தநதை எமமுறை - எமமுறையில கேளிா - சுறறம எவ வழி - எம முறைமையில, அறிதும - அறிநதுகொணடோம எனனுங கருததில வநதது. செம - செநநிறமான, புலம - நிலம, செமபுலம எனறது, இஙகே செமமண நிலம. பெயல - மழை, பெயலநீா - மழைநீா, கலநது ஒனறின தனமையை ஒனறு அடைவதறகு உவமை. (கூச)

## இரு பேராண்மை

[ஆணமையும் பெண்மையும இயைநதது காதல. ஆணமை, முறைமையியல்பு, பெணமை, அனபியல்பு. அனபும முறை மையும அணைநத காதலில துனபம ஏது? துனபம ஒனறு உணடாயின, அநத அன்பையும முறைமையையும பொருள் செயயாத அறியாமையினுலேதான உணடாயிருததலவேணடும்.]

செலவா ரலலர்எனறு யான்இகழந தனனே
ஒலவா ளல்லளஎன்று அவர்இகழந தனரே,
ஆயிடை, இருபே ராணமை செயத பூசல
நலஅராக கதுவி யாஙகுஎன்
அலலல நெஞசம அலமலக குறுமே.

—குறுநதொகை, சங.

ஆண்மை என்னுங் குணம் பெண்களுக்கும் உண்டு. அது மென்தன்மையில உள் உரமாய நிகழ்வதொரு வன்மை; ஆனல, இங்கே கூறப்படுவது அதுவனறு.

"என் மென்மைப் பண்பில் இவ்வளவு ஈடுபட்டுப் பேரன்பினராயக் கட்டுண்டு நிற்கும் தலைவர், பொருள் காரணமாகவோ பிற காரணமாகவோ பிரிந்து செல்ல அவருள்ளம் இடந்தராது என்று கருதி அவர்க்குள்ள ஆண்மைப்பண்பை நான் பொருள் செய்யாமலிருந்துவிட்டேன்.

தலைவரும், அவர் ஆண்மைப் பண்பில் இவ்வளவு ஈடுபட்டுப் பேரன்பினளாய் ஒழுகும் யான், பொருள் காரணமாகவோ பிற காரணமாகவோ அவர் பிரிந்து செல்லும் போதும், அங்ஙனம் பிரிந்து செல்லும் ஆண்மையை மதித்து, நான் பிரிவாற்றித் தளராம் விருப்பேன் என்று கருதி எனக்குள்ள பெண்மைப் பண்பைப் பொருள் செய்யாமற் பிரிந்து போய்விட்டார்.

அம் முறைமையில் எங்கள் இரு பேராண்மையும் நிகழ்த்திய போரினால், முடிவில் எனது துன்ப நெஞ்சம், நல்ல பாம்பினால் தீண்டப்பட்டு வருந்துதல்போல மேலும் மேலும் பெருந்துன்பமடைகின்றது" என்று தலைவி கூறுவதாக வருவது இப் பாட்டு.

தலைவன் ஆண்மையைப் பொருள் செய்யாதிருந்தது தலைவியின் ஆண்மையெனவும், தலைவியின் பெண்மையைப் பொருள் செய்யாதிருந்தது தலைவனின் ஆண்மையெனவுங் கருதி இங்கே ஆண்மையெனப்பட்டன. இவை உண்மையில் ஆண்மையல்ல வாகலின், இகழ்ச்சிக் குறிப்பினால் 'பேராண்மை' என்று மிகுத்துக் கூறப்பட்டன வென்பது.

**குறிப்புரை**:—ஒலவாள் - தளராவாள், ஒலவாள் அல்லள் - தளராவாள் அல்லள் ஆயிடை - அம் முறைமையில் என்னும் கருத்தில் வந்தது. பூசல் - போர், போரினால். கதுவியாங்கு - கடித்து வருந்தினாற்போல. அலமலக்குறும் - குழம்பும். பிரிவினால் துன்புறும் நெஞ்சம் இவ்விகழ்ச்சியால் பின்னும் குழம்பும் என்பது கருத்து. (௫௫)

## அன்பின் வேட்கை

[கற்புக்குக் காதலே அடிப்படை; கற்புள்ளவர்கள் உயிருள்ளவர்கள்; எனவே, காதலும் கற்பும் உயிரு முடையோர் கணவனும் உடையவரேயாவர். கணவன் பிரிந்திருந்தாலும் அவன் நலமாக இருக்கிறான் என்பதற்குக் கற்புடை மனைவியின் காதலும் உயிருமே அடையாளமாகும். அந்நிலையிலுள்ள தலைவி யொருத்தியின் வாயில் அவளறியாமலே இவ்வுண்மை வெளி வருதல் இச் செய்யுளால் புலப்படுகின்றது.]

நிலந்தொட்டுப் புகாஅர், வானம் ஏறார்,
விலங்குஇரு முந்நீர் காலின் செல்லார்;
நாட்டின நாட்டின ஊரின ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோநம் காத லோரே.

—குறுந்தொகை, கஙo.

பிரிவு தாங்கமுடியவில்லை; ஆற்றாமை மேலிட்டுவிட்டது. அருகிலிருப்பவரிடம் இன்னதுதான் சொல்லுவது என்னும் வரம்பும் நிலைக்கவில்லை. தலைமகனை எப்படியாவது எங்கிருந்தாவது தேடிப் பிடித்துவந்து தன்முன் நிறுத்திவிட வேண்டுமென்பது தலைவியின் பிடி. எங்கிருந்தாலுந் தூது அனுப்பி அவனுக்குத் தன் இன்னலை அறிவிக்கச் செய்ய வேண்டுமென்பது அவள் கருத்து. பிரிவாற்றாமை அவ்வளவு நிலையில் ஓங்கிவிட்டது. அருகிருக்குந் தோழி முதலியோர் ஆறுதல் கூறுகின்றனர். தலைவிக்கு அவர்கள்மேற் சினம் மூளுகின்றது. தோழியை நோக்கி, "தலைவர், நிலத்தைத் தோண்டி அதனுள் புகுந்துவிடமாட்டார், வானத்திற் பறந்து மறைந்துவிட மாட்டார். எதிரிற் குறுக்கிட்டிருக்கும் பெரிய கடலின்மேற் காலால் நடந்து கடந்துவிட மாட்டார். நாடு நாடாக ஊர் ஊராக வீடு வீடாகத் தேடினால், நம் காதலர் அகப்படாமலு மிருப்பரா?" என்று நொந்தும் கசந்தும் சொல்லுகிறாள்.

தலைவனைப் பிரிந்திருக்கும் மகளிரின் ஒருவகையான

உள்ள நிலைமையை, இப் பாட்டு நன்ருய எடுத்துக் காட்டுகின்றது.

குறிப்புரை :—தொட்டு - தோண்டி ; விலங்கு - குறுக்கிட்டிருக்கின்ற, முந்நீர் - கடல் நாட்டின நாட்டின் என்றது, நாடுதோறும் என்றற்கு குடிமுறை என்றது இங்கே வீடு, 'குடிமுறை' என்னும் சொல்கொண்டு கூறினமையால் ஒவ்வொரு வீட்டு மக்களையும் ஆராய்ந்தால் என்னும் கருத்தும் பெறப்படும். தேரின் - தேடினுல். கெடுநரும் - அகப்படாமல் தப்பிப்போவாருமாய (நிசு)

## காமவுணர்வின் தன்மை

[காதல், உயிராற்றலை மாட்சிமைப்படுத்தும் பண்பு. எதுவும் அளவோடு பயன்படுங்கால் அது, மருந்தென மதிக்கப்படும். உணவு உயிர் மருந்தாதல் போலக் காதலும் உயிராற்றல் மருந்து. அம் மருந்து அதற்குரியாரிடமும் தகுதியாளரிடமும் தானே உருவாகி அளவாகப் பயன்படுகின்றது.]

காமம் காமம் என்ப, காமம்
அணங்கும் பிணியும் அன்றே; நுணங்கிக்
கடுத்தலும் தணிதலும் இன்றே; யானை
குளகுமென்று ஆள்மதம் போலப்
பாணியும் உடைத்துஅது காணுநர்ப் பெறினே.

—குறுந்தொகை, கஙசு.

இயற்கை நிகழ்ச்சிகளில் தவருனதென்பதும் வீணுனதென்பதும் யாதுமில்லை. ஒவ்வொன்றின் தன்மையும் வரையறையுந் தெரிந்து தகுதியாகப் பயன்படுத்துவதே முறைமையாயிருக்கிறது அம் முறைமை தவறினுல், அவை தீயவாகின்றன. 'காமம்' என்பதன் இயல்பும் அத்தகையதேயாம். அதனியல்பை இப்பாட்டு நன்ருக விளக்குகின்றது.

'நீ இங்ஙனங் காமங் கொள்ளலாமா' என்று கேட்ட உயிர் நண்பனுக்குத் தலைமகன் விடைகூறுவதாக உள்ளது இப் பாட்டு.

" நண்ப, காமம காமம என்று அதனைக் குறையாகக் கூறுகிருாகள. காமம எனபது வருததததிற சோநத தனறு, நோயிற சோநததுமனறு. அதனை அளவாகப பயனபடுததிககொளள வேணடுமேயலலாமல அது குறைக்ககககூடியதுமன்று மிருகககக் கூடியதுமனறு. அலலது அடியோடு நீககிவிடக் கூடியதுமனறு. யானை தழையுண வைத தினறு அதனுல கொள்கின்ற மததைபபோல, ஆட வராயினும பெணடிராயினும உரியாரைக காணபபெறின அது, தானே நிகழுகினற அளவினையுடையதா யிருககின றது. ஈது இயறகைகாண " எனகிருன தலைவன.

இததன்மையதா யிருததலின, அதன வரையறை தெரிநது ஏறப ஒழுகிக்கொளளுதலே, முறைமையாமென் பது கருதது

குறிப்புரை —அணங்கு - வருததம, பிணி - நோய நுணஙகி - உரிய நிலையினினறும நுணுகி, இங்கே குறைதல எனனுங கருத தில வநதது கடுததல - மிகுதல, அதாவது பெருககுதறகுரிய தாதல தணிதல - அடஙகுதல, முழுமையும நீஙகுதல எனனுங குறிபபில வநதது. நுணஙகிக கடுததலும - குறைநது பெருகுத லும; தணிதலும - முறறும அடஙகுதலும குளகு - தழையுணவு மெனறு - தினறு ஆள மதம - கொள்ளும மதம பாணி - அளவு. காணுநாப பெறின - காணுதற்குரியாரைக கணடால், ஊழவினை யாற காணுதறகுரியாரைக கணடால எனபது கருதது (கள)

## காமம் மாட்சிமைப்படும் வகை

[காதல, ஒருவருககொருவா ஆதரவு செயதுகொள்ளும் இணககத தால நனகு மாட்சிமைபபடுகினறது அவவளாசசியினுல அது பினபு உருவாகிச செயறகருஞ செயலகள் செயதற்கு இயககங கொளகினறது ஆதலாற காதலாதம ஒருமிதத உள்ளமுஞ செயலும மேனமேல மாட்சிமைககு இனறியமையாதன.]

யாவதும அறிகிலா கழறு வோரே;
தாயின் முட்டை போலஉட் கிடநது
சாயி னலலது பிறிதெவ னுடைத்தோ?

யாமைப் பார்ப்பின் அன்ன
காமம் காதலர் கையற விடினே.

—குறுந்தொகை, கஙஉ.

'காமம்' என்பதும் மக்கள் நுகர்தற்குரிய உணர்வுகளுள் ஒன்று. ஆண்மை பெண்மையை நுகர்தலும், பெண்மை ஆண்மையை நுகர்தலுமான இன்ப வுணர்வே, அது. இவ் வுணர்வினால் மக்கள் உள்ளம் ஒன்றினொன்று கலந்து பூரித்து முழுமை யடைகின்றது. இன்றேல் அவரவர் உள்ளம் அரை உள்ளமேயாம். ஆற்றலும் அரையளவேயாம்.

தலைவன் விரைவில் மணந்துகொள்ளவில்லை என்று தலைவி வாடினாள், தோழி, 'தலைவர் திருமண முயற்சிக்காகத்தானே பிரிந்திருக்கிறார்' என்று சிறிது கடிந்துகொண்டாள். அதற்குத் தலைவி,

"கடிந்து கூறுவோர், காமத்தின் இயல்பைச் சிறிதும் அறியாதவராயிருக்கின்றார். காமமோ, தாயின் முகநோக்கி வளரும் ஆமைப் பிள்ளையைப்போலக் காதலர் முகநோக்கி வளருந் தன்மையதா யிருக்கின்றது. காதலர் முதலிற் காமத்தை உண்டுபண்ணிவிட்டுப் பின் இங்ஙனஞ் செயலறும்படி கைவிட்டுவிட்டால், தாய் முதலில் முட்டையை இட்டுவிட்டுப் பின் அடைகாத்தலில்லாத தன்மையைப் போல அக் காமவுணர்வு உள்ளே கிடந்து வீணே அழிவதல்லாமல் வேறு என்ன பயன் உடையது?"

என்று வருந்திக் கூறுகின்றாள். காமத்தின் இயல்பை இப்பாட்டு எவ்வளவு அழகாக விளக்கிக் கூறுகின்றது!

குறிப்புரை —யாவதும் - சிறிதும். கழறுவோர் - இடித்துரைப்போர். சாயின் - கெடின் பிறிது - வேறு, எவன் - என்ன, என்ன பயன்? என்று கொள்ளவேண்டும் பார்ப்பு - இளம்பிள்ளை கைஅற - செயல்அற, துன்பத்தால் செயலற்றுப்போக என்பது பொருள். விடின் - கைவிட்டுவிட்டால், 'விடிற் காமம் என்ன பயன் உடைத்தோ' என்று கூட்டிக்கொள்ளவேண்டும். (௫அ)

## காமவுணர்வின் தன்மை

[காதல், உடலைப பற்றியதன்று, உள்ளுணர்வைப பற்றியது. உடலை நோக்கியதாயின தானுங் கெட்டுத் தன்னையுடையாரையும் அழிக்கும், உணர்வைபபற்றி மென்மையுறுவதாயின், தானும பின்னும் பின்னும் புதுமையாயத் தன்னை யுடையாரையும் புதுமைகொள்ளவைத்து வளாக்கும உணர்வு, வளரவளரப புதுமை செறிந்து நிற்றலே இதற்கு ஏது.]

காமம் காமம என்ப, காமம
அணங்கும பிணியும அன்றே, நினைப்பின்,
முதைச்சுவற் கலித்த முற்றா இளமபுல
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம பெருந்தோ ளோயே.

—குறுந்தொகை, ௨௦௪.

காமவுணர்வின் தன்மை இப்படிப்பட்டதென்பது விளக்கப்படுகின்றது. தலைவன் தலைவியின்பால் இன்பம் நுகர்ந்து, பின் அதன் நலனைப் பாராட்டுகின்றான்

"காமம காமம என்று அதனியல்பைச் சிலர் அறியா மல் இழித்துக் கூறுவர், காமம், வருத்தத்தைச் சேர்ந்தது மன்று, நோயைச் சேர்ந்ததுமன்று, நினைத்துப்பார்த்தால், உலர்ந்துபோன மேட்டு நிலத்தில ஒரு காலத்தில வளர்மாகத் தழைத்த முற்றாத இளம புல்லை ஓர் அறிவுள்ள பசு, அதனை உடனே கறித்துத் தின்று அழித்துவிடாமல மெல்ல நாவினால தடவி அதன் மென்மைக்கு மகிழ்ந்தாற்போல, பெரிய தோளையுடைய தலைவி! காமம், கசக்கி நுகர்ந்து அதற்கு முடிவைத் தேடிக்கொள்வதாயிராமல, அதன் மென்மையை அறிந்து நுகர நுகர, என்றும் அது புதுமையாயிருப்பத் தோன்றும்.

பெண்மை என்னுங் குணத்தை நுகருங் காதற் காமமே நுகர நுகரப் புதுமையா யிருப்பதொன்றென்று அதனியல்பை விளக்கியபடியாம

குறிப்புரை:—அணங்கு - வருத்தம். பிணி - நோய். முதை - உலர்ந்த. சுவல் - இங்கே மேட்டுநிலம். கலித்த - தழைத்த. மூதா - முது ஆ; அறிவுள்ள பசு; அறிவு என்றது, புல்லின் மென்மையை நுகரும் அறிவு. தைவந்தாங்கு - தடவினாற்போல, தைவந்து - தடவினால், ஆங்கு - போல. விருந்து - புதுமையானது. தலைவிக்கு இன்பக் காலங்களில் தோள் பெருத்தலுண்டாதலின், அவளைப் 'பெருந்தோளோயே' என்று தலைவன் அழைத்தான்.— (௫௯)

## காதலின் வழியே மனவொருமை நிகழும்

[காதலின் வளர்ச்சி செயற்கையில் எய்துவது சிறப்பன்று, தலைவியின் உள்ளம், தலைவனது நிறைமையினால் ஈர்ப்புண்டு ஒருமையுறுதல் வேண்டும். பின்பு இணக்கமும் வளர்ச்சியும் இயற்கையாற்றலோடு நிகழும். தலைவன் உள்ளமும் அவ்வாறே ஆயினும் தலைவனது ஆற்றல், ஞாயிற்றின் ஆற்றலையொத்தும் தலைவியின் ஆற்றல் அதன் வழி இயங்கும் நெருஞ்சியின் இணக்கத்தையொத்தும் வன்மை மென்மையுடன் ஒருமையுறுதற்குரியன.]

எழுதரு மதியம் கடற்கண் டாஅங்கு
ஒழுகுவெள் அருவி ஓங்குமலை நாடன்
ஞாயிறு அனையன், தோழி!
நெருஞ்சி அனையஎன் பெரும்பணைத் தோளே.

—குறுந்தொகை, ௩௧௫.

அன்புசென்ற வழியே உள்ளமும் செல்லும். அப்போதுதான் மனவொற்றுமையும் எல்லா நலங்களும் உண்டாகும்.

நெருஞ்சி மலர் சூரியனையே நோக்கி நிற்குமாம். சூரியன் எந்த முகமாகச் செல்கின்றதோ, அந்த முகமாகவே அம் மலரும் திரும்பித் திரும்பி நிற்குமாம். அங்ஙனமே மனைவியுங் கணவன் முகநோக்கி நிற்பவள் என்னும் உண்மை இப் பாட்டில் எடுத்துக் காட்டப்படுகின்றது.

தலைவி, தோழியைப் பார்த்துச் சொல்லுகிறாள்: "தோழீ, எழுகின்ற நிலா கடலினிடத்திற் காணப்பட்டாற்போல ஒழுகுகின்ற வெள்ளிய அருவியையுடைய உயர்ந்த

மலைகள் பொருந்திய மலைநாட்டவரான தலைவர், சூரியனைப் போன்றவர்; என்னுடைய பெரிய மூங்கிலைப் போன்ற தோள்கள் நெருஞ்சிமலர்களைப் போன்றவை!"

உண்மையான அன்பு இல்லாவிட்டால், இத்தனைக் கருத்தொற்றுமையை எதிர்பார்க்க முடியுமா?

குறிப்புரை.—எழுதரு - தோன்றுகின்ற, ஒழுகு - ஓடிவருகின்ற, நிலவு அருவிக்கும், கடல் மலைக்கும் உவமை. ஓங்கு - உயர்ந்த, ஞாயிறு - சூரியன். அனையன - போன்றவன. நெருஞ்சி - நெருஞ்சிமலர்கள் பணை - மூங்கில். (சூ௦)

## காதலின் வலிமை

[காதல், உயிரின் இயல்பு, உயிர் என்றும் அழியாதது, எனவே, காதலுணர்ச்சியும் யாண்டும் நிகழும். உலகம் அழியினும் அழியாத இந் நிலை, உலகத்தில் வேறெதனாலுந் தடைப்பட்டுவிடாதன்றே! அறியாதார் சிலர் கூறும் அலர்மொழி அதனை என்ன செய்ய வல்லும்! மெய்க்காதலர் இதற்கெல்லாம் அஞ்சிவிடுவாரல்லர்.]

நிலம்புடை பெயரினும் நீர்தீப் பிறழினும்
இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை யஞ்சிக்
கேடுள்வன உடைத்தோ? தோழி! நீடுமயிர்க்
கடும்பல ஊகக் கறைவிரல் ஏற்றை
புடைத்தொடுபு உடைஇப் பூநாறு பலவுக்கனி
காந்தளஞ் சிறுகுடிக் கமழும்
ஓங்குமலை நாடனொடு அமைந்தநம் தொடர்பே.

—குறுந்தொகை, ௩௭௩.

உண்மையான காதல் எந்த இடர்க்கும் சலியாதது. "தோழீ, நிலம் அசைவதானாலும், நீரும் தீயும் தாம் நிற்கவேண்டிய அளவில் நில்லாமல் தடுமாறினாலும், கடல் சுவறினாலும், மலைநாடனொடு அமைந்த நம் காதல் தொடர்பு, நிலைகலங்காதது, அப்படியிருக்க, வீண் அலர் மொழிகளுக்குக்

கெடுவதும் உண்டோ?" என்று தலைவி சொல்லுவதாக இப் பாட்டு அமைந்திருக்கின்றது. உண்மையான அன்பின் இயற்கை அவ்வாறுள்ளது.

குறிப்புரை.—புடைபெயரினும் - அசைந்தாலும்; பிறழினும் - மாறுபட்டாலும் இலங்கு திரைப் பெருங்கடல் - விளங்குகின்ற அலையையுடைய பெரிய கடல் எல்லை - முடிவு; இங்கே, கடல் சுவறிப்போவதே முடிவு என்றபடி வெவ்வாய - கொடிய வாயை யுடைய கௌவை - பழிச்சொல் நீடு மயிர் - நீண்ட மயிரையும்; கடு பல் - கூரிய பற்களையும் உடைய, ஊகம் - கருமுகக்குரங்கு. கறை - கறுப்பு, ஏற்றை - ஆண் குரங்கு; அக் கருங்குரங்கு வகை யைச் சேர்ந்த ஆண் குரங்கு, புடை - பக்கம், தொடுப்பு - தோண்டி; உடைஇ - அதனுற பிளந்து, பூ நாறு பலவுக்கனி - பூ மணத்தைப் போல மணக்கின்ற பலாப் பழம்; காந்தள் அம் சிறுகுடி கமழும் - காந்தள் மலர்கள் நிறைந்த சிறுகுடி என்னும் ஊரில் மணக்கும் ஓங்கு - உயர்ந்த குரங்கு உடைத்த பலாப் பழம் சிறுகுடியில் மணக் கும் மலையிடங்களையுடைய நாடன், என்பது (கூக)

## கற்பு காதலின் வழியது

[மகளிர் தவ நிலையினர், அவருடைய கற்பொழுக்கமும் அவ்வொழுக் கத்தால் நிகழும் இல்லறமும் தவநிலையின் அவர், இல்லத்தில் இருத்தல் என்பது தவம் இருத்தலே தமது குடும்ப நலனுக்காக மட்டுமன்று, பெரும்பாலும் உலக நலனுக்காகவே. நாடு பகை யும் பசியுமின்றிச் செழிக்க என நாளும் நினைத்து நோன்பியற்ற வேண்டுவது இல்லறமாதர் கடமை. காதலால் இக் கற்பொழுக் கம் நிகழ்தற்குரியது.]

வாழி யாதன் வாழி யவினி!
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
எனவேட் டோளே யாயே, யாமே
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை யூரன் வரைக
எந்தையுங் கொடுக்க எனவேட் டேமே.

—ஐங்குறுநூறு, க.

காதல் ஒழுக்கம் நிகழ்த்துவோர் எண்ணங்கள் எப்படி எப்படி இருக்கின்றன எனபதை இந்தப் பாட்டுத தெளிவு படுததுகின்றது.

பல நாள் களவில் ஒழுகிவந்த தலைமகன், ஒரு நாள் தலைவியை அவள சுற்றததார கொடுக்க, திருமணம செயது கொண்டான. ஒரு மாலை வேளையில, தலைவி தோழி தலைவன முதலிய எல்லாரும் ஒரு மலர்ச சோலையில அமர்ந்து மகிழ்ச்சியாயப் பேசிக்கொண் டிருநதாாகள தலைமகனுககு ஒரு நினைவு தோன்றியது உடனே அவன தோழியை நோக்கி, "நான விரைவில திருமணஞ செய்து கொளளாமல நாள் நீண்டுவிட்டபோது, உங்கள் மனததில என்னென்ன எண்ணங்கள தோன்றினவோ" என்று கேட்டான். அவள், பின்வருமாறு சொன்னாள.

நம் நாட்டு வேநதனை சேரமான் 'ஆதன் அவினி' என்பவன் வாழி வாழி என்று முதலில சொலலிக்கொண் டாள். அதனபின தலைவனை நோககிச சொலலுகிறாள் :

"முதலில உன்னை எதிர்ப்பட்டபோதே திருமணம் உண்மையாய நிகழநதுவிட்டது; இப்போது நடநத திருமணம் உலகம ஒபப நடநதது. ஆகவே, அம முதல நாளே தலைவி இல்லற ஒழுக்கம உடையவளானாள. மனைவாழககைப பெண்கள என்னென்ன நினைப்பாாகள எனபதுதான் உனககுத தெரியுமே! 'அரசன பகை தணிநது அரசியல் நன்கு நடைபெற்று நாட்டில அமைதியும இனபமும நிலவ வேண்டும் எனவும், இநத ஆண்டில பல வளஙகளும தழைக்கவேண்டும எனவும உருதது எண்ணுவது அவாகள் கடமையன்றோ? தலைவி இஙஙனமே விருமபி நினைதது, அந நாளிலிருநதே இல்லற நோன்பு உடையவளா யிருக்கின்றாள.

"நாங்களெல்லாரும, 'தலைவன், கழனிகள் சூழ்ந்த ஊரை யுடையவன. அக் கழனிகளில் மலாப பொய்கைகள் இருக்கின்றன. அநதப் பொய்கையில் தாமரை அரும்புகள் மலரும நிலைமையில விளஙகுகின்றன. அநதக் குளத்துக்கு

அந்தத் தாமரைப் போது ஓர் அணியாகத் திகழ்கின்றது. தலைவன் அப்படிப்பட்ட குளிர்ச்சியான இடத்தையுடைய வனுயிருப்பதனால், அவன் ஊரில், அப் பொய்கைபோல விளங்கும் அவன் மனையில், தாமரைபோலத் திகழும் நம் தலைவி ஓர் அணிகலனாய் இருந்து ஒளிவிடுமாறு விரைவில் திருமணஞ் செய்துகொள்ளுங் குணம் அவனுக்கு இல்லாமற் போகாது விரைவில் அங்ஙனமே மணம் செய்துகொள்வானாக; எங்கள் தந்தையும் அதற்கிசைந்து தலைவியைக் கொடுப்பானாக என்று விரும்பிக்கொண்டிருந்தோம்.' இவையே எங்கள் நினைப்பு" என்றாள். தோழியின் இச் சொல், தலைமகன் உள்ளத்துக்கு எவ்வளவு பூரிப்பைக் கொடுத்திருக்கும்!

மனைவாழ்க்கைக்குரிய பெண்களின் கடமைகள் இன்ன என்பதும் இப் பாட்டில் நன்கு விளங்குகின்றது.

குறிப்புரை :—'ஆதனவினி' என்பது அரசன் பெயர். நந்துக - தழைக. வேட்டோள் - விரும்பினாள். யாய் என்றது தலைவியை; அவள் அத்துணைக் கற்பொழுக்கம் உடையவளாயிருந்தமையால் இங்ஙனந் தாய் என்னுங் கருத்தாற் சிறப்பிக்கப்பட்டாள் மலர்ந்த பொய்கை - அகன்ற குளம், தலைவனது மனையும் அகன்றது என்பது குறிப்பு முகைந்த - மொட்டுவிடுத்த தலைவி இப்போதுதான் இல்லற வாழ்க்கையைத் தொடங்குகிறாளாதலால், அவளை 'முகைந்த தாமரை' என்னுந் தொடரால் ஆசிரியர் குறிக்க விரும்பினார். அவள் இல்வாழ்க்கை இப்போதுதான் அரும்பெடுக்கின்றது என்பது கருத்து தண் - குளிர்ச்சி; துறை - இடம் என்றது, நீர்த்துறை. வேட்டேமே - விரும்பினேமே, விரும்பினோம். (சுஉ)

## காதலாற் பிணிப்புண்ட உள்ளத்தின் இயல்பு

[உலகத்தில் கடலலையின் இயக்கம் ஓயாதது; வீறு மிக்கதுமாகும். உணர்வில் காதலின் இயக்கமும் அத்தகையது. இயக்கங்களை உண்டாக்கும் மூலமும் காதலே அவ் வியக்கத்தால் உலகம் தோன்றுகின்றது, வளர்கின்றது, நிலைமாறி உயர்கின்றது.]

ஒண்டொடி அரிவை கொண்டனள் நெஞ்சே!
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்கண

உரவுக் கடலொலித் திரையென,
இரவி னானுந் துயிலறி யேனே.

—ஐங்குறுநூறு, கஎஉ.

ஒரு நாள இரவு ஒருமணியாகியும தலைவன உறக்கங் கொள்ளவில்லை. நணபன, "தூககமில்லையே; ஏன்?" என்று கேட்டான்.

தலைவன (சிறிது பொறுதது, நண்பனுக்குதலின் உண்மையைச சொலலுவதே நல்லது என்று நினைதது, பினபு) "நணபா, உனனிடம் சொலலுவதில தடை யொன்று மிலலை; ஒரு நங்கை, ஒளி பொருநதிய வளையலை அணிநதவள், எனது நெஞசததை இடமாகக கொண்டிருக் கிருள"

நண்: "ஓ! அப்படியானல் நெஞசம இனியதாயிறறு; உறக்கம நன்ருய வரும"

தலை: "அதுதானே இலலை."

நண்: "பினனை என்ன செயகிறது?"

தலை. "என்ன செயகிறதா? கொநதளிககிறது ஆம்; வண்டுகள ஒலிககின்ற குளிரநத இத தொண்டி நகரததுத் துறையில கடல அலை எபபடி கொநதளிககின்றதோ, அப் படி கொநதளிக்கினறது."

நண்: "கடலலை எபபடி கொநதளிக்கிறது?

தலை "நீ வேடிககை செய்கிருய, பார்ததாயா? உண்மையில உனக்குத தெரியாதானல, நான் உவமை சொன்னது வீணே."

நண்: "அன்று; கொந்தளிககும இயலபுகளெல்லாம் இப்போது உனக்குததானே நனருயத தெரியும."

தலை: "சரி, எப்படி கொநதளிக்கிறதென்று சொல்லு கிறேன், கேள். கடலலை மேலே எழுகின்றதா?"

நண்: "எழுகின்றது."

தலை: "கீழே விழுகிறதா?"

நண்: "விழுகின்றது"

தலை: "சுருள்கின்றதா?"

நண்: உம்; எல்லாம் நீயே சொல்லிவிடு.

தலை. "சரி; பின்பு, மறுபடியும் எழுகின்றது; ஓங்கி வீசுகின்றது; திரும்பவும் பின்வாங்குகின்றது; உள்ளே செருகுகின்றது; அலைகின்றது, தழும்பு தழும்பாகத் தளும்புகின்றது; சிறிது உலாவுதல்போல அசைகின்றது; திவலை தெறிக்கின்றது, உள்ளேயிருந்து என்னென்னவோ கொண்டுவந்து மேலே எறிகின்றது, 'ஓ' என்னும் இரைச்சல் வேறே; ஒரு நொடியேனும், சும்மா இருக்கின்றதா? இராத்திரியிலாவது உறங்குகின்றதா? இல்லையே?"

நண். "இல்லை."

தலை: "அப்படிதான் எனது நெஞ்சமும் இங்ஙனமெல்லாம் கொந்தளித்தது, இரவினும் நான் துயிலறியாதவனாய் இருக்கிறேன்."

நண்பனுக்கு இப்போது கவலை பிறந்தது.

காதல் வேதனை எப்படியிருக்குமென்பதை இப் பாட்டில் வரும் கடல் அலை உவமை நன்கு விளக்குகின்றது.

குறிப்புரை:—ஒண் - ஒளி; தொடி - வளையல், இமிர் - ஒலிக்கின்ற, பனி - குளிர்ச்சி பொருந்திய, துறை - கடல்துறை, 'தொண்டி' மேற்குக் கடற்கரையிலுள்ள நகரம். ஆங்கண் - அவ்விடத்தில். 'துறைத்தொண்டி யாங்கண்' - துறையையுடைய தொண்டியென்னும் நகரத்திடத்தில்; அதாவது, தொண்டியென்னும் நகரத்திலுள்ள கடற்றுறையிடத்தில் என்பது. உரவு - உலாவுதலையுடைய; அலை உலாவுதலையுடைய கடல் என்று கொள்ளவேண்டும். அந்தக் கடலின் ஒலியையுடைய திரையைப்போல என்று மேலே தொடர்ந்துகொள்ளவேண்டும். திரை - அலை; என-போல. இரவினானும் - இரவிலும். துயில் அறியேன் - தூக்கம் அறியேன்.

## கணவன் நட்புக் கடலினும் பெரிது

[நிலவுருண்டை முழுவதிலும் கடலே பெரிய பொருள்; உலகத்தின் வளர்ச்சிக்கெல்லாம் கடல் நீரே காரணம். அத்தகைய பெரிய காரணமே வாழ்வின் வளர்ச்சிக்கு மூலமாகிய காதல் தலைவி யொருத்தி இவ்வுண்மையை அறிந்துகொண்டு இதனில் இயைந்து உருகி மாட்சிமைப்படுதல் இச்செய்யுளில் வருகின்றது.]

நெய்தல் இருங்கழி நெய்தல் நீக்கி
மீனுண் குருகிளங் கானல் அலக்கும்
கடலணிந் தன்றவர் ஊரே
கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே.

—ஐங்குறுநூறு, க௮௪.

ஒரு நாள், தலைவி தன் இல்லத்தில் வருத்தத்தோடு இருந்தாள். தலைவன் அவளைப் பிரிந்து நெடுநாள் ஆயின.

தோழி அவளருகில் வந்து, “அம்மா, தலைவர் எப்படியும் வரக்கூடியவர். போன வேலை முடிந்ததும் ஒருநொடி கூட அங்கே தங்கமாட்டார், அது தெரிந்திருந்தும் நீ ஏனோ இப்படி வருந்துகிறாய்?” என்று சொன்னாள்.

அதற்கு அவள், “தோழீ, நான் என்ன செய்வேன்? அவர் அவ்வளவு அன்புடன் இருப்பதனாலேதான், அவரைச் சிறிதும் பிரிந்திருக்கமுடியாமல் தவிக்கிறேன். அவருடைய நட்பு எனக்கு இக் கடலைவிடப் பெரிதா யிருக்கின்றது. ஆனால் அவர்மட்டும் எப்படியோ இன்பமாயப் பிரிந்திருக்கிறார் அவரும் கொக்குகளும் ஒன்று” என்று சொல்லிப் பெருமூச்சு விட்டாள்.

தோழி: “அதென்னம்மா, அவரெப்படி கொக்கு?”

தலைவி: “நீ கொக்கை உற்றுப் பார். கழிகளில் நெய்தல் மலரினிடையில் அது வாழ்ந்திருக்கும். சிலவேளைகளில் கழியின் பக்கத்திலிருக்கும் கானற் சோலைக்குப் பறந்து போய் அங்கே மகிழ்ச்சியாய்த் தங்கிவிடுகின்றது.

தலைவரும அப்படித்தான், கொக்குக்கு எங்கே மீன் கிடைககு மென்பதே கருதது. அதனை நோக்குமபொருட்டு அஙகே போயத தங்கிவிடும. தலைவாககும பொருளே நோக்கம. என் மனம இங்கே கடலலைபோல அலைந்து கொண்டிருககவேணடியதுதான. இநதக் கடறகரையூர் அவா செயலுக்கு மிகவும பொருநதி யிருக்கிறது."

இவாகள, இப்படிப் பேசிககொணடிருக்குமபோதே, தலைமகன அஙகே பேராாவமாய வரக கண்டாாகள.

குறிப்புரை :—நெயதல இரு கழி நெயதல் நீககி - நெயதல் நிலததிலுளள கரிய கழியிடதது நெயதலமலரை நீககி. மீன உண குருகு - மீனை உணணுங கொககு; இளம கானல அலகும - அருகில கடறகரையில உளள இளஞ்சோலையிற பறநதுசென்று தஙகிவிடுகின்ற, கடல அணிநதன்று அவா ஊா - அததகைய கடல் கரையை அணிநததது அவா ஊா கடலினும பெரிது எமககு அவருடைய நடபு. நெயதல நிலம - கடறகரையைச சோநத நிலம. இரு - கரிய குருகு - கொககு கானல - கடறகரைச சோலை. அலகும - தஙகும. அணிநதன்று - அணிநதது; சூழநதது என்னுங கருததுடையது (கூச)

## அன்புடையார் பிரிதலின துன்பம்

[காதலுணாவு, மிகவும அழுததம வாயநதது, ஆழநதது. அததனை ஆழநத அழுதத உணாவாக அது திகழதலால, உயிரின மிக நுணணிய இயலபுகளையும ஒளி விளஙகச செயயவல்லது. அதனுல, மேலழுகுமாறி, உருககததுனபமூந தருமாயினும நோனபு வடிவினை உணடாககும இயலபுடையது. இதன பயன நனமையே ]

சிலம்பின வெதிரத்துக கண்விடு கழைககோல
குரங்கின் வனபறழ பாய்நதென இலஞ்சி
மீனெறி தூணடிலின் நிவககும நாடன்
உற்றோர் மறவா நோய்தநது
கண்டோர் தணடா நலங்கொண் டனனே.

—ஐங்குறுநூறு, உளஅ.

"நனமை செயயாவிட்டாலும தீமையாவது செயயா திருக்கவேணடும என்று பலரும சொலவாாகள. தலை வரோ நமககுத தீமையுஞ செயது நமமிடமுளள நனமை யையும வாஙகிககொளகினறுா" எனறுள தலைவி.

"எபபடி?" எனறுள தோழி.

"அவரைக காதலிதத நமககு, நம உறறேுரும மறக்கக் கூடாதபடி அவவளவு மிகுதியான பிரிவுத துன்பந தநது, காணபோா எளிதில பணம அமையககூடாத அவ வளவு சிறநத நமது அழகையும வாஙகிககொணடாரே" என்று தலைவி அதனை விளககினுள்.

தோழி, "ஆமாம, அவா அப்படிதான இருககிறுா. அவா நாட்டில மூஙகில மரததின கிளைகளில குரஙகின குட்டிகள பாயநதுபோகுமபோது அக கிளைகள மீன் பிடிககுந தூணடிலகளபோல வளைநது வளைநது நிமிாகின றன. நம் தலைவா அனபும அநதக் குரஙகும ஒன்று. தமதுளளததில அனபிருககுமபோது நமமிடம வளைநது வளைநது வருகிறுா. அபபுறம நிமிர்ந்து கொடுமை செய கிறுா அவா நாட்டின மூஙகிறகோலைப்போலவே அவா உளளமும இருககினறது" என்று தலைவியோடு ஒததுப பேசினுள

தலைவன மறைவில வநதிருககிறுன எனபது இவா களுககுத தெரியும. விரைவில மணநதுகொளளவேணடும என்று தலைவனுககு எணணம உணடாகினறது.

குறிபபுரை :—சிலமபு - மலை; வெதிரம - மூஙகில், கணை விடு- கணுககள் விடுகினற; கழைககோல - மூஙகிறகோல வனபறழ - வலிய குட்டி, பாயநதென - பாயநதெனறு இலஞ்சி - கேணி யில, மீன எறி தூணடிலின - மீன பிடிககும தூணடிலைபபோல, எறி - பிடிததுக கொல்லுதல, நிவககும - நிமிரும நோய - துன பம. தணடா - அமையாத, நலம - அழகு (௬௫)

## காதலிப்பது குணத்தையே

[உலகம துனப வணணமானது எனபார், குணஙகளைக காதலிப் பாாககு அதுவே இனப வணணமானது எனபதையும அறிதல் வேணடும பொருடபறறுவிடடுக குணபபறறுக கொளளு தலே காதல எனபது அப பேறுபெறற தலைவன சொல இசசெயயுட குறள]

உளளுதற கினிய மனற, செலவா
யானை பிணிதத பொனபுனை கயிறறின
ஒளளெரி மேயநத சுரததிடை
உளளம வாஙகத தநததின குணனே.

—ஐஙகுறுநூறு, ௩௫௬.

இநதப பாட்டினால, ஒரு சிறநத கருததுத தெளியப படுகினறது.

ஆடவாகள் வெ்ளியில உழனறு முயறசி செயவதறகு உரியவாகள. பெண்கள இலலில இருநது இனிமை செய வதறகு உரியவாகள.

ஆடவாகளுககு முயறசியினால உண்டாகுந துனபஙக ளெலலாம, பெணகளின இனிமைத திறஙகளினாலேதான தணிதல வேணடும.

தலைவன தன வினை முடிபபதறகாக வெளி நாட்டுககுச சென்றுன. கொடிய வெயிறகாலம, வழி மிகவுங கொடுமை யாயிருககிறது. கானல பொறுககக கூடியதாக இலலை; வழியிடமெலலாம, தீ, மேயவதுபோலத தோறறுகினறது; அவவளவு வெயில அத தீ மினுமினுவெனறு மினனு கினறது. செலவாகளுடைய யானை பொனனுற செயயப பட்ட பொறகயிறறுற கட்டபபடும, யானை அசையும போது அப பொறகயிறு மினனுவதுபோல அக கானல தீ மினனுகிறது எனறு சொலலலாம.

அபபடிபபட்ட கடுமையான காட்டு வழியில தலைவன் முயறசியினமேற செல்லும்போது எவவளவு துனபமாக இருக்கும்!

அவ்வளவு துன்பததையும் அந நேரததில் தணியச் செய்வது அவனுக்கு ஒன்று உண்டு. அவன தலைவியினது அருமையான பெண்மைக் குணமே அது.

வினை முடிநது வநதபின் அவவியல்பினை மிக்க மகிழச்சி யோடு அவன தன் தலைவிக்குச சொல்கின்றான்' "என் உள்ளங கவருமபடி நீ தநத உனது அருமையான குணமே அநநேரததில், நினைபபதற கினிமையாயிருநதது. இது திண் ணம. அதனால அவ வழிததுன்பமே எனககுத தெரிய விலலை"

பெணமையினிமை ஆண் மக்களுக்கு எவவளவு ஆறு தல தருகினறது!

ஆண்மககள பெண்மக்களிடம் காதலிபபதெனபது அவாகள குணததையே என்றுஞ் சிறநத கருததும இதனால பெறபபடுகின்றமை எவவளவோ மேனமையாயிருககிறது.

குறிபபுரை —உள்ளுதறகு - நினைபபதறகு, மனற - இது திண ணம எனனும தெளிவுககருததுத தநதது. பிணிதத - கட்டிய. எரி - தீ, ஒள எரி - விளககமான தீ. சுரம - வழிநிலம். வாஙக - கவர (௬௬)

## அனபின வெளிப்பாடு

[பாவனை எனபது உரமேறிய நினைவின ஆறறலாகும வாழ்ககையில இயறகையாகவே இநத ஆறறலை விளைபபது காதல அபபோது தான சுவை எனபதும அருமபுகினறது பாாககும பொருளெல் லாம தன நினைவின வணணமாகத தோனறி இனபம மிகும. வேறறுமையறற, பொருள தோறறம அறற. வீண் நிலைகள் அறற அனபின வெளிபபாடே அது]

நின்னே போலும மஞ்ஞை ஆலநின்
நன்னுதல நாறும முலலை மலர
நினனே போல மாமருணடு நோகக
நின்னே உள்ளி வநதனென்,
நன்னுத லரிவை! காரினும விரைநதே.

—ஐஙகுறுநூறு, ௪௯௨.

மணமக்களுக்குள் உண்மையான அன்பில்லாவிட்டால் அவர்கள் வாழ்க்கையில் சுவை யென்பதே இல்லை. அன்பிருந்தால் எல்லா வகைகளிலும் சுவையுண்டு. காதலும் நல்லொழுக்கமும் உடையோரது வாழ்க்கைக்கு ஒப்புமையாகக் கூறக்கூடியது உலகத்தில் ஒன்றுமே இல்லை.

அன்பின் மனைவியைப் பிரியமுடியாமற் பிரிந்து ஏதோ அலுவல் காரணமாகக் கணவன் வெளியூர்களுக்குப் போயிருந்தான். இரண்டொரு திங்கள் கழிந்தபின், தன் முயற்சிகளை வெற்றியுடன் நிறைவேற்றிக்கொண்டு ஊர் திரும்பினன். இடையிடையே அவன் உள்ளம், தன் மனைவியின் சாயல் சிறப்பு பெண்மை முதலிய நல்லியல்புகளில் ஈடுபட்டுக் குழைந்துகொண்டுதான் இருந்தது. வழியில் திரும்பிவரும்போதும் எல்லாம் அவனுக்குத் தன் மனைவியின் தோற்றமாகவே தோன்றின. அவள் அவன் கண்களிலேயே அசைந்துகொண்டிருந்தாள்.

வீட்டுக்கு வந்தபின், ஓர் அமைதியான நேரத்தில், காதல்வெள்ளங் கரைபுரண்டோடுங் கருவிழிகளுடன் சிறிது ஊடற் குறிப்புக் கொண்டு ஒருபுறம் ஒதுங்கி நின்றுகொண்டிருந்த தன் மனைவியை அருகழைத்து அணைத்துக்கொண்டு,

" அழகிய நெற்றியையுடைய காதலீ! நான் வந்த வழியில், உன் சாயலையே ஒத்த மயில்கள் அங்கங்கும் நடமாட, உனது நல்ல நெற்றியையே ஒத்து நறுமணங் கமழ்கின்ற முல்லைகள் அங்கங்கும் மலர்ந்து தோன்ற, உன் பார்வையையே ஒப்ப மான்கள் எங்கும் மருண்டு மருண்டு பார்க்க, மேகத்திலும் விரைவாக, உன்னையே நினைவுகூர்ந்து வந்தேன் " என்று தனது காதல் வெள்ளமுங் கரைபுரண்டோடுங் குளிர்ந்த வீர விழிகளுடன் ஆர்மையாகச் சொன்னனை.

இந்த அமுத மொழிகளைக் கேட்டபின்னும், காதலியின் 'நாண' என்னுங் கரை உடையாமல் எதிர்நிற்குமோ?'

மயில் ஆடும்போதும், முல்லை மணக்கும்போதும், மான் மருளும்போதும் அவை உன் சாயலையும் சிறப்பையும்

பெண்மையையுமே நினைவுகூர்விக்க, அதனுல் மேலுமேலும உள்ளம துரபபுண்டு மேகததிலும விரைவாக வநதேன, என கண்களிலேயே நீ அசைநதுகொண் டிருபபதனறு ருனே அவையெலலாம எனககு உனனைபபோலவே தோற றின' என்று அவன தன காதலிககு விளகக விருமபினுன எனபது தெரிகினறது. அவவளவு ஆராமைககும இனபத துககும அம மணமககளின உணமைக காதலனறே காரணம!

குறிபபுரை—நினனே - உனனையே, இஙகே, உனசாயலையே எனபது கருதது 'நினனேபோல மா மருணடுநோகக' என்னு மிடததிலும, 'நினனே' எனபதறகு 'நின பாரவையையே' என்று உரைததுககொள்ள வேணடும ஆல - ஆட, நுதல - நெறறி, மகளிர நெறறி மணங கமழுமாதலின, அந நெறறியைபபோல மணங கமழ கினற முலலை எனபபடடது நாறும - மணககும மருணடு - மருடசி கொணடு, உளளி - நினைதது மனைவி தலை குனிநதுகொணடு நினற போது அவள நெறறி முனவநது தோனறுதலால அந நெறறியைக குறிதது 'நனனுதல அரிவை' என்று, கணவன அவளை அழைத தான உயாநத மகளிரினததைச சோநதவள எனபதறகாக, நெறறி 'நல நெறறி' எனபபடடது அரிவை - பொதுவாகப பெண என னுங கருததில வநதது கார - மேகம (கஎ)

## காதலின இயறகை

[உள்ளததை அகம எனபா. அது வெளிபபடடுப பிறிதோரகததிற சென்று தோயதறகுரிய வாயில கண ஆகவே, கணகள் ஒறறு மைப படுதல அகஙகளின ஒறறுமையைப புலபபடுததும ஏனைய உடமபின செயலகளையும, பொருள்களின செயலகளையும, சுறறஙகளின செயலகளையும அவ வொறறுமையுடையோர மறபபா, தமமையும மறபபா காதலுணாவின விளையாடல இது.]

தணடு தழுவாத தாவுநீர் வையையுள,
கணட பொழுதில, கடுமபுனல கைவாஙக
நெஞசம அவளவாஙக நீடு புணைவாஙக
நேரிழை நின்றுழிக கண்நிறப, நீர்அவன்

தாழ்வுழி உய்யாது தான்வேண்டு மாறுஉய்ப்ப,
ஆயத் துடனமில்லாள் ஆங்குஅனை பின்தொடரூஉத்
தாய்அத் திறமறியாள் தாங்கித "தனிச்சேறல்
ஆயத்தில் கூடு" என்று அறற்றெடுப்பத் தாக்கிறதே,
சேயுற்ற கார்நீர் வரவு

—பரிபாடல், கக க௦கூ-கச.

வையை யாற்றில் மழை பெய்து வெள்ளம் வந்தது. எல்லாரும் புதுப் புனல் ஆடப் போனார்கள்.

ஆற்றில் ஒரு வாழைமரத்தின் அடித்துண்டு அடித்துக் கொண்டு வந்தது. ஒருவன் அதனைப் புணையாகத் தழுவி நீந்தி விளையாடிக்கொண்டிருந்தான். அவன் தற்செயலாய் அங்கே ஒருத்தியைக் காண நேர்ந்தது. அவள் இவன் நெஞ்சத்தைக் கவர்ந்துகொண்டாள்.

நெஞ்சம் அவள் பக்கம் செல்லவே, இவன் கைகள் வெள்ளம் போகும் வழியே சோர்ந்தன. புணையும் இவனை நெடுக இழுத்தது. இவன் கண்கள் அவளிடத்திலேயே நிலைபெற்றுவிட்டன.

ஆற்று நீர், இவன் விரும்பின அவளிடத்தில் இவனைக் கொண்டு செல்லாமல், தான் செல்லும் போக்கில் இழுத்துச் சென்றது.

இருவர் உள்ளமுங் கண்களும் அசைக்க முடியாதபடி பிணித்துக்கொண்டமையால், இவனை நீர் இழுக்க இழுக்க அவளும் தன் ஆயமகளிரினின்றும் நீங்கித் தனியாய், தன்னை யறியாமலே, அவனைத் தொடர்ந்துகொண்டிருந்தாள்.

ஆனால் அவள் தாய்க்கு இதன் காரணம் ஒன்றுந் தெரியவில்லை. தன் மகளின் பிணித்த அன்புடைமையை அறியவில்லை. ஆகவே, அவளைத் தாங்குகின்றவள்போல, "அங்கே தனியாகப் போகாதே; தோழியரோடு வந்து சேர்ந்து கொள்" என்று கூவுகின்றாள்.

இதனால், அவள் "நாம எங்கிருக்கிறோம்; என்ன செயகிறோம" என்பதொன்றுந தெரியாமல 'ஓ'வென்று அரற்றினாள்.

இப்படி அரற்றும்படி வையை யாற்றில காா காலத்து நீா வரவு செந்நிறம பூண்டு இரு பக்கக கரைகளையுந தாக்கி வந்தது.

காதலின இயலபு இப்படிப்பட்டதெனபது இப்பாட்டில இனிது விளக்கப்படுகின்றது.

குறிப்புரை —தழுவா - தழுவி. கடு புனல் - மிகக புனல. தாழ்வுழி - விருமபின இடத்தில. தொடரூஉ - தொடா. சேறல - செலலாதே, சே - செந்நிறம. காாநீா - மழைநீா. (சுஅ)

## காதலன் துன்பத்தில் காதலியும் பங்குகொள்ளல்

[காதலுணாவு, உதவியுள்ளத்தை எழுப்புகின்றது. தலைவிக்குத் தலைவன நலத்திலும தலைவற்குத் தலைவன வளத்திலுமே கருத்துணடாகின்றது. தலைவன பொருள் தேடுதல முதலிய கடமைகளைச செயயுங்காலங்களில அவன இன்னலுறுமைக்குரிய உதவிகளைச செயயவே தலைவி விருமபுகிறாள். அறவோாக்களித்தல முதலிய தலைவியின அன்பின செயலகளுக்குத் தலைவன பொருள் தேடியுதவும வகையில துணை நிற்க முயலகின்றான. இருவருள்ளமும நிழலாடும தெளிநிலைப பளிங்கே இச்செய்யுள்]

மரையா மரலகவர மாரி வறப்ப,
வரையோங்கு அருஞ்சுரத்து ஆரிடைச் செல்வோர்
சுரையமபு மூழ்கச் சுருங்கிப் புரையோாதம
உள்நீர் வறப்பப, புலா்வாடு நாவிற்குத
தணணீர் பெறாஅத தடுமாற றருந்துயரம
கணணீா் நனைக்கும கடுமைய காடென்றால,
என்னீா அறியாதீர் போல இவைகூறின
நின்னீர அலல நெடுந்தகாய்! எமமையும்
அன்புஅறச சூழாதே ஆற்றிடை நுமமொடு
துன்பம துணையாக நாடின அதுவலலது
இன்பமும உண்டோ எமக்கு.

—கலித்தொகை, சு.

கானமெங்கும மலைகள் உயரமாயக் காணப்படுகின் றன. வழிகள் குறுக்கும நெடுககுமாயக் கடப்பதறகு அருமையா யிருக்கின்றன.

கொடிய வெயில காலம். அங்கே மழையே இல்லை. தரையிலிருநத புலலெலலாம உலாநதுவிட்டன. பசுமபுல தலை காணபது அரிதாயவிட்டது.

அநதக கானததில 'மரை' எனனும ஒரு வகை விலஙகுகள உணவிலலாமல அஙகுமிஙகும திகைபபுடன ஓடுகினறன. அவைகளின பாாவைக்கு 'மரல' எனனும ஒருவகைச் செடிகள காணபபடுகினறன. அவை, அவை களுககுப பொருநதிய உணவலல, வேறு வழியில்லா மல, அநத எளிய விலஙகுகள அச செடிகளையே கடிதது இழுககினறன

இஙஙனம எளிய விலஙகுகளுக்கே அநதக கானததில உணவில்லையெனறால, அஙகே இருககும மனிதாகளுககு எபபடி உணவு அகபபடும? அவாகள அநத வழிகளில வரும அயலூராாமேல அமபு எயது அவாகள கொணடு போகும பொருளகளைக கொள்ளையடிதது உயிாவாழ கிறாாகள்.

ஆ! அபபடி அமபு தைதது உடல சுருஙகி விழுநதவா களுக்கு அஙகே ஒரு சொடடுத தண்ணீாகூட அகபபட விலலை. அவாகள் உடமபின உளளே யிருநத நீாகூட வறறிவிடுகிறது. அதனால், நாககும உலாநது வாடுகிறது.

தண்ணீா கிடைககாத வருதததால அவாகள் கண கள கலங்குகினறன. வறடசியின கொடுமையால, கண ணீாகூட மிகுதியாகப பெருக வழியிலலை ஒனறிரணடு சொட்டுகள சிநதுகினறன. அந்த நீர்த துளிகளே அவா கள நாககில தறசெயலாகப பட்டு அதனை நனைககினறன. அதுதான் அநதக காட்டில நீா வேட்கை தணிவதறகு வழி. வேறு வழியில்லை.

அப்படிபபட்ட கடுமையான காடுதான தலைவன

பொருள் தேடுவதற்காகப் போக விரும்பிய காரணம். தலை விக்கு இது தெரிந்தது.

அவள் திடுக்கிட்டாள்; கலக்கத்தால் உள்ளம் குழம்பியது. தனது பிரிவுத் துன்பம் ஒரு பக்கம் மிருக்க, தலைவன் அக் கானகத்தில் அடைய நேரும் துன்பம், அவளுக்குப் பொறுக்க முடியவில்லை. பெருமூச்சு விட்டாள்.

"ஆ, அப்படிப்பட்ட கடுமையான காடு!" என்று அவள் வாயிலிருந்து ஒரு சொல் அவளை அறியாமலே எழுந்தது. தலைவனை நோக்கினாள்.

"அப்படியானால், நீங்கள் எனது தன்மையை அறியாதவர்கள்போல் இப் பிரிவு மொழிகளைப் பேசுகிறீர்கள். தங்களைப் பிரிந்து எனது உயிர் இந்த உடலில் நிலைத்திருக்குமா? பெருந்தகையே, நீங்கள் இப்படிச் சொல்லுவது உங்கள் நலவியல்புகளுக்குப் பொருந்துமா? உங்கள் உள்ளத்தில் அன்பு அறும்படி இவ்வாறெல்லாம் எண்ண வேண்டாம்" என்று சொன்னாள். கலக்கத்தால் மேலும் பேசக்கூடவில்லை.

பின்பு, சிறிது நேரங் கழித்து, ஏதோ துணிந்தவளாய், தலைவனை அணுகினாள்

"தாங்கள் கட்டாயம் போக வேண்டுமா?"

"அன்பே, பொருளுக்கு வேறே என்ன செய்வது?"

"அப்படியானால், தங்கள் துன்பத்திற்குத் துணையாக நானும் உடன் வரும்படி நினையுங்கள்; அதுவல்லாமல் எனக்கு வேறு இன்பமில்லை!" என்று முடிவாகச் சொன்னாள்.

காதலர் அன்பு எந்தத் துன்பத்திற்கும் அஞ்சாது.

இந்த உள்ளநிலை இப் பாட்டில் மிகவுஞ் சுவையாகக் காட்டப்படுகின்றது.

குறிப்புரை :—மரையா, மரை ஆ, அதாவது, மரை என்னும் ஓர் ஆன் இனம், மால் - ஒருவகைக் கற்றாழை என்பர். வரை -

மலை; ஆர் இடை - அரிய வழி, சுரை அம்பு - மூட்டுள்ள அம்பு; புரையோர் - இங்கே, பொருந்தல் அறிவு உடையவர்கள், அதாவது தாழ்ந்தவர்கள் என்னும் கருத்தில் வந்தது 'புரையோர்தம் சுரை யம்பு' என்று சேர்த்துக்கொள்ள வேண்டும் என் நீர் - என் இயல்பு; அதாவது, கணவனைப் பிரிந்து உயிர்தரியாத இயல்பு நெடுந்தகாய - பெருந்தகைமையுள்ளவனே! சூழாது - எண்ணுமல், ஆறிடை - வழியில், நாடின - இங்கே மனங்கொண்டால் என்பது தற்கு வந்தது (சுக)

## உயிர் ஒன்று உடல் இரண்டு

[வேற்றுமை நினைவு உள்ளவரையிற் காதல் உணர்வு நிறைவெய்திய தாகாது, இயற்கைக் காதலுமாகாது. நிறைவெய்திய பொருந்திய காதலானுல், காதலர் இருவரும் தம்மை ஒருயிரின் இரு வடிவமெனவே கருதுவர் களவொழுக்க நிகழ்ச்சியை விரைவிற் கற்பொழுக்க நிகழ்ச்சியாக அமைத்துக்கொள்ளும் பொருட்டு மணங்கூடுவர்]

யாயே கண்ணினும் கடுங்கா தலளே,
எந்தையும் நிலனுறப் பொருஅன், 'சீறடி சிவப்ப
எவன் இல! குறுமகள் இயங்குதி' என்னும்,
யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே;
ஏனல் காவலர் ஆனுது ஆர்த்தொறும்
கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை
விழுக்கோள் பலவின் பழுப்பயம் கொண்மார்
குறவர் ஊன்றிய குரம்பைப் புதைய
வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்
மழைபடு சிலம்பில் கழைபடப் பெயரும்
நலவரை நாட! நீவரின்,
மெல்லிய லோரும் தான்வா ழலளே.

—அகநானூறு, கஉ.

ஒரு மலைநாடு; அங்கே, மழைமேகங்கள் உருவாகத்

தகக உயாங்க மலைகள இருநதன; தலைவன் அந நாட்டைச் சோநதவன அம மலைகளில பலா, வேஙகை, மூங்கில முதலான மரஙகள வளாநதிருநதன. தினைபபுனங்களும் உணடு காவலிருபபோா அடிககடி ஓசைசெயது பறவை முதலியவறறை ஓட்டுவாாகள. இவ வோசையை, அஙகே பலா மரஙகளிலிருநத கிளிகள அடிககடி கேட்டுப பழகிக கொண்டமையால, அக கிளிகளும அவாகளைபபோலவே ஓசையிட்டுககொணடிருககும.

பலாப பழஙகளின பலனைக கொளவதறகாகக குறவாகள அம மலைப பககததிற சிறு சிறு குடிலகள அமைததுக கொண்டிருபபதுண்டு. பககததிலுளள வேஙகை மரஙகள அக குடிலகள மறையுமபடி தாழநது தேனபாககும தோற றததுடன தழைததிருநதன

குடிலைத தழுவித தழைததிருநத இவ வேங்கை மரத தின தோறறததைக கணடு அதனைப புலியெனறு கருதி அஞசிய யானை, மூஙகிற செடிகள தன காலின்கீழப பட்டு அழியுமபடி விரைநது நீஙகுகினறன.

இததகைய மலைகளையுடைய நாடனே! எனறு தலைவனைத தோழி அழைததது,

"நீ இரவு நேரஙகளில இப பககஙகளில வருவ தானல், மெலலிய இயறகையுடையவளான தலைவி உயிா வாழமாட்டாளே, எனன செயயலாம?

"இவள தாயோ இவளைத தன கண்ணைவிட, மிகக அன்புபாராட்டிப பாதுகாததது வருகினறாள. தநதையோ, இவள் சிறிய அடிகள, சிவநதுவிடுமெனறு கருதி அவை சறறுத தரையிற படுதலையும பொருதவனாய, 'ஏடி சிறுமி! எங்கே எனன செயயப போகினறாய' எனறு கேட்கி றான. இவவளவு பாதுகாவலில தலைவி இருக்கிறாள. தலை வியோ, பிரிதலியலாத முறையிற கூடிய, வெறுததலில்லா கட்புடையவளாய இரண்டு தலைகளையும ஒருடமபினையும உடைய பறவையைபபோல நின்னேடு ஓருயிராய இருக்

கின்றுள்; நீதான், இதற்கு ஏதேனும் வழிசெய்யவேண்டும்" என்று சொல்லுகின்றுள்.

யானை, வேங்கை மூடிய குடிலைப் புலியென்று கருதி அஞ்சித் தனக்கு உண்பொருளான மூங்கிலையுங் காலின்கீழ் அமுக்கி அழித்துச் செல்வதுபோல, நீயும் எம் உறவினர்க்கு அஞ்சி நினக்கு நுகர்பொருளா யிருக்குந் தலைவியையும் மடித்து ஒழுகுகின்றனை, அங்ஙனம் அஞ்சி யொழுகாமல், தமரை அணுகி வரைவுக்கு முயற்சி செய்தால் எல்லா இன்னல்களுந் தீரும் என்பது இவற்றின் கருத்து.

குறிப்புரை :—யாய் - தாய், கடு - மிக்க, காதலர் - அன்பினர், இல - ஏடீ, குறுமகள் - சிறுமியே, எவன் இயங்குதி - என்செய்யப் போகின்றாய் என்று கொள்ளவேண்டும் எனனும் - என்று கேட்பான். துவரா - வெறுத்த லில்லாத ஏனல் - தினைப் புனம், அம - சாரியை; பொருளில்லை ஆணுது - அமையாமல், அடிக்கடி என்பது கருத்து ஆர்த்து - ஆரவாரமாய் ஒலிசெய்து. விளி - ஓசை, பயிற்றும் - பழகிக்கொள்ளும் வெளில் - அணில் ஆடு - விளையாடுகின்ற, சினை - கிளை விழு கோள் - நல்ல காய்; பழு - பழம். பயம் - பயன், பழுப் பயம் - பழத்தின் பயன், பெரிய கிளைகளையும் நல்ல காய்களையும் உடைய பலாமரம் என்பது. கொண்மார் - கொள்ளும்பொருட்டு ஊன்றிய - நாட்டிய. புதைய - மறைய. தாய் - பரந்த, தேம் - தேன் பாய் - பாய்கும் செத்து - கருதி புலி செத்து - புலியென்று கருதி வெரீஇய - அஞ்சிய புகர் - புள்ளி, புகர் முக வேழம் - புள்ளிகள் பொருந்திய முகத்தையுடைய வேழம் மழை - மேகம், படு - தோன்றுகின்ற, சிலம்பில் - மலையில். கழை - மூங்கில், பட - பட்டு அழிய பெயரும் - நீங்கும் நல் வரை - உயர்ந்த மலை, மெல்லியலோரும் என்பதில் ஓரும் அசை (எ0)

## காதலின் பிணிப்பு

[காதலர் எஞ்ஞான்றும் ஒருவரையொருவர் பிரியாதிருக்கவே விரும்புவர் முயற்சி காரணமாகப் பிரிய நேரினும் அவரோடு கருத்தொற்றுமை இருத்தலின் அப் பிரிவுக்காலத்தில் உயிர் பொறுத்திருக்கின்றது. அக் கருத்திணக்கம் அறுபடுமாயின் மெய்க்காதலர் உயிரும் உடனே அறுபடும் அத்தகையோர்க்கு வாழ்தலே காதல், சாதலே பிரிவு]

ஆளவினைக கெழுநத அசைவில உளளதது
ஆணமை வாஙகக காமம தட்பக
கவைபடு நெஞசம கட்கண அகைய
இருதலைக கொளளி இடைநினறு வருநதி
ஒருதலைப படாஅ உறவி போனறனம,
நோஙகொல அளியள தானே யாககைககு
உயிரஇயைந தனன நட்பின அவவுயிர்
வாழத லனன காதல
சாத லனன பிரிவரி யோளே.

—அகநானூறு, ஙஙக.

மணமககளின வாழக்கைப் பிணிப்புககு இப் பாட்டில் ஒரு நலல உவமம வருகினறது.

தலைவன தலைவியரது நட்பு உயிருருவியது; வெறும் மனவெழுச்சியன்று. நினைததாற கூடுவதும நினைததாற பிரிவதும போனறதன்று பிரிவு எனபது, அவாகளுக்கு இறநதுபோவது ஒனறேதான. அபபடியே, உடலோடு வாழுங காலம முழுமையும அவாகளுக்குக கூடுதலேயாம.

முயறசி காரணமாக அவாகள ஏதேனும சிலகாலம் பிரிநதிருகக நோநதால, அநதப பிரிவும, உடலி லிருநது உயிா நீஙகுவதுபோல அவாகளுககுத தோனறும, மீணடுஞ சோநதிருககும்போது, உயிா உடமபில வநது வாழவது போலத தோனறும அவாகள நட்பு, உடமபில உயிா பொருநதியிருபபது போனற நட்பு

தலைவன தனனை உடலாகவும தலைவியை உயிராகவும கருதுவான தலைவி தனனை உடலாகவும தலைவனை உயி ராகவுங கருதுவாள. அலலது இருவருடமபையும ஒருடம பாகவும், அதனுள இருவருயிரையும ஒருயிராகவுங கருதி வாழவா. உணமையில உணாசசியே அபபடிதான இருககும.

இததகைய தலைவன தலைவியருள, முயறசி காரணமா

ந்த தலைவன் சில காலம் பிரிந்திருக்கும் நேரம் வந்தது; தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லுகின்றான்:

“முயற்சியின்பொருட்டு எழுந்த அசைவில்லாத ஊக்கத்தினால் ஆண்மைத் தன்மை நம்மைத் தலைவியினின்றும் பிரித்திழுக்கின்றது. ஆனால், ஆருயிரனைய தலைவியின் அன்போ அதனைத் தடுக்கின்றது. இதனால் பிளவுபட்ட நெஞ்சக்குறிப்பு நம் கண்களில் ஒளிர, நாம், இருதலைக் கொள்ளியின் இடையில் நின்று வருந்தி ஒருமுகப்படாத எறும்பு போன்றனம். தலைவியோ நம்மால் அருள்செய்யத் தக்கவள், ஆ, அவள் உள்ளம் நோவுமன்றோ!” என்பது.

பிரியாக் காதலரின் உள்ளப் பாங்கு இப்பாட்டில் கண்ணியமாய் எடுத்துக் காட்டப்பட்டிருப்பது பெரிதும் உணர்ந்து மகிழ்தற்குரியதாகும்.

**குறிப்புரை.**—ஆள்வினை - முயற்சி. அசைவு இல் - தளர்தலில்லாத. தடப் - தடைசெய்ய. கவை - பிளவு. கடக்கண் - கண்ணின்கண். அகைய - ஒளிவிட. உறவி - எறும்பு. அளியள் தானே - அவள் அருள் செய்யப்படுதற்குரியவள். (எக)

## நன்மையே வெல்லும்

[இயற்கையின் நடைமுறையை அறிந்துணர்ந்து ஒழுகுதல் இன்றியமையாதது. உயிர்களின் வாழ்க்கையை இயற்கையானது தானே மிக அருமையாக நடத்திச் செல்கின்றது. ஒன்றையொன்று அடக்கியாளும் வன்மைகள் இயற்கையில் உள்ளன. உயிர்கள் அம்முயற்சியை மேற்கொள்ள வேண்டுவதில்லை. மேற்கொள்ளின், சுமை மிகுந்து இயற்கையோடு இயைந்து வாழும் வாழ்வும் பாழ்படும். இச்செய்யுளில் அந்த ஆற்றல்கள் காட்டப்படுகின்றன.]

குளிரும் பருவத்தே யாயினும் தென்றல்
வளிஎறியின் மெய்யிற் கினிதாம்,—ஒளிஇழாய்
ஊடி இருப்பினும் ஊரன் நறுமேனி
கூடல் இனிதாம் எனக்கு.

—ஐந்திணை ஐம்பது, உ0.

நன்மையே வெல்லும் என்பது ஓர் உறுதிமொழி. பொருள்கள், உணர்வுகள் என்னும் இரண்டிலும் இவ்வுண்மையைக் காணலாம்.

ஒவ்வோர் ஆண்டிலும் குளிர்காலம் வருகின்றது. அந்தப் பருவத்திற் சிறிது காற்று வீசினாலும் அது மக்களுக்குக் குளிர் உண்டாக்கித் தொல்லைப்படுத்தும். ஆனால் அப்படி வீசுங் காற்று, தெற்குப் பக்கத்திலிருந்து வருந் தென்றற் காற்றாயிருந்தால், அந்நிலையிலும் அது தனது இனிமையைப் புலப்படுத்தாமற் போவதில்லை. தென்றல், உடம்பிற்கு அக் குளிரும் பருவத்திலும் இனிதாகவே இருக்கின்றது. நன்மை வென்றது.

இனி உணர்வு வகைகளை நோக்குவோம். உணர்வுகளுள் முதன்மையானவை ஆண் பெண் உணர்வுகளேயாம். அவருணர்வுகளிலும் நல்லன தீயன உண்டு.

ஏதோ காரணத்தால், கணவன் மனைவியர்க்குள் ஊடல் உண்டாயிற்று. குற்றம் இல்லாமலே ஊடல் கொள்வதாயிருந்தாலும், அந்த நேரம் அவர்களுக்குக் குளிர்காலம் போலச் சிறிது இன்னல் தருவதேயாம். ஆயினும் வெற்றி பெறுவது ஊடலன்று, கூடலேதான்.

கணவன் கூடிச்சென்றபின், தோழி தலைவியை அணுகினாள். தலைவியைப் பார்த்த அளவிலேயே, கூட்டம் நிகழ்ந்த குறிப்புத் தெரிந்தது. தானே உண்மையைச் சொல்லிவிட வேண்டுமென்று தலைவி நினைத்தாள். உடனே அவள், "தோழீ, குளிரும் பருவத்திலே யானாலும் தென்றற் காற்று வீசினால் உடம்பிற்கு இனிதாயிருக்கின்றது; நான் ஊடியிருந்தாலும் அந்த ஊரனது சிறந்த மேனியைக் கூடுதலே எனக்கு இனிமையாயிருக்கின்றது, நானென்ன செய்வேன்?" என்று சொல்லிப் புன்னகை கொண்டனள்.

ஊடுதற்குக் காரணமாயிருந்த குறைகளைக் காட்டிலும், கூடுதற்குக் காரணமாயிருந்த தலைவனது சாயல் என்னும் நன்மை பெரியதாயத் தோன்றி வெற்றிகொண்டால்,

அதற்குத் தலைவிதான் என்ன செய்வாள்? நன்மைகள் வெல்லுவது இயற்கை.

குறிப்புரை —வளி - காற்று. எறியின - வீசினால், மெய - உடம்பு ஒளிஇழாய - ஒளியையுடைய அணிகலன்களை அணிந்திருக்கும் தோழீ! ஊரன் - மருதநிலத்துத் தலைவன் நறு மேனி - நல்ல உடம்பினை (எஉ)

## 'களவு' என்பதன் கருத்து

[இன்பம் உள்ளுணர்வுகளைப் பற்றியது துன்பம் புறக்காட்சிகளைப் பற்றியது. ஆகவே இன்பம் நிகழ்ந்ததுவோர் ஒழுக்கம் உள்ளொழுக்கமாய அகமாயக் களவுபோலத் தோற்றுதல் இயல்பே. அதுகொண்டு அதனைத் தீதெனத் துணிதல் பொருந்தாது. மெய்ம்மை யென்பது மறைவையும் வெளிப்படையையும் பொறுத்ததன்று; அது மனச்சான்றைப் பற்றி நிகழ்வதாகும்.]

கொண்கன் பிரிந்த குளிர்பூம் பொழில்நோக்கி
உண்கண் சிவப்ப அழுதேன், ஒளிமுகம்
கண்டுஅன்னை 'எவ்வம் யாது' என்னக், கடல்வந்துஎன்
வண்டல் சிதைத்ததுஎன் றேன்.

—ஐந்திணை ஐம்பது, சச.

ஒரு வியப்பு! துன்பம் மிகுதி யாக ஆக, அது வெளி முகம் நோக்கி வருகின்றது. இன்பம் மிகுதி யாக ஆக, அதுவோ உள்முகம் நோக்கிச் செல்கின்றது. வெளியே அலைகின்றபோது யாராகும் துன்பமாயிருக்கின்றது; ஆனால் இன்பம் விரும்புகின்றபோது அவர்கள் உள்ளே செல்லுகின்றார்கள். ஆகவே, வெளியில் தெரியாமல் உள் ளளவாய நிகழ்தலே இன்பத்தின் இயல்பென்பது இதனால் தெரிகின்றது. இவ்வுண்மைகளை முன்னோர் முன்பே தெளிந் திருக்கின்றனர். வெளியில் தெரியாமல் நிகழ்வது என்னும் இயல்பினைக் 'களவு' என்னுஞ் சொல்லால் மெல்லத்தெளிய வைத்திருக்கின்றனர். உள்ளளவாய நிகழ்வது என்னும் உண்மையை 'அகம்' என்னுஞ் சொல்லால் உணர வைத் திருக்கின்றனர். இவை எவ்வளவு நுட்பமாயிருக்கின்றன!

அகததுக்கு அகமாய மறறவா அறியமாட்டாத நிலை மையில நிகழவதே இஙஙனம இன்பவுணாவின இயல்பா யிருததலால, உண்மையில இனபம நுகாவோா றெனபவா பிறரால் அறிநதுகொள்ளககூடாத உள்ளொழுகக நிலைமை யிலிருபபதே இயலபாயிருககினறது களவொழுககம எனனும பெயா ஆ, எவவளவு ஆழநத கருததை அறி வுறுததுவதாயிருககினறது!

'கணவன பிரிநதுபோன குளிாநத பூககள நிறைநத சோலையைப பாாதது, என மையுண்ட கண்கள சிவககும படி ஆறறுமையால அழுதேன. ஒளிமிக்க என் முகததைப் பாாதது என தாய, 'வருததம யாது' என்று கேடக, நான், கடல அலைகள வநது என மணல விளையாடடை அழிததது என்றேன' என்று ஒருததி சொலலுமபோது, அவள சொறகளில எவவளவு களவு நிறைநதிருககிறது! பிறரறியக கூடாத உண்முகவொழுககமனறோ அது!

அயலறியாதபடி உண்முகமாய நிகழவதே இனபத தின இயல்பானலை, அதறகு அவள் என்ன செயயலாம!

குறிபபுரை —கொணகன - கணவன பொழில - சோலை. சிவபப என்று வருதலால, மையுணட கண என்று கருமைநிறந தோனறப பொருளுரைபபது இஙகே சிறபபு எவவம - வருத தம வணடல - விளையாட்டு, விளையாடடுககாக மணலிற கடடிய சிறுவீடடை இஙகே குறிககும. சிதைததது - அழிததது. (எங)

---

# 9. வாழ்க்கை முறை

## உழவரும் வணிகரும்

[உழவும் வாணிகமும வாழககைககு அடிபபடையானவை உழவா, பலாககும பலப்பல உதவுங குளிாநத அனபுவாழககையினா; வணிகா, பலாககும வளமபெருககும முறைமையுளளததினா. அனபும அறனுமாகிய இவவிருவகை வாழககைத திறனும உடையதாயின, இவ்வுலகம பணபும பயனுமமிககுச சிறககும]

கொலைகடிந்தும களவுநீககியும
அமரர்ப் பேணியும ஆவுதி அருத்தியும்

நல்லானொடு பகடோம்பியும்
நான்மறையோர் புகழ்பரப்பியும்
பண்ணியம் அட்டியும் பசும்பதங் கொடுத்தும்
புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல,
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுஅஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்துவீசும்
தொல்கொண்டித் துவன்றிருக்கை.

—பட்டினப்பாலை, ககூ-உகஉ

'சொல்வது ஒன்று செய்வது இரண்டு' என்று ஒரு புது மொழியையும் இனி வழங்கலாம்போலத் தோற்றுகின்றது. காவிரிப்பூம் பட்டினத்தில் முற்காலத்தில் அமைந்திருந்த வாணிகர் இருப்பிடத்தைப்பற்றி உருத்திரங் கண்ணனார் என்னும் நல்லிசைப் புலவர் சொல்ல விரும்பினார். ஆனால் அவர் இரண்டு காரியங்களைச் செய்திருக்கிறார், நயமாகவுஞ் செய்திருக்கிறார்.

உலகத்தில் உழவுத் தொழிலும் வாணிகத் தொழிலும் தமக்குள் தொடர்புள்ளவை. எல்லாத் தொழில்களுக்கும் இவையே தாயுந் தந்தையும் போன்றவை. உழவும் வாணிகமும் இல்லாமல் உலகத்தில் என்ன காரியம் ஆகும்? இப்படி ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதனால் இவ்விரண்டையும் வேறு வேறாகப் பிரித்துக் கூற உருத்திரங் கண்ணனாருக்கு மனம் வரவில்லை. வாணிகரைப் பற்றிச் சொல்லும்போதே உழவரைப்பற்றியும் அவர் சொல்ல விரும்புகிறார்.

உழவர் உலகத்துக்குத் தாய் போன்றவர்; வாணிகர் தந்தைபோன்றவர். தாய் போன்றவரை முன்னால் வைத்துச்

சொல்லுவதே சிறப்பு. இங்கே அங்ஙனமே சொல்லப்பட்டிருக்கின்றது.

நூல்களில் எந்தக் கருத்தையும் ஒரு தொடர்பில்லாமல் இடையே கோத்துவிட முடியாது. வாணிகரைப்பற்றிச் சொல்லவந்தபோது, அவர்கள் நடுவுநிலைமை என்னுங் குணமுடையவர்கள் என்று ஆசிரியர் சொல்லத் தொடங்கினர். தொடங்கியவர் அதற்கு ஓர் உவமை காட்டக் கருதி, அதனை வாயிலாகத் தமது கருத்தை நிறைவேற்றிக்கொள்ள விரும்பி, 'உழவரது நுகத்தடியின் பகலாணிபோல் அவர்கள் நடுவு நிலைமையுடையவர்கள்' என்று ஓர் உவமை கூறும் முறையில் வைத்து உழவர்க்கும் இடமுண்டாக்கிக் கொண்டார். இனி அவ்வுழவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை விளக்குவதற்கும் அவர்க்கு இடம் நேர்ந்துவிட்டது.

உழவர் 'இவர்கள் மரக்கறி யுணவுகளைப் பயிர் செய்வதற்கு உரியவர்கள். 'உழவர்' என்னும் பெயரினாலேயே இவர்கள் ஊன் உண்ணுங் கட்டாயமில்லாதவர்கள் என்பது பெறப்படும். ஊன் உண்ணுதபோது, அதன் பொருட்டு ஓர் உயிரையுங் கொலைசெய்யவேண்டிய கட்டாயமும் இல்லாதவரே யாவர். ஆதலாற் காவிரிப்பூம்பட்டினத்து உழவர்கள் கொலைத் தொழிலிலிருந்து நீங்கி யிருந்தார்கள். களவு செய்தலும் அவர்களிடம் இல்லை. மற்றவர்களும் இக் கொலை களவுகளிலிருந்து நீங்கி வாழும்படி செய்துவந்தார்கள். அவர்கள் தேவர்களின் வழிபாடு உடையவர்கள். வேள்விகள் செய்து அவற்றின் வழியாகத் தேவர்கட்கு அவியுணவு ஊட்டுவார்கள். பால் முதலியவற்றிற்காகப் பசுவையும் உழவு முதலியவற்றிற்காக எருது கடா முதலியவற்றையும் பாதுகாத்து வளர்த்து வந்தார்கள். அந்தணர்களின் நற்செயல்கள் எங்கும் பரவுவதற்கு இடஞ்செய்து வந்தார்கள். அவர்கள், ஏழை எளியவர்கட்கும், விருந்தினர்க்கும், அறவோர் முதலியவர்க்கும் அவ்வப்போதும் பணியாரம் பொங்கல் முதலிய உண் பொருள்கள் கொடுப்பார்கள். புதிது விளைந்துவந்த அரிசி பருப்பு முதலியனவும் உதவுவார்கள் என்றின்னோன்னும் அறச் செயல்கள் தவறாத அருள் நிரம்பிய குளிர்ந்த வாழ்க்கையை

புடையவர்கள் முடங்கிய கலப்பையினால் ஆகும் உழவு தொழிலையே விரும்பிச் செய்கின்ற உழவர்களின் இயல்பு இப்படிப்பட்டது.

வணிகர் அவ் வுழவரது நுகத்தடியில் தைத்த நடு ஆணிபோல இவ் வணிகர்கள் சரியான நடுநிலைமையைப் பெற்ற நல்ல நெஞ்சத்தை யுடையவர்கள். உலகியல் நடைக்கு வடுவாகும் என்றஞ்சி உண்மையையே பேசுவார்கள். தம்முடைய பொருள்களையும் பிறருடைய பொருள்களையும் ஒன்றுபோலக் கருதி, தாம் பிறரிடம் விலை கொள்வதையும் மிகுதியாகக் கொள்ளாமல் தாம் பிறர்க்கு விலையாகக் கொடுப்பதையும் குறைவாகக் கொடாமற் பல பண்டங்களையும் ஒழுங்காக விலை கூறி விற்பார்கள் இம் முறையைக் கைவிடாத பழைமை தொட்டே திரண்டுவரும் பெருஞ் செல்வம் படைத்தவர்கள். இத்தகைய சிறந்த வாணிகர்கள் செறிந்திருக்கும் இருப்பிடங்கள் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தன'

காவிரிப்பூம்பட்டினத்திலிருந்தவராக இங்கே சொல்லப்படும் வணிகர்கள் தொகுத்துவிற்கும் பெருவணிகர்களாதலின், அவர்களே உழவு தொழில் செய்துகொள்ளுதலும் இயலாது வணிகத் தொழில் ஒன்றையே உடையவர்கள் ஆதலின் உழவரை இவரினும் வேறாக்கக் கொண்டு இவர் நடுவு நிலைமைக்கு அவரது நுகத்தாணியை உவமை கூறுமுகமாக அவரைப்பற்றியும் ஆசிரியர் விளக்கிக் கூறினார் என்று கொள்ளவேண்டும் ஒன்று சொல்ல வந்து இரண்டு செய்த இவ்வாசிரியரின் திறம் பெரிதும் பாராட்டுதற்குரியதேயாம்.

குறிப்புரை —ஆவுதி - அவி யுணவு, அருத்தியும் - நுகர்வித்தும் பணியம் - தின்பண்டம். அட்டியும் - கொடுத்தும் பசும் பதம் - சமைக்காத பச்சை உணவுப் பொருள், பதம் - உணவுப் பொருள்கள்; பச்சரிசி, பருப்பு, காய்கறிகள் முதலியன இவற்றில் அடங்கும். தண் நிழல் வாழ்க்கை - குளிர்ந்த அருள் வாழ்க்கை, அதாவது, அருளுள்ளத்தோடு கூடிய வாழ்க்கை. கொடு - வளைந்த. மேழி - கலப்பை; இங்கே அதன் தொழில் உணர்த்தும் நசை

உழவா - விரும்புதலையுடைய உழவா  நெடு நுகம - நீணட நுகத சடி  பகல - பகலாணி, நடு ஆணி  நடு - நடுவு நிலைமை  நினற - நிலைபெறற  வாய - உணமை. தம - தமமுடையன. பிற - பிற பொருளகள, அதாவது, பிறருடைய பொருளகள மிகை கொளாது - மிகுதியாகக கொளளாமல. பகாநது - விலைகூறி; சரியான விலைகூறி எனபது கருதது. வீசும - வீசுதலால  தொல - பழைமையான  கொணடி - திரளான தொகை  வாணிகததால் பழைமையாகவே உருவான திரணட பெருநதொகைகள் செறிந திருககும இருபபிடஙகள எனபதறகு, 'தொலகொணடித துவன றிருககை' என வநதிருககினறது  'உழவரது பகலாணிபோல நனனெஞசினோரான வாணிகா பலபணடம பகாநதுவீசும தொல கொணடித துவனறிருககை' என முடிததுககொளள வேணடும பகாநது வீசுதலால பழைமைதொடடே மிகக செலவம செறிநதிருக கும இருபபிடஙகள எனபது பொருள  (எச)

## காமங குறையினும் காதல் குறையாது

[வாழககையின முறபகுதி கலஙகலோடு கூடிய வெளளம போனறது, பிறபகுதி தெளிநது பயனபட வொழுகும நீாககால போன றது  மழை பெயது வரும வெள்ளம முனனும பினனும தொடாநதொழுகுமாயினும, இவவேறுபாடு அதனகட காணப படுகினறது  வாழககை இவவாறு அம மழை வெளளததை ஒததது  இதனுற கலககமுந தெளிவுமடடுமனறி, ஆரவாரக கவிபபும அடஙகிய இனிமையும புலனுகும ]

காமம ஒழிநதாயினும யாமததுக
கருவி மாமழை வீழநதெனை அருவி
விடரகத தியமபு நாட எம
தொடாபும தேயுமோ நினவயி னுனே.

—குறுநதொகை, சஉ.

'இளமையின மனவெழுசசியான காம நினைவு நீங குவதாயினும, தலைவ, நினனிடததில எனககுளள நடபுங குறையுமோ' எனறு தலைவி கருதுவதாக இசசெயயுள் அமைநதிருககினறது  'முன நாளிரவில, மினனல இடி முதலிய தொகுதிகளையுடைய பெரிய மழை பெயததனுல,

பின் நாளிலும் மலைப்பிளவுகளில் அருவி பெருகி ஒலித்துக் கொண்டிருக்கின்ற மலைநாடனே' என்று தலைவனை அவள் அழைப்பதாகவும் ஒரு குறிப்பு இச் செய்யுளில் வருகின்றது. முன் நாளில் மழைபெய்யப் பின் நாளிலும் அருவி தொடர்ந்து பெருகுவதுபோல், வாழ்க்கையின் முற்பகுதியிற் காம நினைவுடன் தோன்றிய மெய்க் காதல், பிற்பகுதியிலும், அக் காம நினைவின்றி, தொடர்ந்து நிகழும் என்பது அதன் கருத்து.

குறிப்புரை:—காமம் - மெய்யுறு புணர்ச்சியின் பொருட்டு இளமையில் தோன்றும் மனவெழுச்சி இது மகப்பேற்றுக் காரணமாக நிகழ்வது காதல் - உயிர் நேயம் உண்மையான காதலாகு மூப்புப் பருவத்திற் காமம் ஒழிவதாயினுங் காதல் ஒழியாது. இவ் வுண்மையை இச்செய்யுள் புலப்படுத்துகின்றது. கருவி - தொகுதி, மின்னல் இடி முதலியவற்றின் தொகுதி யென்பர். மா - பெரிய, வீழ்ந்தென - வீழ்ந்ததனால். விடரகம் - விடரிடம், விடர் - மலைப் பிளவு. அருவிகள் மலைப் பிளவுகளில் திரண்டு வீழ்ந்து ஒலிக்கும் இயம்பும் - ஒலிக்கின்ற, தேயுமோ - குறையுமோ. வயின் - இடம், வயினுன் - இங்கே இடத்தில் என்னும் பொருளில் வந்தது. (எரு)

## ஆணும் பெண்ணும்

[உயிர்களெல்லாம் ஆண் பெண் பகுப்பினையுடையன. காரணம், பிரிந்து முயற்சிசெய்யும்பொருட்டும், பிரிந்த விடத்தும் அம் முயற்சிக்கோர் ஆறுதலாக ஆற்றலாக ஈர்ப்பிருக்கும்பொருட்டும், வழிவழிப் பயன் விளைக்கும்பொருட்டுமாகும். இவ் வாழ்க்கை முறைமை, இயற்கையின் ஓர் அழகிய சித்திரம். அச் சித்திரத்தின் உயிரே காதல். இது என்றும், ஒருமுக உணர்ச்சியையும் ஆற்றலையும் உண்டாக்குகின்றது.]

பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொ
டுடனுயிர் போகுக தில்ல, கடனறிந்து
இருவே மாகிய வுலகத்து
ஒருவே மாகிய புன்மைநா முயற்கே.

—குறுந்தொகை, ருள.

நுடபமான கருததுக்கள் இப்பாட்டின்கண் வலி யுறுததப படுகின்றன.

உயிாகள ஆணும பெண்ணுமாயப பிறககின்றன. வேறு வேருயத தோன்றுகின்றன ஆனல, ஒன்றை யொன்று அவாவியபடியே இருககின்றன. இதனுல, ஆண உயிரும பெண உயிரும தொன்றுதொடடே தொடாபுடை யனவாயக காணபபடுகின்றனவென்பது பெறபபடும. உணமையான கணவனும் மனைவியும ஒருயிருடையராகவே கருதபபடுகின்றனா.

'இனபந துயகக வேணடுமானுலும், இல்லற காரியங களைச செயய வேணடுமானுலும இருவராகப பிரிநது நின்றே கடனுற்றவேணடியிருததலின, அக கடனறிநது இவவுலகததில இருவராயப பிறகக நோநதது' என்றும், 'காரியஙகளைப பொறுபபுடன செயய நேருமபோது ஓரோ வொருகால ஒருவரை யொருவா பிரிநது ஒருவராயத தனிதது நிறகவேண்டியிருககின்றது' என்றும, 'ஆனறு, காமமோ, ஒரு மலா இடையே குறுககிடடாலும அங்ங னங குறுககிடுங காலம பல ஆணடுகள் கழிநதாறபோன்ற தனமையதாயுள்ள நீரில உறைகின்ற மகன்றில பறவை களின் பிரிவறியாச் சோககையைபபோல, பிரிவு அரிதாகிய நீங்காக காமமாயிருககின்றது, இது காமததின இயலபு' என்றும், 'ஆதலால, தனிதது ஒருவராய நிறகுஞ சிறுமையி லிருநது தபபுமபொருட்டு இப பிறபபில இருவருககும ஒன்ருக உயிா பிரிவதாகுக என விருபபந தோன்றுகின் றது, ஏனென்றல, உயிா பிரியுமபோது கொள்ளும எண ணமே மறு பிறவியில நிகழும என்பதனுல, அஙஙனம இருவருயிரும ஒன்ருயப பிரிநதால, வரும பிறவியில எப போதும இணைபிரியாதிருககலாம என்பது பெறபபடுமாத லின என்றும இப பாடடிலிருநது பல கருததுககள் புலப படுகின்றன.

ஆண பெண இயைபுபற்றிய ஆராய்ச்சிககு இவை மிகவும் உதவககூடும.

**குறிப்புரை** :—உறை - வதிகின்ற, மகன்றில் பறவைகள் எப் போதும் இணைபிரியாமல் இருக்கக்கூடியவை என்று சொல்லுவார் கள் தண்டா - நீங்காத. உடன் - ஒன்றாக. தில் - விருப்பப் பொரு ளில் வந்தது கடன் - முறைமை புன்மை - சிறுமையிலிருந்து உயற்கு - தப்பும்பொருட்டு. 'உயற்கு உடன் உயிர்போகுக' என்று கூட்டி உரைத்துக்கொள்ள வேண்டும் (எசு)

## காதலும் ஈதலும்

[இனிய ஆண் பெண் கூட்டுறவு, புறங்கழ்ச்சிகளாலும் அகங்கழ்ச்சி களாலும் உலகுக்குப் பயன்படுதலுடையது அக் கூட்டுற வினமை, அவ்வாறு பயன்விளைத்தல் அரிது மனைவாழ்க்கையே, இரவலர்க்குப் பயன்படுதல் கருதியது மனைவியைப் பிரிந்துறை வோர் இரவலர்க்குப் பெரிது பயன்படாதவரே. இக் கருத்துக் கள் இச் செய்யுளால் பெறப்படும்]

மெல்லிய லரிவைநின் னல்லகம் புலம்ப
நின்றுறந் தமைகுவெ னாயின், எனதுறந்
திரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே.

—குறுந்தொகை, கங்எ

மக்கள் என்றால், அவர்களுக்கு அமையவேண்டிய நற் பண்புகளெல்லாம் ஒருங்கமையும் வகையில் நடந்துகொள் வதுதான் நல்லது. ஆடவர்க்கு வீரம் வேண்டும், காதல் முதலியனவும் வேண்டும், எல்லாவற்றிற்கும் மேலாகக் கொடுக்குங்குணமும் வேண்டும். இரவலர்க்கு ஒன்று உதவுவதென்பது ஆடவர்க்குக் கட்டாயமாய் இருக்க வேண்டிய பெருங்குணமாகும். இரவலர்கள் வாராத நாட்களை அவர்கள் வீண் நாட்களாகக் கருதவேண்டும். முயற்சியின்மேல் வெளிநாடுகளுக்குப் பிரிந்து சென்ற காலங்களிலும், இரவலர் வாராத நாட்கள் அவர்களுக்கு இன்பம் பயப்பன அல்ல.

தன் தலைவியை நோக்கி ஒரு தலைமகன், "மெல்லிய இயல்பினையுடைய பெண்ணே, நின் இனிய நெஞ்சம் தனித்து

வருந்தும்படி நின்னைப் பிரிந்து வேறு முயற்சியில் மனம் அமைவேனானால், அங்ஙனம் யான் பிரிந்து செல்லுந் தகுதியான காலத்திலும் இரவலர்கள் என்னைக் கருதாமலும் வாராமலுமிருக்கும் நாட்கள் பலவாகட்டும்" என்று சொல்லுகின்றான்.

ஈகைப் பண்பை எவ்வளவு மேலாகக் கருதிப் போற்றி வருகின்றான் என்பது, அவன் இங்ஙனம் வஞ்சினமாகக் கூறிய முறைமையினால் நன்கு புலப்படுகின்றது.

காதற் குணத்தின் பயன் ஈதற்குணம் என்பது இதனால் இனிது தெளியப்படும்.

**குறிப்புரை** :—மெல் இயல் - மென்தன்மை; அரிவை - அரிவையே, பெண்ணே. அகம் - நெஞ்சம். புலம்ப - தனித்து வருந்த. அமைகுவெனாயின் - அமைகுவேனாயின், என் துறந்து - என்னை நீங்கி, என்னைக் கருதாமல் என்பது கருத்து. வைகல் - நாட்கள். பலவாகுக - பலவாக ஆகட்டும், செலவுறு - செல்லுகின்ற, தகவு - தகுதியான நாட்களிலும், தக்க காரணத்தோடு பிரிந்து செல்லும் நாட்களிலும் இரவலர் பல நாட்கள் வாராமற்போவார்களாக என்பது பொருள். (என)

## முயற்சியும் வேண்டும்

[வாழ்க்கைக்கு முயற்சியும் வேண்டும், அம் முயற்சி, இயற்கை நோவை ஒத்தியங்குதலும் வேண்டும். இயற்கை நோவு வேறு, அதன் பயன் வேறு பயன், முயற்சியின்றி விரைவாகவும் நிறைவாகவும் கிடைப்பது அரிது. முயற்சியின்றி இயற்கை நோவினால் மட்டும் உண்டாகும் பயன், முற்றிக் கனிதலின்றித் தானே உதிர்ந்துபோகும் பிஞ்சை யொத்தது.]

நறுவடி மாஅத்து மூக்கிறுபு உதிர்ந்த
ஈர்ந்தண் பெருவடுப் பாலையிற் குறவர்
உறைவீழ் ஆலியின் தொகுக்குஞ் சாரல்
மீமிசை நன்னாட் டவர்வரின்,
யானுயிர் வாழ்தல் கூடும் அன்னாய்.

—ஐங்குறுநூறு, உகங.

ஒரு நாள் தோழியை நோக்கித, "தலைவர் இன்னும் வரவில்லையே" என்று தலைவி ஆற்றாமையோடு சொன்னாள்.

தோழி . "வந்துவிடுவார் ; திருமணத்துக்காகப் பொருள் தொகுக்கும்பொருட்டுப் போயிருக்கின்றார்."

தலைவி · "உம் , அவர் எங்கே அவ்வளவு விரைவாக வரப்போகிறார் ? அவர் ஊராரைப் போலத்தானே அவரும் இருப்பார் !"

தோழி : "அவரையே இன்னும் நமக்கு நன்றாகத் தெரியாதே ; இதற்குள் அவர் ஊராரைப்பற்றிக்கூடப் பேசத் துணிந்துவிட்டாயே ; இருக்கட்டும் , அந்த ஊரார் இயல்புதான் எப்படி ? சொல்லு பார்ப்போம்.'

தலைவி : "உனக்கு எல்லாம் சொல்லவேண்டும் ,........ அவர் ஊர், மலைச்சாரல் ; அங்கே பாலைவழிகள் உண்டு ; போதுமா ? . அருகில் மாமரங்கள் இருக்கும் , அவற்றி விருந்து மாவடுக்கள் உதிரும் ......."

தோழி : "நான் இவையெல்லாமா கேட்டேன் !"

தலைவி· "குறையும் சொல்லுவதற்குள் என்ன துரிதம்? மழையில் விழுகின்ற ஆலங்கட்டிகளைப் பொறுக்குவது போல அங்கிருக்குங் குறவர்கள், தாமே விழுகின்ற அந்த மாவடுக்களைப் பொறுக்கிக்கொள்வார்கள்."

தோழி · "இப்போது நானுன், தலைவர் இன்னும் வரவில்லையே, வரவில்லையே என்று துரிதப்படுகிறேன்போ லிருக்கிறது ! உம் , அப்படியானல், அந்தக் குறவர் குணம் தலைவர்க்கும் இருக்கிறதென்கிறாய."

தலைவி · "பின்னையென்ன ? முயன்று பொருளீட்டி னல், விரைவாகக் கிடைக்கும் தானுகக் கிடைக்கும் போது, தொகுத்துக்கொண்டு வருவதென்றல், அவ்வளவு விரைவாக முடியுமா ? பொருளுக்காகவே சொல்லவில்லை ; திருமணம் முடிக்கும் முறையிலாவது, அவராக ஏதாவது முயற்சி எடுக்கிறாரா ? விரும்புவனவற்றிற்குத் தாமாக ஒன்றும் முயல்வதில்லை. கிடைத்தால், போற்றிக்கொள்

வார். நம உறவினாகள எஙகே அவர்களாக எனனைக் கொடுததுவிடப் போகிருாகள! எனனவோ, அவர் வரின, யான் உயிா வாழுதல கூடும; அவவளவுதான."

இதில வரும் உவமை நயமானது.

குறிப்புரை —நறு அடி - நலல அடிமாததையுடைய; மூகசு - காயின அடி இறுபு - இறறு ஈா தண பெரு வடு - பிளபபான பசுசெனற பெரிய மாமபிஞசை, உறை வீழ ஆலியின - மழையில் விழுகினற ஆலஙகட்டியைபபோல சாரல - பககமலை மீ - மேல்; மீமிசை - மேலிடததையுடைய, மலையின மேலிடததையுடைய நலநாட்டவர் அனனை - தோழி. (எஅ)

## மழையின ஆதரவு

[உலக வியபபுககளுள், மழை மிகக அருமை பெருமை வாயந்தது, தலைமையான அருட்டிறமிககது, வாழககைககு இனறியமையாத பறபல உணமைகளைப புலபபடுததுவது. வாழககையானது, அனபும அருளும அறனும் உடையதாதல் வேணடும. திஙகள் அனபையும, ஞாயிறு அறனையும புலபபடுததுமாயின, மழை அருளியலபைப புலபபடுததுவதாகும. வாழககைக குரிய மககள, மழையையும அருவியையும நோககுங காலங களில், அருள நினைவு தானே எழபபெறுகினறனா]

குன்றக குறவன ஆாப்பின எழிலி
நுண்பல அழிதுளி பொழியும நாட!
நெடுவரைப் படப்பை நுமமூர்க
கடுவரல் அருவி காணினும அழுமே.

—ஐஙகுறுநூறு, உ௩௧.

இநதப பாட்டிற சொலலியிருபபதெனன? தோழி, தலைவனை நோக்கி, "நாடனே, பெரிய மலைபபககததிலிருககும உன் ஊரின அருவியைக் கண்டாலும தலைவி அழுகினறனள்" எனகிறுள அதோடு விடவிலலை, "குறவன உழவு தொழிலுககு ஆரவாரிததால அதறகு இசைநது மேகம் மழைபொழிகினற நாடனாக நீ இருக்கின்ருய்" என்றுஞ் சொல்கினருள்.

தலைவனுக்கு இவற்றால் ஆராய்ச்சி பிறந்தது. என்ன கருத்தால் இவள் இப்படி இரண்டு கருத்துக்கள் சொல்லக் கூடும் என்று கருதினான்.

ஆம், நமதூரைச் சேர்ந்த பொருள் எதுவாயிருப்பினும் அது தலைவிக்கு ஆற்றாமை தரக்கூடும். அருவியைக் கண்டவுடனே அவளுக்கு அழுகை பெருகியிருக்கும் நாம் விரைவில் அவளைத் திருமணஞ் செய்துகொள்ளாமற் கைவிட்டிருக்கிறோம் என்று நினைத்துக்கொண் டிருப்பாள்.

இன்னொன்றும், நம்மேற் குறை காட்டுவதற்குத்தான தோழி, சொல்லியிருக்கவேண்டும். என்ன குறை இருக்கப்போகின்றது? விரைவில் திருமணம் முடிக்கவில்லையே என்று அவர்கள் கருதும் கருத்துக்கு நாம் ஆதரவு தரவில்லை என்னுங் குறைதான் இருக்கப்போகிறது. அதற்காகத்தான், 'மலைக் குறவன் தினை விதைப்பதற்காக உழுவதற்கு முயற்சி செய்தால உடனே மழை பொழிகின்றது; அத்தகைய நாட்டினையிருந்தும், நாங்கள் திருமணத்திற்காக முயற்சி செய்வதற்கு நீ தண்ணளி செய்யவில்லை' என்னுங் கருத்துப்படத் தோழி மற்றுமொன்றையும் சொல்லியிருக்கிறாள்

எவ்வளவோ மனம் நொந்திருந்தாலல்லாமல் இவர்கள் இங்ஙனம் சொல்லியிருக்கமாட்டார்கள். எதற்காக அவர்கள் மனம் நோவ வேண்டும்! விரைவில் திருமணத்தை முடித்துக்கொள்ள வேண்டுவதுதான; என்று தலைவன் அது கேட்டதும் ஒரு துணிவுக்கு வந்துவிட்டான்.

இவன் மனத்தை இவ்வளவு பதப்படுத்தித் திருத்துவதற்கேற்ற அருமைப்பாடு இப் பாட்டுக்கு இருக்கத்தானே வேண்டும்!

**குறிப்புரை** :—ஆர்ப்பின - ஆரவாரித்தால், எரும நுகத்தடியும் ஏந்தி மாடுகளை ஓட்டிக்கொண்டு பலரும் கூட்டமாய்க் கல்லென்று உழவுக்குப் புறப்படுதலின், ஆரவாரித்தல் என்றார். எழிலி - மேகம். நுண் பல அழி துளி - சிறிய பலவான சொரிந்த

துளிகள். நாட - நாடனே! படப்பை - பக்கம்; மலைப் பக்கம். கடு வரல் அருவி - விரைவாய ஓடிவருதலையுடைய அருவி. (௭௧)

## நீர்க்குமிழி போன்றது இளமை நலம்

[உலகத்தில் ஒவ்வொரு நன்மையும் இரண்டு ஆற்றல்களின் பயனு யுள்ளது. அவற்றை எதிராற்றல் இணக்கவாற்றல் என்றாவது, அன்பாற்றல் அருளாற்றல் என்றாவது, ஈர்ப்பாற்றல் இசைவாற் றல் என்றாவது கூறலாம். ஒருவர் விரும்புதலும் மற்றவர் அதற்கு அருளுதலும் இவ்வல்லமைகளே. இவற்றின் இணை வால் நலம் செழிக்கின்றது.]

குரங்கின் தலைவன் குருமயிர்க் கடுவன்
சூரலஞ் சிறுகோல் கொண்டு வியலறை
மாரி மொக்குள் புடைக்கும் நாட!
யாம்நின் நயந்தனம் எனினும் எம்
ஆய்நலம் வாடுமோ அருளுதி எனினே?

—ஐங்குறுநூறு, ௨௭௪.

‘வெந்த புண்ணில் வேல் நுழைவதுபோல’ என்று ஒரு பழமொழி உண்டு. இந்தப் பழமொழியைக் கேட்கும் போது, கேட்பவர் காதிலேகூட வேல் நுழைவதுபோல ஒரு துன்ப உணர்ச்சி உண்டாகின்றது.

துன்ப உணர்ச்சியே தோன்றாமல் ஆனால் அதற்கு மாறாக ஓர் உவகையுந் தோன்றுமாறு, இதே கருத்தை இன் னும் அழகாக இப்பாட்டில் ஒரு சுவையான உவமை வாயி லாக ஆசிரியர் கபிலர் வெளிப்படுத்துகின்றார்.

‘தலைவனைக் காதலித்ததொன்றே தலைவியின் அழகைக் குலைக்கப்போதும். ஏனென்றால், எந்நேரமும் தலைவன் மேலேயே ஏக்கம். இனி, அவன் இடையிடையே சில நாட்கள் விட்டு விட்டும் வருவதென்றால், அந்தப் பிரிவு அவள் அழகை இன்னும் எவ்வளவு குலைத்துவிடும்? இச் செயல் எதுபோல இருக்கின்றதென்றால், ஒரு குரங்கு, மழை பெய்து உண்டான நீர்க்குமிழியை, அது தானே

அழிந்து போகவிருக்கும் தறுவாயில், அதனை ஒரு கோலால் அடித்து அழித்ததுபோலிருக்கின்றது' என்பது.

நகைச் சுவையோடு கூடிய இவ் வுவமை எவ்வளவு அழகாயிருக்கிறது! மேலும் நீர்க்குமிழி நிலையாமைக் குறிப்புக்கு எவ்வளவு பொருத்தமானது!

குறிப்புரை :—குரங்கின் தலைவன் - பெரிய குரங்கு குரு மயிர்க் கடுவன் - நிறமான மயிரையுடைய ஆண் குரங்கு சூரலஞ் சிறுகோல் - சூரல் அம் சிறு கோல், சிறிய பிரப்பங் கோல், அம் - சாரியை; இச் சாரியைக்குப் பொருளில்லை வியல் அறை - அகன்ற பாறை நிலங்களில். மாரி மொக்குள் - மழையின் நீர்க்குமிழி. புடைக்கும் - அடித்தழிக்கும், நாட - நாடனே! யாம் நின் நயந்தனம் எனினும் - யாம் உன்னைக் காதலித்தோம் என்றாலும் எம் ஆய நலம் வாடுமோ அருளுதி எனின் - எமது அழகின் நலம் கெடுமோ நீ தொடர்பாக அருளுகின்றாயெனின், நின்னைக் காதலித்தது எங்கு தலால் எமது இயற்கையழகு கெடுகின்றதானாலும், நீ தொடர்பாகக் கூட்டந் தருகின்றாயெனின், நினது கூட்டத்தாலுண்டான எமது செயற்கையழகாவது கெடுமோ என்பது கருத்து ஆய நலம் - செயற்கையாக ஆகும் அழகு (அ0)

## அருளும் அன்பும் அறனும்

[உயர்ந்த பண்புடையோரைக் குணசாலி என்போம், கடவுள் உயர்ந் தோன் என்பதற்கு அடையாளம் அவன் உயர்ந்த குணங்களு டைமையேயாம் வாழ்க்கையின் உயிர் என்பது இக்குணமே. அதனைப் பகுத்தோதினால் அருளும் அன்பும் அறனும் எனலாம். வேன்ப பொருளும் பொன்னும் போகமுமெல்லாம் இவற்றை எய்தும் பொருட்டே. இந் நோக்கம் முதலில் மக்கட்கு உறுதி பெறல்வேண்டும்.]

நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோ ரல்லதை
மன்குண முடையோர் மாதவர் வணங்கியோ ரல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சினம்நீடி னோரும்
சேரா அறத்துச் சீரி லோரும்
அழிதவப் படிவத்து அயரி யோரும்
மறுபிறப் பிலலெனும் மடவோருஞ் சேரார்;

நின்நிழ லன்னோ ரல்லது இனனோர்
சேர்வா ராதலின, யாஅம இரப்பவை
பொருளும பொனனும போகமுமலல , நின்பால்
அருளும அனபும அறனும மூனறும ;
உருளிணர்க கடமபின ஒலிதா ரோயே !

—பரிபாடல் , ரு எக—அக.

இறைவன் திருவடி நிழல எனபது என்ன ? அதனை அடைவோா எவா ? அடையாதவா எவா ? அதனால், இறைவனிடம விருமபியடை யததககவை எவை ? எனனுங் கருததுகள இங்கு ஆராயபபடுகின்றன பாட்டின் பொருள வருமாறு :

' உருள்கின்ற பூங்கொததையுடைய தழைதத கடப்ப மாலையை யணிநத முருககககடவுளே ! நின கடவுட்டன் மையை ஏறறுககொண்டோரான அறவோரும, நிலையான தான வீடுபேறறை அடையும அவ்வியலபுடையோரான மாதவரால வணஙகபபடுவோருமலலது, உயிாகளை அழிக் கினற தீய நெஞசததுச் சினமுடையோரும, அறததிற சேராத தலைமையிலலோரும, அழிகின்ற தவக கோல முடைய ஒழுக்கததினுடையோரும, மறுபிறப பெனபது ஒன்றிலலை என்னும அறியாமையுடையோரும் நின திருவடி நிழலைச் சேரார. பின சொனனவ ரலலது முன சொனன நலலோரே திருவடி சோவா எனபது உறுதியே ஆத லால, யாம நினனிடம வேணடிப் பெறுவன, பொருளும பொனனும போகமும் எனனும் உலக நிலைமைகளை அலல ; அருளும அனபும அறனும் என்னும நின தெயவ குணங் களையேயாம ' என்பது.

இதுவே தூய்மையான வேண்டுதல் , என்றும அழியாத பேரினப நிலையைத தருவது இவ வருளும் அன்பும் அறனுமேயாம. இத தெயவ குணஙகளை, முழுமையாய அடையும் நிலையே வீடுபேறறு நிலையாம இறைவன் திருவடி நிலை என்பதும அது.

குறிப்புரை:—எதிரகொணடோா - ஏற்றுககொண்டோா; எதிரகொணடோரான அறஙகொணடோா என்று சோததுக கொள்ளவேணடும அலலதை - அலலது. மனகுணம - நிலைபெறற குணம, அது வீடுபேற்றுக குணம செறு - அழிககினற நீடினோ - மிகுநதோா. சோா அறததுு - அறததிற சோாத சீா - தலைமை. அயரியோா - அயாநதோா, கெடுவோா, தீய வொழுககததாற் கெடுவோா தவப படிவம - தவக கோலம. மடவோா - அறிவிலோா. பொருள எனபது, நுகரும பலவகைப பணடஙகள பொன எனபது அவற்றைத தரும பணம போகம எனபது அவவிரணடாலும உணடாகும நுகாசசி இவை முறையே மண பொன மாதா எனனும மூவகை அவாககளையும நினைவுகூரவிககும அருள - இறைவன குணம அனபு, அதனைப பெறும திருவடி அனபு அறம, அவவிரணடாலும நிகழும ஆருயிாத தொணடு எனபது. (அக)

## துணையோடுகூடிய வாழ்க்கையே வாழ்க்கை

[பருப பொருட செலவததைவிட உயிரப்பொருட செலவம மேலானது உயிரப்பொருட செலவஙகளுளளும உயிரொன்றிய காதறபேறமைநத கணவன மனைவியா தமமுள ஒருவருககொருவா தலைசிறநத செலவமாயுளளனா இச செல்வம அமைநதோா இதனை ஏனைச செலவஙகளின பொருட்டு இழப்பாரல்லா. வாழககையின ஒன்றிய செல்வம இது.]

சென்றோர் முகப்பப் பொருளுங கிடவாது,
ஒழிநதவை ரெலலாரும உணணுதுஞ செலலார்,
இளமையும காமமும ஓராஙகுப பெற்றோர்
வளமை விழைதககது உணடோ? உளநாள
ஒரோஒகை தமமுள தழீஇ ஒரோஒகை
ஒன்றனகூ றாடை உடுபபவரே யாயினும,
ஒன்றினா வாழ்ககையே வாழககை, அரிதரோ
சென்ற இளமை தரறகு.

—கலிததொகை, கஅ: இ-கஉ.

இன்பம, ஆண்மை பெண்மையில உளது. எத்தனை இடரேயாயினும, ஓர் ஆணும ஒரு பெணணும ஒருவருக்கொருவர் துணைவராயிருநது வாழும வாழ்வே ஆறுதல தரு

வதாயிருக்கும். தனித்த வாழவு, எததனை செல்வமுடைய நிலையிலும வெறுமை தட்டும.

தலைவன பொருள் காரணமாகத தன தலைவியை நெடு நாள் பிரிந்திருகக நினைத்தான. தோழி அவனை நோக்கிச் சில சொறகள சொலலுவதாக உளளது இப் பாட்டு. இதன பொருள வருமாறு:

" பொருள தேடப போனவாகள உடனே அளளிக கொள்ளும்படி பொருள் ஓரிடததிற குவிந்திராது. அவரவா நிலைககுத தககவாறே கிடைக்கும நெடுநதொலைவு போகா திருநதவாக ளெலலாருப, உணணுமது மிருககவிலலை. இள மையும காதல வாயப்பும ஒருஙகே பெறறவாகளுககு, வாழககைததுணையினும மேலாக, செலவம விருமபததக கதுமனறு. உளளநாளவரையில, ஒரு கையால தமக்குள் தழுவிககொண்டு மறறொரு கையால ஒன்றன பகுதியான ஆடையை இருவரும உடுததுககொளபவரேயானாலும, இணைபிரியாமற கூடியிருபபோரது வாழககையேவாழககை. கழிநத இளமை திருமபக் கிடைபபது அரிது."

பொருளின இயலபும, துணையோடு கூடியிருபபது எந் நிலையினும இனபந தருவதான முறைமையும் இப பாட்டில எடுததுக காடடபபடுகினறன.

குறிப்புரை :—முகபப - அள்ளிககொளளுமபடி. ஒழிநதவா - போகாதொழிநதவர். ஓராஙகு - ஒருஙகு வளமை - செலவம. விழைதககதுணடோ - விருமபததககதாகுமா ? அனறு எனறபடி ஒரே ஆடையின பகுதி எனறறகு 'ஒனறன கூறு' எனபபடடது. ஒனறினா - பிரியாமற கூடியிருபபவா (அஉ)

## விரும்பிய இணக்கமே திருமணத்துக்கு முதன்மை

[விருபபம எனபது வாழககையின ஓா இயறகையாறறல, அநத ஆற றல் தனனை ஈாககுஞ சிறபபுப பணபு கணடவிடததுத தானே வெளிபபடுகினறது. இருபுறததும அவவிருபபம அமமுறை மையிற் றோனறி ஒன்றுமாயின, அஃது இயற்கையின் இயககமே யாகும். அதனைத் தடைசெயயும வனமை பிறிதொன்றற்

இல்லை; வாழ்க்கையமைப்பாகிய இதனை உணர்ந்தொழுகு வார்க்கு எல்லாம் இனிமையே]

ஆயர் மகனாயின் ஆயமகள் நீயாயின்,
நின்வெய்ய னாயின் அவன்வெய்யை நீயாயின்,
நின்னைநோ தக்கதோ இல்லைமன், நின்னெஞ்சம்
அன்னைநெஞ் சாகப் பெறின்.

—கலித்தொகை, க0எ உ0-௩

ஒரு பெண்ணின் உள்ளம், ஆடவனிடத்தில் ஏதாவது ஆண்மைச் செயல் காணும்போதுதான் சிறந்த முறையில் அன்புகொண்டு ஒருமைப்படுகின்றது. ஏறு தழுவுதல் ஓர் ஆண்மைச் செயல். அந்த ஆண்மையைக் காணும்போது அதனை விரும்பும் பெண்மை உள்ளம், பெருவலிமையுடன் விரைந்து வீழும். ஆகவே அவ் வாண்மையையும் அவ் வாண்மையையே விரும்பும் பெண்மையையுஞ் சிறப்பிப்ப தற்காக 'அவன் ஆயர் மகனாயின் நீயும் ஆய மகளாயின்' என்னுங் கருத்தில் முதல் வரி வந்தது.

இருவரும் ஒருவரையொருவர் மனம் வீழ்ந்து காத லிப்பதுதான் திருமணத்தின் முதன்மையான பாகம். திரு மணம் என்பது இதுவே, முதன்மையானதான இதனையே தாய் முதலியோர் கருதுவர் என்பதற்காக, 'நினை அவன் விரும்பினானால் அவனை நீ விரும்பினாயானால்' என்னுங் கருத்தில் இரண்டாம் அடி வந்தது.

முதலடி உள்ளம் வீழ்தற்குக் காரணமும் இரண்டாம் அடி உள்ளம் வீழ்தலான காரியமுங் கூறுதலின், இம் முத லிரண்டடிகளும் திருமணத்தின் உயிர்போலவதான மன வொருமைப்பாட்டினையே எடுத்து வலியுறுத்துவனவாயின.

இங்ஙனம் மனம் விரும்பித் தெரிந்துகொண்ட தெரி வுக்கு, 'நின் அன்னை நொந்துகொள்ளத்தக்கதோ ஒன்று மில்லை, ஆதலின் திருமணம் தடையுறாது' என்பது அடுத்த அடியின் பொருள்.

இங்ஙனம் பிழிந்தெடுத்தது அறிவாகச் சொன்ன தோழியை நோக்கி, "தோழி, நின் நெஞ்சமே அன்னையின் நெஞ்சமாகப் பெற்றால், அவள் நொந்துகொள்ளத்தக்கது ஒன்றுமில்லைதான்" என்று தலைவி சொன்னாள்.

இங்ஙனம் சிறந்த கருத்துக்கள் இப் பாட்டிற் கருக்கொண்டிருக்கின்றன.

**குறிப்புரை** —வெய்யனாயின் - விரும்பினவனாயின், வெய்யையாயின் - விரும்பினையாயின். நோதக்கது - நோவத்தக்கது. மன் என்பது, திருமணம் நடைபெறும் என்னும் ஆக்கக் குறிப்பு உணர்த்துவதற்காக நின்றது. (௮௩)

## பெருந்தன்மை இன்னதென்பது

[வன்மை எப்போதும் மென்மையைப் போற்றும்பொருட்டே உள்ளது. மென்மை அவ் வன்மையின் ஆதரவை ஏற்று யாண்டும் பயன் விளைக்கும்பொருட்டே உள்ளது. மக்களிலும் சிற்றுயிர்களிலும் பருப்பொருள்களிலும் இவ் விருபோராற்றலும் பல வேறு வகைகளில் இயக்கங் கொள்கின்றன. 'பெருந்தன்மை' என்பது இவ் விரண்டின் இணக்கமே. இச் செய்யுளில் அப் பெருந்தன்மை மிக அழகாகப் புலப்படுத்தப்படுகின்றது.]

சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்
கண்ணியின் மலரும் தண்ணறும் புறவில்
தொடுதோற் கானவன் கவைபொறுத் தன்ன
இருதிரி மருப்பின் அண்ணல் இரலை
செறியிலைப் பதவின் செங்கோல் மென்குரல்
மறியாடு மருங்கின் மடப்பிணை அருத்தித்
தெள்அறல் தழீஇய வார்மணல் அடைகரை
மெல்கிடு கவுள துஞ்சுபுறங் காக்கும்
பெருந்தகைக்கு உடைந்த நெஞ்சம் ஏமுறச்
செல்க தேரே, நல்வலம் பெறுந!
பசைகொல் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி
துறைவிட் டன்ன தூமயி ரெகினம்
துணையொடு திளைக்குங் காப்புடை வரைப்பில்

செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி
இன்றுவரல் உரைமோ சென்றிசினோர் திறத்தெனா
இல்லவர் அறிதல அஞ்சி மெலலெனா
மழலை இனசொல் பயிறறும
நாணுடை யரிவை மாணநலம் பெறவே.

—அகநானூறு, ௩௪.

எடுதத வேலை முடிநதது, உடனே தலைவியைக காண விருமபினான தலைவன எதனை பொருட்டு? அவள, நலம பெறறபொருட்டு. துணையோடு கூடி வாழும வாழககையில இஙஙனம ஒருவா நலததை ஒருவா கருதுதலால உணடாகும உளநெகிழசசி ஒரு பெரிய பயன் ஆகும.

தலைவன தேரை விரையச் செலுததிககொண்டு முலலைக் கானததின வழியாக வருகினறான அஙகே ஓா அரிய காட்சி அவன் கணமுன தென்படுகின்றது

அக் கானததில சிறிய கரிய பிடவஞ் செடிகள் நிரமபி யிருக்கின்றன. அவை சிறு சிறு புதாகளாயிருககினறன. காாகாலபாதலாற பூக்கள நிறைய மலாநதிருககினறன. அதனால அப் புதாகளின தலை வெண்ணிறமாயிருககினறது. வரிசையாக உளள செடிகள இஙஙனம மலாநதிருபபதனால தொலைவுப பாாவைககு அக காட்சி ஒரு மாலைபோலத் தோனறுகினறது. அக கானமாகிய நிலமகள மாலைகள அணிநதிருபபதுபோலவே, அவை தோறறும. அஙஙனம், மலாநத குளிாநத மணங்கமழுங கானமா யிருககினறது தலைவன வருகினற கானம.

அங்கே ஆண் மான்கள், காலிற செருபபணிநத வேட்டுவனது பிளவுளள கவைக் கொம்பையே தம தலையிற சுமநதிருபபதுபோல, கரிய முறுககுண்ட கொமபினையுடையவா யிருககினறன. தம குட்டிகள் நுழைநது விளையாடுகின்ற வயிறறின பக்கததை உடையனவாயிருககின்றன மெலலிய பெண் மானகள. மழை பெய்த வளததினால அறுகம புறகள், நீரேறிய சிவந்த தண்டுகளையுடையனவாயும்,

செறிந்த இலைகளையுடையனவாயும், மெல்லிய கதிர்களை யுடையனவாயும் வளர்ந்திருக்கின்றன. பக்கத்தில் தெளிந்த நீர் பொருந்திய ஒழுங்கிய கருமணல் அமைந்த நீரோடை யின் கரைகள் இலைகள் அடர்ந்து நல்ல காட்சியுடன் காணப்படுகின்றன

ஆண்மான்கள் தம் பெண்மான்களுக்கு அந்த அறு கங்கதிர்களை ஊட்டி, அங்ஙனம் ஊட்டினமையால் அவை பசியாறிக் களைதீர்ந்து அக் கரையருகிற் படுத்து உறங்க, அதன்பின் தாம் புல் உண்டு, அப் பிணைமானின் பக்கத்தில் அசைபோட்டபடியாய் நின்றுகொண்டு, உறங்குகின்ற அவற்றின் புறவுடைப்புகளைப் பாதுகாக்கின்றன.

இப் பெருந்தகைமைக்குத் தலைமகன் நெஞ்சம் கனி கின்றது. அப்போது தலைமகன் தன் தேர்ப்பாகனை நோக்கி, "தேரை விரைவாக விடவல்ல வெற்றியையுடையோய்! எனது நெஞ்சம் இம் மான்களின் பெருந்தன்மைக்கு உடைந்து கனிகின்றது இத்தகைய நெஞ்சம் இன்புறவும், அங்கே இல்லத்தில் வருந்திக்கொண்டிருக்கும் தலைவி மாட் சிமையான அழகு பெறவும் தேர் விரைவாகச் செல்லட்டும்" என்று சொல்லுகின்றான்.

அப்போது, தலைவனுக்குத் தலைமகளின் நிலைகள் நினை வுக்கு வருகின்றன. பின்வருமாறு நினைக்கிறான் :

'தலைமகளின் காவலுடைய இல்லத்தில் அன்னப் பறவைகள் தம் துணையோடு மான்களைப்போல விளையாடிக் கொண்டிருக்கும். தலைவிக்கு அது பிரிவாற்றாமை நினைவை எழுப்பும். உடனே கழுத்து வளை செந்நிறமாயுள்ள பசிய கிளியைத் தனது முன் கையில் ஏந்திக்கொண்டு, 'பிரிந்து சென்றவராவகையில் நீ ஏதாவது சொல்லுவாயானால், அவர் இன்று வருவாரென்று சொல்லு' என்று மழலைத் தன்மை வாய்ந்த இனிய சொல்லைச் சொல்லும்படி பழக்குவாள். அதுவும் வீட்டிலுள்ளவர்கள் அறிதல் அஞ்சி மெல்லென அதனைப் பழக்கும் நாணுடைய அரிவை அவள்!'

தலைமகனுக்கு இங்கே கலையும் பிணையும் வருத்த,

அங்கே தலைமகளுக்கு அன்னமும் அதன் துணையும் வருத்துவவாயின.

இப் பாட்டில் வரும் காட்சிகளும் நினைவுகளும் மாட்சிமையானவை.

குறிப்புரை — கண்ணியின் - மாலையைப்போல் நறு - மணங் கமழ்கின்ற; புறவில் - காட்டில். தொடு தோல் - செருப்பு கவை - கவைக்கோல், பிளவுள்ள கோல் பொறுத்தன்ன - சுமந்தாற்போல, அண்ணல் இரலை - ஆண்மான் பதவு - அறுகு கோல் - தண்டு. குரல் - கதிர் மறி - குட்டி ஆடு - விளையாடுகின்ற அறல் - நீர். தழீஇய - பொருந்திய வார் - ஒழுகுகின்ற; மணல் - கருமணல்; அடை கரை - இலைகள் அடர்ந்த கரை அடை - இலை. மெலங்கிடு - மெலவுகின்ற, அசைபோடுகின்ற கவுள் - வாயை யுடையனவாய, புறம் - இங்கே உடம்பு என்னும் பொருண்மையில் நின்றது ஏம உற - இன்பம் அடைய, 'புறவில் இரலை பிணை அருந்தி மெலங்கிடு கவுளவாயத் துஞ்சு புறங் காக்கும் பெருந்தகைக்கு உடைந்த நெஞ்சம் ஏமுற' எனவும், 'எகினம் திளைக்கும் வரைப்பில் கிளி ஏந்தி மெல்லெனச் சொல் பயிற்றும் அரிவை நலம்பெற' எனவுங் கூட்டி, 'நல்வலம் பெறுந செலக தேரே' என்று தலைவன் கூறியதாக முடிக்கவேண்டும். எகினம் - அன்னம் திளைக்கும் - விளையாடும். காப்பு - காவல்; வரைப்பு - இங்கே இல்லம் தார் - கழுத்து வளை. இன்று வரல் உரை - இன்று வருதலைச் சொல்லு மழலை - அறிவு முற்றாத இளஞ்சொல் அரிவை - பெண் 'பசைகொல் மெலவிரல் பெருந்தோட் புலைத்தி துறைவிட்டன்ன' என்பதற்கு, ஆடையின் பசையைக் கரைக்கும் மெல்லிய விரல்களையும் பெரிய தோள்களையும் உடைய ஆடையொலிக்கும் புலைத்தி, அப் பசையை நீர்த்துறையிற் கரைத்து விட்டாற்போன்ற என்பது உரை விட்டாற்போன்ற வெண்ணிறமுடைய அன்னங்கள் என்றபடி தூ மயிர் எகினம் - அழுக்கற்ற மயிரை யுடைய அன்னம். (அச)

## இன்பம் விளையும் இடம்

[இன்பம், பணியில் விளைவது, அதாவது அறமுறைமையோடுகூடிய பணியில் விளைவது. இப் பணியையும் பயனையும் பெற்றோரது வாழ்க்கை இன்ப நிலையமே ஆண்மையும் பெண்மையும் பண் பெனப்படும், அவற்றின் ஒழுங்குடைமையே பயனென்னும் அறனும். இன்பத்தை நாடுவோர் இவற்றை எய்துதல்வேண்டும்.

நாளிடைப் படின்னென் தோழி வாழாள,
தோளிடை முயக்கம நீயும வெய்யை,
கழியக் காதல ராயினும சானறோர
பழியொடு வரூஉம இன்பம வெஃகார,
வரையின எவனோ வானதோய வெற்ப!
கணககலை இருக்கும கறிஇவர சிலம்பின
மணப்பருந காமம புணர்ந்தமை அறியார
தொனறியல மரபின மனறல் அயரப,
பெணகோள ஒழுக்கம கணகொள நோக்கி
நொதுமல விருந்தினம போலஇவள
புதுநாண ஒடுக்கமும காணகுவம யாமே.

—அகநானூறு, கக௨ : கூ-கக.

இரண்டு இடங்கள் இன்பம விளையும் வயல்களாக இங்கே எடுத்துக் காட்டப்படுகின்றன. ஒன்று அன்பிலே இன்பம விளையுமாயினும, அந்த அன்பு அறத்தோடு கூடாததாயின இன்பம விளையாது. மற்றொன்று அப்படியே அந்த அன்பு உண்மையான ஆண்மையோடு கூடாத போதும உண்மையான பெண்மையோடு கூடாதபோதும உயர்ந்த இன்பம விளைவதாயில்லை.

ஆடவர்க்கு அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என னும ஆண்மைப்பியல்புகள சிறந்திருக்கவேண்டும பெண் டிர்க்கும அச்சம, நாணம், மடம, பயிர்ப்பு எனனும பெண மைக் குணங்கள் சிறந்திருக்கவேண்டும இருவரும அறத் தோடு கூடியவர்களாகவும இருக்கவேண்டும். அந்த இடத்தில ஒத்த அன்பும தலைப்படுமானால, அங்கேதான் சிறந்த இன்பம விளைவதாயிருக்கும. அத்தகைய உளளமே இன்பம விளை நிலமாம. நுட்பமும திட்பமும் வாய்ந்த இவ் வுயர்ந்த பேருண்மை இப் பாட்டில மிகவும அழகாக எடுத்துக் காட்டப்படுகின்றது. வாழக்கையில் எல்லாருந் தெரிந்து ஒழுகி இன்புறவேண்டிய உயர்ந்த கருத்துக்கள இவை. நாகரிக மெனபதும் இது

தலைவன் விரைவில் மணந்துகொள்ளாமல் களவிலேயே ஒழுகி வந்தான் நீண்டகாலம். இங்ஙனம் களவில் ஒழுகுதல் ஆகாது. இருதிறத்தார்க்கும் அது துன்பம், அலர் எழுந்து பழியுமாகும் அது முறைமையுமன்று. ஆகவே தோழி தலைவனை நெருங்கிச் சில சொல்லுகின்றாள்

" நீ சில பொழுது வாராமல் நாள் இடைப்பட்டால் தோழி உயிர்வாழமாட்டாதவளாயிருக்கின்றாள். அவள் தோள்களினிடையில் இடைவிடாது முயக்கங்கொள்ளுதலை நீயும் விரும்பினையாயிருக்கின்றாய். இத்தகைய போக்குக்கு, வரைந்துகொள்ளுதலே சிறந்தது. வானளாவிய மலைநாட! அங்ஙனம் வரைந்துகொள்வதற்கு என்ன தடை?

" களவொழுக்கத்தால் வரும் இன்பம் பழியோடு கூடிய இன்பம்; அது முறைமையன்று. எதனையும் முறையோடு செய்து இன்புறல்வேண்டும் மிக்க அன்பினராயினும் தக்கோர், பழியோடு வருகின்ற இன்பத்தை விரும்பார். இன்பம், முறைமையிலன்றோ உளது!

" தலைவ, நீவிர் வரைந்துகொள்ளுவதில் எம்போல்வார்க்கும் ஒரு வகையில் இன்பம் உண்டு. இன்பம், நாண் முதலான பெண்மைப் பண்புகளில் ஒளிந்துகொண்டிருக்கின்றது. அப் பண்புகள் எழும்போது இன்பம் விளையும்.

" நீ இப்போது வரைந்துகொள்ள முயன்றால், மிளகு கொடிகள் படர்ந்தேறுகின்ற மலையின் பக்கத்தில் கூடுதற்கரிய கூட்டம் நீவிர் கூடினமையை நம் உறவினர் அறியாராய், பழைமையாக நடந்து வருகின்ற முறைமைப்படி திருமணம் நடத்துவர். அப்போது அம் மணநிகழ்ச்சி ஏதோ புதிதாகப் பெண் கொள்கின்ற ஒழுக்கம்போலத் தெரியும். தோழிகளான நாங்களும் முன்பின் அறியாத அயலாரான புதியோர்போலவும் இருந்து, இவள் திருமணத்தைக் கண்கொள்ள நோக்குவோம். அப்போது எங்களுக்கு மகிழ்ச்சி தருவது ஒன்றுண்டு. நம் தலைவியும் அப்போது புதிய நாணம் உடையவள்போல ஒடுங்கியிருப்பாள் அத்தோற்றத்தை யாம் காண்போம். நாணம் முதலிய பெண்மைப்

பண்புகளிலேயே இன்பம் விளைகின்றதாகலின, அப் புது நாண் ஒடுககம எஙகட்கு மிக்க மகிழசசி விளைப்பதா யிருக்கும" எனபது.

இனபம விளையும் இடங்களைத தோழி கூர்மையாய்த் தெளிவுபடுததினமை அழகாயிருககிறது.

குறிபபுரை:—முயககம - கூட்டம வெய்யை - விருப்ப முடையை கழிய - மிகுதியாக வெஃகாா - விருமபாா வரையின - திருமணஞ செயதுகொளவதறகு; எவன் - எனன தடை கணம - கூட்டம இகுசகும - இழுததாறபோல் ஒலிககும. கறி - மிளகுக் கொடி, இவா - படாநது ஏறுகினற, சிலமபு - மலை மணப்பு - கூடுதல அறியாா - அறியாராய தொனறு - பழைமையாக. இயல் - நடைபெறுகினற மரபு - முறைமை. மனறல - மணம, அயா - செயய கோள் - கொள்ளும நொதுமல - அயலாரான; விருநதினம - புதியேம. புதுநாண எனறது, கூட்டததினிடையிற் புதிதுதோனறிய நாணம, முன நாண கொளளாதவள்போலக கொள்ளும நாணம் என்று இருவகையாக உரைததுககொள்ளவேணடும. நாணததால ஒடுககம உணடாதலின, 'நாண ஒடுககம' எனபபட்டது. (அரு)

## அனபினிடையிலுங கடமை முனைப்பு

[வாழககையில முறைமை வேணடும, அதறகு உரிமை இனறியமை யாதது முறைமையும உரிமையும வாழககையின் இரணடு உயிாபபுறுபபுககள எனல மிகவும பொருநதும. இப பேறு அமை தறகுப பொருள முதலியன வேணடும காதலும வாழககையும இம முறைமை யுரிமைகட்கு ஆககமாயிருததலே மெய் வாழககையாம.]

'அறனகடைப படாஅ வாழககையும் என்றும்
பிறனகடைச செலாஅச செல்வமும இரண்டும்
பொருளி னாகும புனையிழை' எனறுநம
இருளோ ரைமபால நீவி யோரே,
நோய்நாம உழககுவ மாயினும தாமதம்
செய்வினை முடிகக, தோழி!

—அகநானூறு, களிறு கஎசு

எவ்வளவு அன்பினும் கடமையை மறப்பது நன்றன்று. கடமை என்பது அறம். தலைவி அன்பின் களஞ்சியம். ஆயினும் அவளும் கடமையில் வழுவுவோள் அல்லள். அவள், தன்னை விழுங்கும் அன்பையெல்லாம் அடக்கிக்கொண்டு கடமைக்கு முதன்மை கொடுத்துப் பேசும்போது, நெஞ்சம் எவ்வளவோ உருகுகின்றது.

தலைவன், பிரியமுடியாமற் பிரிந்து, பொருள் காரணமாக வெளிநாடு சென்றான். தலைவிக்கு ஆற்றாமை மேலிட்டது. தோழி, "தலைவர் இங்ஙனம் பிரிந்து போய்விட்டாரே" என்று சற்று மனம் வெறுத்தாற்போலச் சொன்னாள். அதற்குத் தலைவி, அன்பின் குறைந்த உள்ளத்தோடும் கடமையினால் நிறுத்த நினைவோடும் பின்வருமாறு சொல்லுகிறாள் :

"அறத்தினின்றும் கடைப்பட்டுவிடாத நல் வாழ்க்கையும், என்றும் பிறர் கடைவாயிலிற் சென்று இரவாத நலவளமும் என இரண்டும், தலைவி! செல்வத்தினாலாகும்" என்று பொருளின் முதன்மையை நமக்கு விளக்கிச் சொல்லி, நம்மைப் பிரியமாட்டாத அருளினால் நமது இருண்ட அழகிய கூந்தலைத் தடவிக்கொடுத்தவர், பிரிவினால் நாம் துன்பத்திற் பெரிது வருந்துவோமாயினும், தமது செயல்வினையை முடிக்கட்டும் தோழி!"

தலைவியின் இச் சொல், பெருந்தன்மையும், அன்பின் நிறைவும் கடமை முனைப்பும் உடையதாய், மிக அருமையாய் அமைந்திருக்கின்றது. மனைமாட்சிக்கு இது நல்ல எடுத்துக்காட்டாகும்.

குறிப்புரை — புனை இழை - தொழில் திறமையோடு செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்த தலைவீ! இருள் - இருண்ட. ஏர் - அழகு. ஐம்பால் - கூந்தல், ஐந்து வகையாக முடிக்கப்படுவது என்பது கருத்து. நோய் - துன்பம். உழக்குவமாயினும் - பெரிது வருந்துவோமாயினும். செயல்வினை - செய்யத்தக்க செயல்; முடிக்க - முடிக்கட்டும். 'ஈவியோரே' என்பதில் ஏ அசை. (அக)

## நட்பு இனன தனமையில் இருக்கவேண்டு மெனபது

[பொருட செலவம் வேணடும, ஆனுல அச செலவம நட்பின அடிப படைகொணடே அடைதறகுரிய தெனபதையும அறிதலவேண டும காரணம நட்பு, பயன செலவம எனவே, நட்புததான முதனமையாகக கவனிததறகுரியது செலவம சறறு முன பின கிடைபபதாயினும நட்புககுத தினைததனையும இழபபு வாராமற காததுககொளள வேணடுவது வாழககை வெறறிககு மிகவும இனறியமையாதது.]

ஒருநாள செலலலம, இருநாள செலலலம,
பலநாள பயினறு பலரொடு செலலினும,
தலைநாள போனற விருப்பினன் மாதோ;
அணிபூண அணிநத யானை இயலதேர்
அதியமான பரிசில, பெறூஉங காலம
நீட்டினும நீடடா தாயினும, யானைதன
கோட்டிடை வைதத கவளம போலக,
கையகத தது; அது பொயயா காதே;
அருநதே மாநத நெஞசம!
வருநத வேணடா வாழகவன் தாளே.

—புறநானூறு, ௧0௧.

ஒரு நாள், 'ஔவையார்' வெளியே புறபபட்டார்.

அவா காலததில, 'அதியமான' என்னும பெயருடைய ஒரு வள்ளல வாழநதிருநதான். ஔவையார், சிறநத புலவா; அறநெறியுளளவா. அதனுல அதிய மானுககு அவரிடததில உயாநத மதிபபிருநதது. அநத அமமையாா நெடுங காலம உயிா வாழவது உலகத்துக்கு நலலது எனறும, அவருடன அணுககமாகப பழகி அவ ருடைய பெரிய குணஙகளில ஈடுபடுவது முதனமையா னது எனறும, அவா நேசம கிடைபபது தனககும தன் அரசுககும் பெருமை தரும என்றும அவன நினைததிருந் தான்.

பயனை எதிாபாாக்கும நேசமானுல், அந்த நேசம் ஒரு

காலத்தில் மிகுவதும் பின் சுருங்குவதுமாக இருக்கும். பயனை எதிர்பாராமல் குணங்களை நேசிக்கும் நேசம், எப் போதும் ஒரே தன்மையாய நிலையாயிருக்குமன்றே! ஆகவே, ஔவையாரும், அதியமான எண்ணங்களுக்கும் பெருந்தன்மைக்கும் மகிழ்ந்து அவன் நேசத்துக்கு இடங் கொடுத்து வந்தார்.

அதியமான் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. ஔவை யாரைக் காணும்போ தெல்லாம், அவரோடு ஆரவமாய் அளவளாவியிருந்து, அவர் அகமகிழும்படி ஏற்ற பரிசு களும் வழங்கி அனுப்புவான். சில நேரங்களில், அவரை உடனே பிரிய முடியாமல், சற்றுக் காலந் தாழ்த்துப் பரி சில் அளிப்பதும் உண்டு. ஔவையாரும் அவனை மிகவும் நேசித்தார். இப்படிப் பல நாள் அவர்கள் அணுக்கமாயப் பழகி வந்தார்கள் பழகப் பழகப் பால் புளிக்கவில்லை, அதற்கு எதிராக இனித்தே வந்தது.

அன்று புறப்பட்டவுடன் ஔவையார் நேரே அதிய மானிடம் போகக் கருதி வழி நடந்தார் வழியில், அதிய மானின் பெருந்தன்மையும் அவன் தம்மிடங் காட்டும் பேரன்பின் செயல்களுமெல்லாம் எண்ணி எண்ணி அவர் அறிவு இன்புற்றது.

அப்போது அவர் மனம், "ஆமாம்; சில காலங்களில் அவன் நமக்கு உடனே பரிசில் தருவதில்லை. நெடுநேரம் காலம் நீட்டித்துவிடுகிறான்" என்று சிறிது சலிப்புடன் நினைத்தது.

உடனே, அவர் அறிவு அந்த மனத்தைப் பார்த்து, "ஆ, என்ன நினைத்துவிட்டாய! பரிசில் அருந்த ஏமாந்த நெஞ்சமே! நீ வருந்தவேண்டாம்.

"நாம் ஒரு நாளா போகிறோம், இரண்டு நாளா போகிறோம்; இல்லையே பல நாளாயப் பழகுகிறோம்; அதுவும் சில நேரங்களில், தனியாய்ப் போகாமல், அன்பர் பலரோடும் போகிறோம் அப்படிப் போனாலும், அவன் முதல் நாளைப்போலவே அன்புள்ளவனா யிருக்கிறான்

"அதியமான் எப்படிப்பட்டவன்! அணிகலங்கள் அணிந்த யானைகளையும், அழகான தேர்களையும் உடைய பெரிய மனிதன! அப்படிப்பட்டவன் பரிசிலன்றோ நீ பெறுவது!

"அதனைப் பெறுகின்ற காலம் சற்று நீட்டித்தாலும் நீட்டியாவிட்டாலும், அஃது உன் கையிலிருப்பதுபோலத் தான். அது தவறாது யானை தன் கொம்புகளினிடையில் எடுத்து வைத்துக்கொண்ட உணவு எங்காவது தப்பி விடுமா? அதுபோல என்று நினைத்துக்கொள்.

"நீ சற்று வருத்தமாய் நினைத்துவிட்டமையால், அந்த நினைவு அவன் முயற்சிகளுக்குச் சிறிது ஊறு தந்தாலுந் தரும். அன்பனுக்கு அப்படி ஆகலாமா? அது தீர, அதற்கு எதிராக, 'அவன் நன் முயற்சிகள் வாழ்க' என்று வாழ்த்தி விடுகிறேன்" என்று உருக்கமாகச் சொல்கிறது

இப்படி ஒளவையாரின் மனமும் அறிவும், தடையும் விடையும் செய்ய, அவர் அதியமானை அடைந்தார் வழக்கம்போல அவன் அவரை அகமும் முகமும் மலர்ந்து வர வேற்று மகிழ்ந்து அளவளாவினன். மகிழ்ச்சியோடு மகிழ்ச்சியாய் ஒளவையார், வழியில் நடந்ததையும் அவனிடம் சொல்லிவிட்டார். சொல்லவேண்டுமா, அன்று அவர்கள் களிப்பை ஒளவையார்க்கு முன் நாட்களைவிடப் பெரிய பரிசில, ஆனல், பின்னுஞ் சிறிது காலம் நீட்டித்தே கிடைத்தது

ஒளவையார் அதியமானின் அன்பின் திறத்தை எவ்வளவு நன்றாக இந்தப் பாட்டில் எடுத்துக் காட்டியிருக்கின்றார். சிறந்த செல்வர்கள் சிறந்த புலவர்களோடு நட்புக் கொள்ளுங் காலமன்றோ, நாடு சிறந்த இன்பங்களை அடையும் நாள்!

குறிப்புரை—ஒரு நாள் போகவில்லை, இரண்டு நாள் போக வில்லை, பல நாளாய்ப் போகிறோம் என்பதற்காக 'ஒரு நாள் செல்லலம் இருநாள் செல்லலம்' என்று எதிர்மறையாய் வந்தது. தலைநாள் - முதல்நாள். விருப்பினன் - அன்பினன், 'மாதோ',

இதற்குப் பொருளில்லை, சும்மா ஓசைக்காக வந்தது. இப்படி வருவதை 'அசை' என்பார்கள். கோட்டிடை - கோடு இடை, கோடு-கொம்பு கவளம் - யானையின் ஒரு வாய் உணவுக்குப் பெயர். கையகத்தது - கையிடத்தது அருந்த எமாந்த என்று பிரித்துக் கொள்ளவேண்டும், அருந்த - உண்ண, நுகர எமாந்த - விருப்பங்கொண்ட நெஞ்சம் - நெஞ்சமே என்னும் கருத்தில் வந்தது. 'வாழ்க அவன் தாள்' என்று பிரித்துப் பொருள் செய்யவேண்டும். தாள் - முயற்சி (அஎ)

## செல்வரும் கல்வியாளரும் நடந்துகொள்ளவேண்டிய முறை

[வாழ்க்கைக்குச் செல்வம் இன்றியமையாததே, ஆனால், கல்வி அதனினும் இன்றியமையாத தென்பதைக் குறித்தல் வேண்டும் செல்வத்தை இழந்தும் இருக்கலாம், கல்வியை இழந்திருத்தல் மனிதப் பிறப்பிற்குச் சிறப்பாகாது கல்வி என்பது உணர்வின் தெளிவு அதனையுடையோர் புலவர் செல்வர்க்கு அவர் அடிமைப்படின், அத்தெளிவு மழுங்கி இருவரும் கெடுவர், உலகமும் கெடும் இச் செய்யுளில் அம் முதன்மை நன்கு கதிர்கான்று ஒளிர்கின்றது]

இரவலர் புரவலை நீயும் அல்லை,
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்,
இரவலர் உண்மையும் காண்இனி, இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண்இனி, நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்துயாம் பிணித்த
நெடுநல் யானைஎம் பரிசில்!
கடுமான் தோன்றல்! செல்வல் யானே.

—புறநானூறு, ௧௬௨.

நாட்டிலே சிலர், அறிவு நிலையில் உழைப்புள்ளவர்கள், பலர், பொருள் நிலையில் உழைப்புள்ளவர்கள். அறிவு நிலையில் பெரிய நிலையுள்ளவர்கள் புலவர்கள், பொருள் நிலையில் பெரிய நிலையுள்ளவர்கள் மன்னர்கள். அறிவு நிலையில் ஆழ்ந்து செல்லும் புலவர்களுக்குப் பொருள் தொகுக்கும் ஊக்கமும், அதற்கேற்ற போக்குகளும் அமைவது அருமை, அப்படியே, பொருளே நோக்கமாயிருப்பவர்க்கும் கல்வி

நிலை அமைவது அருமையா யிருககிறது. ஆதலால, புலவர் கள தாம தேடிய அறிவின் கருததுககளைச செலவாகளுக குப, செலவாகள தாம தேடிய செலவப பொருளகளைப் புலவாகளுக்கும் உதவிக்கொண்டு நலமபெறவேணடும. இநத உதவி அன்பாகவும கணணியமாகவும நடைபெறும் போதுதான், நாடும நலல நிலைகளில முனனேறுகினறது

முன்னே, 'வெளிமான' என்னும மனனன ஒருவன் இருநதான் அவன புலவாகளின அருமை தெரிநதவன. பெருஞ்சித்திரனா எனனும புலவா அவனுக்கு மிகவும வேண்டியவா. ஒருநாள, புலவா அவனிடம வநதாா. எதிாபாராத வகையாய, வெளிமான அபபோதுதான படுக் கையிற போயப படுதது, உறககஙகொளளும நிலையி லிருநதான, புலவா வரவு தெரிநதது. அவனுககு உடமபு மிகவுங களைபபா யிருநதது, புலவரோடு கிளாசசியாயப பேசமுடியாத நிலைமையில, அவரெதிரில வருவதும நனறு யிலலை. தன அயாசசி தீரும வரையில புலவா காததிருபப தும முறையா யிலலை.

வெளிமானுககுத தபபி ஒருவன இருநதான. அவன் பெயா, 'இளவெளிமான' எனபது. வெளிமான் அவனை அழைதது, "புலவா தகுதியானவா, நீ அவா மனம உவபப நடநது பரிசிலகள வழஙகி அனுபபு; எனககு நேரம சரியாக இலலை" எனறு சொனனான. ஆனால, இள வெளிமானுக்கு இவை யெலலாம பிடிபபதிலலை. மேலும, கையிறுககமானவன. தன தமையன சொனன தறகாக ஏதோ சிறிதுநேரம புலவரிடம பேசியிருநதுவிட்டு, பின ஒபபுககாகச சிறிது பரிசில கொடுகக வநதான. புலவா தகுதிககு அது தக்கதாக இலலை. பெருஞ்சித்திரனாரோ, தனமான முளளவா. ஆதலால அவா, அவனையும அதனையும பொருட்படுததவிலலை. அநத அரைகுறையான பரிசிலைப் பெறறுககொளளவுமிலலை. அவா நேராயக 'குமண மனன' னிடம போனாா. அவன, புலவரின கணணியந தெரிநதவன. உடனே அவ வளளல ஒரு பெரிய நலல யானையை அவருக்குப் பரிசில வழஙகினான.

